

# இப்பொழுது எல்லாம் உங்களைப் பொறுத்திருக்கிறது

இந்தப் பருவத்தில் உங்கள் குழந்தையின் சந்தோஷமும், சுகம், எல்லாம் உங்களைத் தான் பொறுத்திருக்கிறது. அவனுக்கு இணையற்ற சந்தோஷத்தையும் சுகத்தையும் அளிக்க குழந்தைகளுக்கான ஜான்ஸனின் தயாரிப்புகளே சிறந்த சாதனங்கள். மூன்று தலைமுறைகளாக பெற்றுள்ள அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு இவைகள் தயாரிக்கப் படுகின்றன.

**ஜான்ஸன்ஸ் பேபி சோப் மற்றும் பவுடர் :**
மிகவும் தூய்மையானவை. நீத்த மணக்கக் கூடியவை. குழந்தையின் தளிர் மேனிக்கு குளிர்ச்சியையும் சுகத்தையும் அளிப்பவை.

**ஜான்ஸன்ஸ் பேபி ஆயிலும் க்ரீமும்:**
குழந்தையின் இளம் சருமத்திற்கு பாது காப்பு அளிக்க சிறந்த சாதனங்கள்.




## ஜான்ஸன் அண்டு ஜான்ஸன்

60 ஆண்டுகளுக்கு மேலாக குழந்தைகளுக்கான சிறந்த சாதனங்களை தயாரித்து வருபவர்கள்

ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிட்.

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 18
இதழ் 46

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விகாரி ஆண்டு
வைகாசி மீ 31

# பொழுது புலர்ந்தது

ராஜாஜியின் ஆசியுடன் ஒரு புதிய கட்சி உருவாகி விட்டது! நாட்டு மக்களின் எண்ணங்கள் எல்லாம் சேர்ந்து உருவெடுத்தாற் போல் "சுதந்திரக் கட்சி" உதித்து விட்டது.

ஜனநாயகத்துக்கு இரண்டு கட்சிகள் தேவை. இரண்டும் பலமுள்ள கட்சிகளாக இருக்க வேண்டும். இரண்டரை ஆண்டுகளுக்கு முன் ராஜாஜி எதிர்க்கட்சி வேண்டும் என்றார். சென்ற தேர்தலின் போதே, ராஜாஜி காங்கிரஸின் போக்கைக் கட்டுப்படுத்த ஒரு எதிர்க்கட்சி தேவை என்றார்.

காங்கிரஸ் என்றென்றும் பதவியிலிருக்க வேண்டும் என்கிற ஆசையில் கம்யூனிஸ்ட் சோஷலிஸ்ட் கட்சிகளின் கொள்கைகளையெல்லாம் களிகாரம் செய்து கொண்டு நாட்டுக்குச் சொல்லி முடியாத கஷ்டங்களை விளைவித்து வருகிறது. மக்களோ பாரத நாட்டுச் சுதந்திரப் போராட்டத்தில் முன்னணியில் நின்ற தலைவர் ஜவாஹர்லால் நேரு பிரதமராக இருக்கும்போது, அவர் கொள்கைகள் தவறு, அவர் கொள்கைகளால் கஷ்டங்களை அனுபவித்து வருகிறோம் என்று வாய்விட்டுச் சொல்லப் பயப்பட்டுக் கொண்டு சும்மா இருந்து வருகிறார்கள்; மக்களின் மௌனம் சம்மதத்துக்கு அறிகுறி என்று சர்க்காரும் அந்தப் போக்கிலேயே போய்க் கொண்டிருக்கிறது. நாட்டின் க்ஷேமத்துக்காகப் பொருளுண்டாக்கியும் வியாபாரம் நடத்தியும் வரும் குடித்தனங்களின் கஷ்டத்தையுணர்ந்த ராஜாஜி, எதிர்க்கட்சி வேண்டும் என்றார். கஷ்டங்களின் மேல் கஷ்டங்கள், வரிகளுக்கு மேல் வரிகளைத் தாங்கிக் கொண்டு சும்மா யிருந்தால், விவசாயம் குன்றி வியாபாரம் குன்றி, மத்தியதர மக்கள் வேலையின்றி வறுமையில் ஆழ்ந்து, நாட்டில் குழப்பம் விளையும். இந்தப் பெரும் உற்பாதத்திலிருந்து நாட்டைக் காக்கப் பலமான எதிர்க்கட்சி தேவை என்றார் ராஜாஜி.

இரண்டரை வருஷங்கள், ஆர அமர ஆலோசித்து, பெரியோர்கள் ஒன்று சேர்ந்து ராஜாஜி சொல்வது சரி என்று ஒரு கட்சியமைக்க முடிவு செய்திருக்கிறார்கள்; இதற்கு ராஜாஜி தமது பரிபூரண ஆசியை அளித்திருக்கிறார். இது நாட்டின் எல்லா பாகங்களிலும் உற்சாகம் உண்டாக்கியிருக்கிறது.

இந்தக் கட்சிக்கு ராஜாஜி "சுதந்திரக் கட்சி" என்று பெயரிட்டிருக்கிறார். ஏனெனில், அரசாங்கத்தாருடைய போக்கு மக்களின் சுவாதந்திரியத்தைப் பறித்து அனைவரையும் சர்க்காருக்குக் கூலிகளாக்கி, பராதீனத்தில் ஆழ்த்திவிடும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதற்கு எதிர்க்கட்சி சுதந்திரக் கட்சி.

நிலம் படைத்த விவசாயி தன் நிலத்தைத் தான் விவசாயம் செய்யாமல் பல அன்னியர்களிடம் ஒப்புவிக்கச் செய்யச் சர்க்கார் திட்டம் போட்டிருக்கிறது. தன் நிலத்தில் விளைந்ததைத் தன் இஷ்டப்படி விற்க முடியாமல் நாளாவட்டத்தில் கண்ட்ரோல்கள் முழுதும் திரும்பி வரும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. வியாபாரங்களில் எல்லாம் பிரவேசிக்கச் சர்க்கார் திட்டம் போட்டு வருகிறார்கள்.

இந்தத் தேசம் மிகப் பரந்த தேசம். படிப்பு வாசனையும், போதிய அளவு தொழில் அபிவிருத்தியும் இல்லாத தேசம். கோடிக்கணக்கான மக்கள் வாழும் தேசம். தொழில் அபிவிருத்திக்கு முன் பயிர்த்தொழிலில் இருப்பவர்களைப் பயிர்த் தொழிலிலிருந்து அப்புறப்படுத்துவதில் என்ன பயன்? கூட்டுறவின் பேரில் யந்திரங்களைக் கடனாகக் கொடுத்து நிலங்களில் கூலி வேலை செய்யும் மக்களுக்குப் பிழைப்பில்லாமல் செய்து விட்டால் கிராமங்களில் கூலி வேலை செய்து பிழைக்கும் மக்களுக்கு என்ன வழி?

இந் நாட்டில் மக்கள் எப்படியோ சிறு கடைகள் வைத்தும், நிலத்தை உழுதும் தங்களையும் தங்கள் குடும்பத்தினரையும் காப்பாற்றி வருகிறார்கள். சர்க்காரினால்

## ஓர் அறிக்கை

புது சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு கொடுக்க விரும்புகிறவர்கள்

**சுதந்திரக் கட்சிப் பதிவாளர்**
**கல்கி காரியாலயம், சென்னை -10**

என்ற விலாசத்துக்கு எழுதக் கோருகிறோம். சந்தா ஏதும் அனுப்ப வேண்டியதில்லை. பெயரும், தொழிலும், வயதும், விலாசமும் மற்ற விவரமும் தெளிவாக எழுதி அனுப்பக் கோருகிறோம்.

செய்ய முடியாத காரியத்தைத் தாங்களாகவே செய்து வருகிறார்கள்.

நாட்டில் உள்ள கோடிக்கணக்கான வேலையற்ற ஏழை மக்களுக்கு ஒரு வேலை வாய்ப்பும் அளிக்காமல், வேலையில்லாப் பிரச்னையைத் தீர்க்காமல் மக்கள் தாங்களாகவே சிறுசிறு வேலைகள் ஏற்படுத்திக் கொண்டு வாழ்வதைக் குட்டிச்சுவராக்கி நடுத்தெருவில் அலைய விடும் கொள்கைகளைச் சர்க்கார் கடைப்பிடிப்பானேன்?

'சோஷலிஸபாணி சமுதாயம்' என்று சொல்லி எல்லாத் தொழில்களையும் எல்லா வியாபாரத்தையும் சர்க்கார் எடுத்துக் கொள்ளத் துடிக்கிறார்கள். அதன் விளைவாக, சர்க்கார் காரியாலயங்களின் எண்ணிக்கையும் உத்தியோகஸ்தர்களின் எண்ணிக்கையும் பெருகியிருக்கிறதே யொழிய பாமர மக்கள், நடுத்தர மக்கள் சொல்லி முடியாத இன்னல்களுக்கு ஆளாகிறார்கள். இதைச் சர்க்கார் உணராமல் வேலை செய்கிறார்கள்!

வரியைப் பற்றிச் சொல்ல வேண்டியதேயில்லை. நேர் வரிகள் எவ்வளவு போட முடியுமோ அவ்வளவு போட்டு விட்டார்கள். இனி மூடுவரிகள் போடப் போகிறார்கள். அதாவது மறைமுகமாக உற்பத்தி வரிகளும், வியாபாரத்தைத் தாங்களே எடுத்துக்கொண்டு; அந்தச் சுயபோகத்தின் பயனாக விலைகளை ஏற்றி லாபம் சம்பாதிக்கப் பார்ப்பார்கள். இவையெல்லாம் மூடு வரிகளேதான். வரிப்பளுக்களைத் தாங்க முடியாது என்னும் அழுகுரல் கிளம்பி வரும்போது இன்னும் இரண்டாயிரம்கோடி ரூபாய் வரி மூலம் வசூல் செய்யலாம் என்று சர்க்கார் திட்டம் போடுகிறார்கள்.

மக்களின் இந்தக் கஷ்ட நிலையைச் சர்க்காருக்கு உணர்த்தும் பொறுப்பை இன்று நாட்டிலுள்ள எந்தக் கட்சியும் ஏற்றுக் கொள்ளவில்லை. அது நாட்டிலுள்ள நடுத்தர வர்க்கத்தினரின் பொறுப்பாகி விட்டது. அவர்கள் தனித்தனியாகத் தங்களுக்குள் சொல்லிக் கொண்டால் என்ன பயன்? ஒன்று சேர்ந்து, ஒரு கட்சியாக நின்று சொல்ல வேண்டும். அப்போதுதான் பயன் உண்டு.

நடுத்தரவர்க்கத்தினர் என்னும் போது, நிலத்தில் உழுது சாகுபடி செய்வோர், சிறு நிலச்சுவான்தார்கள், மளிகைக்கடை, ஜவுளிக்கடை, காய்கறிக்கடை, வெற்றிலை பாக்குக்கடை முதலிய சிறு கடைகள் வைத்து வியாபாரம் செய்வோர் அனைவரும்சேர்ந்து ஒருகுரலில் பேசவேண்டும்.

இதையேதான் ராஜாஜி பல கூட்டங்களில் வற்புறுத்தி வருகிறார். இச் சிறு வியாபாரிகளும் விஷயமறிந்த எல்லாரும் முக்கியமாகக் கல்வியறிவு பெற்றவர்களும் புதிய கட்சியில் சேர்ந்து பலமளிக்கும்படி சென்ற ஞாயிற்றுக்கிழமை லட்சுமிபுரம் இளைஞர் சங்கத்தில் பேசுகையில் கேட்டுக் கொண்டார்.

பாரத நாட்டின் சுதந்திரப் போராட்ட காலத்தில் மேற்கூறிய சிறு வியாபாரிகளே தேசத் தலைவர்களுக்கு உறுதுணையாக நின்றார்கள். அதே போல், இன்றும் தனிகபர்களை விழுங்கப் பார்க்கும் சர்க்காரை எதிர்த்து, சுதந்திரத்தைக் காப்பாற்ற அனைவரும் முன் வர வேண்டும்.

இன்று காங்கிரஸ் கட்சியில் உள்ளவர்கள் பெரும்பாலோர், காங்கிரஸ் சர்க்கார் போகும் போக்குப் பிடிக்காமல் மனம் சோர்ந்திருக்கின்றனர். ஆனாலும் காங்கிரஸ் கட்சியை விட்டுவிடத் தயங்குகிறார்கள். காங்கிரஸ் கட்சியின் போக்கு காந்தீயத்தை விட்டு கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட் கட்சிகளுக்குத் துணையாகப் போன பின் தயங்குவதற்குக் காரணமில்லை.

புதிய சிந்தனையில் ஆர்வமுள்ளவர்கள், தங்கள் வாழ்வை வளப்படுத்திக் கொள்ள விரும்புகிறவர்கள், என்றும் சர்க்காருக்கு அடிமையாக வாழ விரும்பாத சுதந்திர உணர்ச்சி பெற்றவர்கள் சுதந்திரக் கட்சியில் சேர்ந்து தங்கள் உரிமையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அதுவே பழைய காங்கிரசுக்குச் செய்யும் பணி.

## நெல்லை மாவட்டச் சிறுகதைப் போட்டி

ரூ. 200 முதல் பரிசு பெற்ற கதை ஜூன் 21-ந் தேதி இதழில் பிரசுரமாகிறது

பரிசு பெற்றவர்: **கே. பி. கணபதி** (மாறன்)

H. 11, பாரக்ஸ், புத்தூர், திருச்சி

ரூ. 100 இரண்டாவது பரிசுபெற்ற கதை ஜூன் 28-ந் தேதி இதழில் வெளியாகிறது

பரிசு பெற்றவர்: **கோமதி சுப்பிரமணியம்**

37, மார்சக்பேட்டை, திருச்சி

# ஜாமீன் இன்றிக் கடன்!

தொழில் மந்திரி திரு ஆர். வெங்கடராமன் வளவனூரில் ஒரு முக்கியமான சமாசாரத்தை வெளியிட்டிருக்கிறார்.

கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ந்தவுடனே அடமானமும் வேறு ஜாமீனும் பெறாமல் சர்க்காரால் கடன் தரப்படும் என்று பிரசாரம் செய்திருக்கிறார். வரி விதித்து வசூலித்த பொதுப் பணத்திலிருந்து கட்சியைப் பலப்படுத்தப் பணத்தை வாரி வீசி மக்களை வசப்படுத்தப் பார்க்கிறார்கள்.

இதற்காக வேண்டி 13 இடங்களில் 20 கூட்டுறவுச் சங்கங்கள் தேர்ந்தெடுத்து 52 லட்ச ரூபாய் ஒதுக்கப் போவதாகவும், ஒவ்வொரு கிராமமும் சுமார் நான்கு லட்ச ரூபாய் பெறும் என்றும் சொன்னார்.

இந்தத் திட்டத்தில் ஒன்றும் புதியதில்லை. சென்ற 50 வருஷங்களாகவே கிராமக் கூட்டுறவு சங்கங்களுக்கு கோ-ஆபரேடிவ் பாங்குகள் ஏராளமாகக் கடன் கொடுத்து வந்திருக்கின்றன. இப்பொழுது போட்டிருக்கும் திட்டத்தின் பொருள் என்னவென்றால், கோ-ஆபரேடிவ் பாங்குகள் செய்துவந்த தொழிலில் சர்க்கார் வரிப்பணத்தைக் கொண்டு புகுவதுதான் புதிய விஷயம்.

சென்ற வருஷம் சென்னை சர்க்கார் இரு போகம் விளையும் தஞ்சை ஜில்லாவில் ஒரு பரீட்சை செய்து பார்த்தார்கள். அதாவது முப்போகம் விளையச் செய்ய வேண்டும் என்று பார்த்தார்கள்.

தாசில்தாரிடம் லட்சம் லட்சமாகப் பணத்தைக் கொடுத்து, உடனே விவசாயிகளுக்கு விநியோகம் செய்யுங்கள் என்றார்கள். பாவம்! உத்தியோகஸ்தர்கள் என்ன செய்வார்கள்? கிராமத்தில் போய் நின்று தெருவில் போகிறவர்களையெல்லாம் கூப்பிட்டு, இருநூறு முந்நூறு என்று கொடுத்தார்கள். "அடமானம்! என்ன இருக்கிறது?" என்று கேட்பார்கள். "அதோ இருக்கிற குடிசைங்க!" என்பார் கிராமவாசி. உத்தியோகஸ்தர் எழுதிக் கொள்வார். கடன் கொடுக்கும் உத்தியோகஸ்தரின் வேலை முடிந்தது.

கடன் வசூலிக்கவும், சரியாகக் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று பரிசீலனை செய்யவும் வரும் உத்தியோகஸ்தர்களும் தணிக்கையாளர்களும் சென்று பார்த்தால், அங்கு குடிசையும் இராது, வீடுமிராது, ஒன்றுமிராது. கொடுக்கப்பட்ட பணம் வசூலாகாமலே போகும். இது போல் சர்க்கார் இழந்த தொகை லட்சக் கணக்கில். அடமானத்தின் பெயரில் தான் கடன் கொடுக்கப்படும் என்று சொன்னதற்கு இந்த நிலைமை என்றால், ஒரு அடமானமும் இன்றி யோக்கியப் பொறுப்பைப் பார்த்து வரிப்பணத்திலிருந்து கடன் கொடுக்கப்படும் என்றால் என்ன பயன் பெறுவோம் என்று நாம் சொல்ல வேண்டியதில்லை. நேயர்களே ஊகித்துக் கொள்ளலாம்.

பொது மக்களிடமிருந்து பல விதத்தில் கடுமையான வரிவிதித்துப் பணம் வசூலிப்பதற்குமேல் 'சிறு சேமிப்பு' என்று சொல்லி 50 ரூபாய் 60 ரூபாய் சம்பாதிப்பவர்களையெல்லாம் கொடுமைப் படுத்திப் பணம் வசூலிக்கிறார்கள். இப்படிப் பல விதங்களில் கொடுமைப்படுத்தி வசூலிக்கும் பணம் கட்சிப் பிரசாரத்துக்குப் பயன்பட்டு வருகிறது.

சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடம் "யோக்கியமானவர்களுக்கு கடன் உன் உசிதப்படி கொடு" என்று சொன்னால், எப்படிப் பட்டவர்களுக்குக் கொடுப்பார்கள் என்று சொல்லத் தேவையில்லை. உத்தியோகஸ்தர்கள் எல்லாம் மந்திரிகளுக்குக் கட்டுப்பட்டவர்கள்; மந்திரி பக்தர்கள் என்றே சொல்லலாம்.

இப்படிப் பணத்தை வாரி இறைப்பதற்குக் காரணம், நாட்டில் விளைவைப் பெருக்குவதற்காக அல்ல. வோட்டைப் பெறுவதற்காக. கட்சிப் பணத்தையோ சொந்தப் பணத்தையோ லஞ்சமாகக் கொடுக்காமல் தங்களுக்கு வேண்டியவர்களுக்குப் பொதுப் பணத்தை லஞ்சம் கொடுப்பதாகவே பொருள்படும்.

## புதுக் கட்சி

சமீபத்தில் சென்னையில் நடந்த ஒரு கூட்டத்தில் புது அரசியல் கட்சி துவக்க முடிவு செய்யப்பட்டது. இந்த யோசனைக்கு மக்கள் அளித்துள்ள வரவேற்பைப் பார்க்கும்போது ரொம்பவும் திருப்திகரமாக இருக்கிறது. இந்தக் கட்சி நல்ல முறையில் பணியாற்றத் தொடங்குவதற்குப் பூர்வாங்கமாக எவ்வளவோ செய்ய வேண்டியிருக்கிறது. பணமும் தேவைப்படுகிறது. இப் புதுக் கட்சியைத் துவக்கியவர்கள் ஒரு நல்ல பணி செய்கிறார்கள் என்று கருதுபவர்கள் அனைவரும் தங்களால் இயன்ற பொருளுதவியை B. V. நாராயண ரெட்டி, 19, ரேஸ் கோர்ஸ் ரோடு, பெங்களூர்-1 என்ற விலாசத்துக்கு அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

# என்ன சேதி?

## ஒரு மாற்று யோசனை

உணவு உற்பத்தியைப் பெருக்கவும், சமதர்மத்தைப் பரப்பவும் விவசாயிகளின் பொருளாதார நிலையை உயர்த்தவும் நாகபுரி தீர்மானத்தையும் கூட்டுப் பண்ணையையும் விட்டால் வேறு மார்க்கமில்லை; அப்படி ஏதாவது வேறு வழியிருந்தால் அதைத் தைரியமாக எடுத்துச் சொல்லட்டும் என்று ஆளும் கட்சியினர் சவால் விடுத்தனர்.

இந்தச் சவாலை ஏற்று ஒரு மாற்றுத் திட்டத்தைச் சமர்ப்பித்திருக்கிறது, அகில இந்திய விவசாயிகளின் ஸம்மேளனம். இது என்ன கேட்காத பெயராக இருக்கிறதே என்று யோசிக்கிறீர்களா? ஆமாம்; சமீப காலத்தில் உருவான ஸ்தாபனம் தான் இது. இப்போதுதானே விவசாயிகளின் சுதந்திரத்திலும் வாழ்க்கையிலும் நமது அரசாங்கம் அதனுடைய அழுக்கடைந்த கையை நுழைத்திருக்கிறது. சுதந்திரம் பறிக்கப்படும்போது அதைப் பாதுகாத்துக் கொள்வதற்காக விவசாயிகள் உரிமையை நிலைநாட்டத் தோன்றியுள்ளது இந்த ஸ்தாபனம். இது வரை மூன்று அல்லது நான்கு மகாநாடுகள் நடத்தியிருக்கிறது. 'விவசாயிகளின் குரல்' என்ற ஒரு வெளியீட்டையும் வழங்குகிறது.

பெங்களூரில் சென்ற ஜனவரியில் நடந்த மகாநாட்டில் ஆளும் கட்சியினர் விடுத்த சவாலை ஏற்று விவசாயிகளின் சார்பில், அவர்களுடைய நிலைமைக்குப் பழுது வராமல் நாட்டு நலனுக்கும் உதவும் வகையில் ஒரு விரிவான திட்டம் தயாரித்தளிக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. அதன் விளைவுதான் இந்த மாற்றுத் திட்டம்.

இந்த ஏடு அளவில் 39 பக்கங்களேயுள்ளதாயினும் விஷயத்தில் மிகவும் பெரியது. விவசாயிகளின் வாழ்க்கை முறையைச் சீர்குலைக்காமல், அவர்கள் நில உடைமையைப் பறிமுதல் செய்யாமல், அவர்கள் சுயேச்சைத் தன்மையை அழிக்காமல், 1. விவசாயத்தில் முன்னேற்றத்தை உண்டாக்கலாம். 2. உணவுப் பற்றாக்குறையை நிவர்த்தி செய்ய முடியும். 3. நிலப் பங்கீடுகளையும் உபயோகத்தையும் சீரான முறையில் செய்ய முடியும். 4. விவசாயிகளின் பொருளாதார நிலையை உயர்த்த முடியும். 5. அரசாங்கத்தின் 'கண்ட்ரோல்'களின்றியே விவசாயப் பண்டங்களை நியாயமான விலைக்கு விநியோகிக்க முடியும் என்று இந்த மாற்றுத் திட்டம் கூறுகிறது.

அதற்கு என்ன செய்ய வேண்டும் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? அதிகம் ஒன்றுமில்லை. நிலத்தைப் பங்கீடு செய்வதற்கு முக்கியத்வம் கொடுக்காமல், உற்பத்திப் பெருக்குக்கு மட்டும் கவனம் தரவேண்டும். கனரகத் தொழிற்சாலைகள் நகர்ப்புறங்களில் வேகமாக அமைப்பதைச் சற்றுக் குறைத்துக் கொண்டு, கிராமப்புறங்களில் தொழிலபிவிருத்தியை உண்டு பண்ணி, விவசாயத்தரத்தை உயர்த்த வேண்டும். விவசாயிகளின் வருமானத்தை அதிகரிக்க வகை செய்து விவசாயிகளின் உற்சாகத்தை வளர்க்க வேண்டும். கட்டுப்படியாக இயங்கக் கூடிய பண்ணைகளை, நீர்ப்பந்தம், பறிமுதல் முதலிய நடவடிக்கையின்றியே உண்டாக்க வேண்டும்.

குறைந்த அளவு மாறுதல்களைச்செய்து பெரிய அளவு பலனை விளைவிக்கும் இந்த மாற்றுத் திட்டத்தில் சிந்தனைக்குரிய விஷயங்கள் மிகுதியாக உள்ளன. நாகபுரித் தீர்மானத்தையும் கூட்டுறவுப் பண்ணையையும், சோஷலிஸத்தையும் பற்றி சதா ஜபம் செய்யும் நமது ஆளும் கட்சியினருக்கும் திட்ட அங்கத்தினர்களுக்கும் இந்த மாற்றுத் திட்டத்தை ஆழ்ந்து படிக்கும்படி சிபாரிசு செய்கிறோம்.

## சாரதா சங்கம்

அன்னை சாரதாமணி தேவியாரின் புனிதமான பெயரை நினைத்த மாத்திரத்தில் மெய் சிலிர்க்காதவர் இருக்க முடியாது. கணவர் என்று கருதித் தன்னை அடைந்த ஒரு பெண்ணைப் பார்த்து, "அன்னையே! அம்மா வருக!" என்று அழைத்தால் அந்தப் பெண்ணுக்கு எப்படியிருக்கும்? சாதாரணப் பெண்ணாக இருந்தால் நிலைகலங்கி யிருப்பாள். அன்னை சாரதாமணிதேவியார், அந்தக் கணமே அந்த உயர் நிலைக்கு உயர்ந்தார். அன்புருவாய் பராசக்தியின் தோற்றமாகத் திகழ்ந்து, தவவாழ்க்கை நடத்தி ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்வைப் புனிதமாக்கினார். அந்த அன்னை சாரதா மணிதேவியாரை நினைத்தால் சாவித்திரி, நளாயினி, திரௌபதி முதலான பதிவிரதா சிரோமணிகளுக்கும் மிஞ்சிய புனித ஆத்மா என்றே சொல்லத் தோன்றும். அத்தகைய மாது சிரோமணியின் பெயரில் மூன்று ஆண்டுகளுக்கு முன் ஒரு சங்கம் துவக்கப்பட்டது.

அந்தச் சங்கத்துக்குத் தேசமெங்கிலும் சுமார் இருபது கிளைகள் இருக்கின்றன. அந்தச் சங்கத்தில் சாதாரணப் பெண்களே முக்கியமான அங்கத்தினர்கள். பரஸ்பரம் உதவிக் கொள்வது, சமூக சேவை செய்வது, நல்ல நூல்களைப் படிப்பது என்பவையே சங்கத்தின் முக்கிய குறிக்கோள்களாகும்.

இச் சங்கத்தின் மூன்றுவது ஆண்டு விழா சென்னையில் சகோதரி சுப்புலட்சுமி அம்மையார் மேற்கொண்ட பெரு முயற்சியின் காரணமாக வெகு சிறப்பாக நடைபெற்றது. ராஜாஜி, விழாவுக்கு ஆசி கூறினார். ஸ்ரீமதி அம்புஜம்மாள் துவக்கி வைத்

தார். மத்திய உதவி மந்திரி ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன் தலைமை தாங்கினர். ஸ்ரீ எஸ். ஓய். கிருஷ்ணசுவாமி யோகி சுத்தானந்தபாரதியார், சாரதாமணி தேவியாருடன் இருந்த மிருணளினி தேவியார் முதலியோர் பேசினர்கள். ஸ்ரீமதி ஐராவதி வரவேற்புரை நிகழ்த்தினர். ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் பிரார்த்தனை கீதம் பாட விழா ஆரம்பமாயிற்று. ராஜாஜி "பாரதப் பண்பாட்டைக் காப்பாற்றித்தர வேண்டியது உங்கள் பொறுப்பு" என்றார். ஸ்ரீமதி லட்சுமி மேனன், "சங்கம் என்று கட்டு திட்டங்களை அமைத்துக் கொண்டு அவஸ்தைப் படாதீர்கள். சட்ட திட்டங்களில் கவனம் அதிகமாகப் போய் லட்சியங்கள் மறந்து போகும்!" என்று நல்ல எச்சரிக்கை செய்தார்.

பாரதப் பெண் குலத்தின் சிறப்பைக் காக்க, இத்தகைய சங்கங்கள் பணியாற்றுவது வரவேற்க வேண்டியதாகும்! இவ் விழாவுக்குத் தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் இருநூறுக்கு மேற்பட்ட அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். இச் சங்கத்தின் பணி ஆண்டுதோறும் வளர்ந்து பாரதப் பண்பாட்டைக் காப்பதாக!

## உணவு மண்டலம்

தமிழ் நாட்டை ஒரு தனி உணவு மண்டலமாகப் பிரிப்பது நியாயமல்ல என்று எழுதியிருந்தோம். மத்திய சர்க்கார் அந்த முடிவுக்கு வந்து சென்னை சர்க்காரின் கோரிக்கையை ஒப்புக் கொள்ள முடியாது என்று தீர்மானித்து விட்டது. அத்துடன் நின்றால் போதாது. ஆந்திர சர்க்கார், நெல் விற்பனையில் விலை முதலிய பல கட்டுப்பாடுகள் செய்திருப்பதன் பயனாக அந்த நெல் மார்க்கெட்டுக்கு வராமல் தேங்கியிருக்கிறது. இத்தகைய கட்டுப்பாடுகளை எடுக்கச் செய்ய வேண்டும். அப்போதுதான் அரிசிப் பஞ்சமின்றி மக்கள் க்ஷேமமாக வாழமுடியும்.

# ஆகாச வெடி

"அனுராதபுரம் தபாலாபீஸில் தபால் தலைகளுக்குத் தட்டு ஏற்பட்டு ஒரு வாரமாகியும் தீர்ந்தபாடில்லை."

— இலங்கைச் செய்தி

சமயத்தில் தலை கொடுத்து உதவ வேறு தபாலாபீஸ்கள் முன்வரவில்லையா?

✱

"வடக்கஞ்சேரி ஆஸ்பத்திரியில் இரு நோயாளிகளுக்குத் தவறான மருந்து கொடுத்ததற்காகக் கர்ஸ்மீது நடவடிக்கை."

— செய்தி

சாப்பிட்டுப் பார்த்தபின் 'இந்த மருந்தைச் சாப்பிடுங்கள்' என்று மருந்துப் புட்டிகளின் மீது சீட்டு ஒட்டுவார்களா?

✱

"சென்னை நகர பஸ் சர்வீஸை நகர சபையிடம் ஒப்படைக்க முடியாதென்று சர்க்கார் தெரிவித்து விட்டது."

— தினசரி

பஸ்கள் நகர, பிரயாணிகளே உதவுவதால் இதற்கு நகரசபையின் உதவி தேவையில்லை என்று நினைத்திருக்கலாம்!

"எலிகளுடன் சென்ற அமெரிக்க ராக்கெட் சென்ற இடம் தெரியவில்லை."

— செய்தி

எலிகளிடம் வைக்கும் பொருள் காணாமல் போவதில் ஆச்சரியமென்ன?

✱

"கண்ணாடி போன்ற பிளாஸ்டிக் வீடுகளில் மனிதர்கள் வசிப்பது சீக்கிரத்திலேயே சாத்தியமாகலாம்."

— ஒரு விஞ்ஞானி

அந்தக் காலம் வரும் வரையில், உள்ளிருந்தபடியே 'ஐயா வீட்டில் இல்லை' என்று தாம் சொல்லலாம் அல்லவா? என்று ஒருவர் கேட்கிறார்.

✱

"வருடத்துக்கு இருபது கோடி மக்களுக்கு இந்திய ரயில்வே உணவுச்சாலைகள் அறுசுவை ஆகாரம் வழங்குகின்றன."

— செய்தி

அறுசுவை ஆகாரம் உண்ண, இவ்வளவு கோடிப் பேருக்கு வண்டியில் இடம் கிடைக்கவில்லை போலும்!



## ஸ்ரீ மகாபாரத உபன்யாசம்

சென்னை திருவல்லிக்கேணி துளசிங்கப் பெருமாள் கோவில் தெருவில் உள்ள தவன உத்ஸவ பங்களாவில், 8-6-59 முதற்கொண்டு தினம் இரவு 7-30 மணிக்கு பிரும்மஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் வேதமெனத் திகழும் ஸ்ரீ மகா பாரதத்தைப் பக்தர்கள் மனம் பரவசமாகும் வண்ணம் உபன்யாசம் செய்துவருகிறார்கள். மகாபாரதத்தைச் செவியுற்று பகவானது அருளுக்குப் பக்தர்கள் உரியவர்களாக வேண்டும்.



# எதற்காக அவைகளை சகிக்கவேண்டும்?

உங்கள் ஆகாரங்களில் யாராவது காலை வைத்தால் நீங்கள் சகிப்பீர்களா? பின் ஏன் நீங்கள் ஈக்களுக்கு இடம் கொடுக்கவேண்டும். அவைகள் கால்வைப்பது மாத்திரமல்ல அதற்கு மேலாகவும் தொந்தரவு கொடுக்கின்றன. மேலும் அவைகள் உங்களுடைய ஆகாரங்களில் வாந்தி எடுக்கின்றன. ஈக்கள் அழுக்குகளைப் புசித்து வளர்ந்து, வாந்திபேதி, ரத்தபேதி, சீதபேதி, டைபாய்ட், முடக்குவாதம் முதலிய ரோகங்களுக்கு காரணபூதமான கிருமிகளைக் கொண்டுவருகிறது. இக்கிருமிகள் உங்கள் ஆகாரங்களில் கலந்து கொடிய நோயை உண்டுபண்ணுவதற்கு ஈக்கள்தான் காரணம். வியாதிகளைக் கொண்டுவந்து உங்கள் வீட்டில் துக்கத்தை ஏற்படுத்துவதற்கு முன்னால் ஈக்களை ஒழித்து விடுங்கள்




## இப்பூச்சிகளை டுகோன் பெய்ட்டினால் கொல்லுங்கள்!

ஈக்களையும், கரப்பான் பூச்சிகளையும், மற்றுமுள்ள ஜந்துக்களையும் கொல்லுகின்ற ஒரு பிரத்தியேகச் சேர்மானப் பொருள் டுகோன் பெய்ட்டில் இருக்கிறது...டுகோன் பெய்ட் மிகச் சிக்கனமானது—பூச்சிகள் கூடுமிடங்களில் கொஞ்சம் டுகோன் பெய்ட்டை உபயோகித்தாலே போதுமானது. டுகோன் பெய்ட் அபாயமற்றது.

# டுகோன் பெய்ட்






TB-2

| எளிதில் உபயோகிக்கக்கூடியது | தூவுவது சுலபம் | பயனளிக்கிறது |
|---|---|---|
| சரமான ஒரு துண்டு கடுதாசியில் டுகோன் பெய்ட்டைத் தூவுங்கள். | அக்கடுதாசியை பூச்சிகள் கூடுமிடங்களில் வையுங்கள். | பூச்சிகள் டுகோன் பெய்ட்டைச் சாப்பிட்டு, சில நிமிடங்களில் இறந்துபோய் விடுகின்றன. |

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

86

ஒன்று கூடிக் கலத்தல், நெடு நாள் கூடிப் பழகுதல், உணர்ச்சி ஒத்திருத்தல் - இம் மூன்றுக்குள் உணர்ச்சி ஒத்திருத்தலே நட்புக்கு முக்கிய காரணம். ஒருவரோடு நேரில் கலப்பதும் நெடு நாள் பழகுதலும் நட்புக்கு அவ்வளவு அவசியமில்லை.

> புணர்ச்சி பழகுதல்
> வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை
> தரும்.

ஒத்த உணர்ச்சி உடைமை, தானாகவே நட்பாகப் பரிணமித்து விடும். 'உணர்ச்சிதான்' என்பது 'உணர்ச்சியே' என்கிற பொருளில் அல்ல. உணர்ச்சி தானாகவே நட்பாகி விடும் என்கிற பொருளில் வந்தது

[நட்பாம் கிழமை - நண்பர்களின் தோன்றும் வேற்றுமை ஒழிந்த மனோபாவமும் பரஸ்பர உரிமையும்.]

*    *    *

நட்பின் பயன் நகுதற் பொருட்டல்லஎன்று சொல்லப்பட்டதல்லவா? மற்றொரு குறளில் நகுதலை வைத்து உண்மை நட்பின் இலக்கணத்தை முனிவர் விளக்குகிறார் நகுதல் பொருட்டல்ல நட்பு என்றாயினும், நண்பர்கள் கலந்தால் மகிழ்ச்சியும் அதன் உடல் குறியாகிய நகுதலும் நிறையக் காண்கிறோம். அந்த நகுதலைப் பற்றிச் சொல்லுகிறார். அதில் ஒருவித நகுதலை விலக்கி மற்றொருவித நகுதலை நட்பின் இலக்கணமாகக் குறிப்பிடுகிறார்

> முகநக நட்பது
> நட்பன்று நெஞ்சத்து
> அகநக நட்பது
> நட்பு.

முகம் மட்டும் நகுதல் ஒன்று; அகம் நகுதல் மற்றொன்று. முகம் நகுதல் உடலின் வேலை அகம் நகுதல் நெஞ்சின் வேலை, உயிரே மகிழ்ச்சி அடைந்து முகத்தில் அந்த மகிழ்ச்சி மலர்ந்தால் அதுவே உண்மை நட்பின் இலக்கணம்.

இரண்டிலுமே நகுதற்குறி தோன்றினும். அகமும் முகமும் இரண்டும் ஒன்றுகூடி நகுதலே உண்மை நட்பினால் உண்டாவது

*    *    *

நட்புக்கு மூன்று வேலைகளை முனிவர் நிச்சயிக்கிறார் கேடு தரும் நெறியில் நண்பன் சென்றால் அதனின்று விலக்குதல், நல்ல நெறியில் நண்பனைச் செலுத்துதல், கேடு வந்த போது துன்பத்தை உடன் அனுபவிப்பது — இம் மூன்றும் நண்பன் கடமைகள்

> அழிவின் அவைநீக்கி
> ஆறுஉய்த்து அழிவின்கண்
> அல்லல் உழப்பதாம்
> நட்பு.

கேடு பயக்கும் நெறியினின்று விலக்குதலும் நல்ல நெறியில் செலுத்துவதும் கடமை. அது தன்னால் செய்ய முடியாமல் போய் அல்லது வினைவசத்தாலே துன்பம் வந்து சேர்ந்தால் அந்தத் துன்பத்தை நண்பனோடு தானும் அனுபவித்தல் கடமை

* * *

உடுக்கை இழந்தவன்
கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

அரங்கத்தில் ஆடை நழுவினால் கையானது எப்படி ஒரு கணத் தாமதமின்றி மனம் செல்லு முன்பே விரைந்து சென்று ஆடையைப் பிடித்துக் காக்கிறது: அந்த விரைவுடன் வேலை செய்யும் உண்மை நட்பு, நண்பனுக்கு வந்த இடுக்கண் களைவதற்கு.

நண்பர்கள் தம் நட்பை ஆராய்ந்து தத்தம் குணநிசயங்களைக் காரணம் கண்டு பேசமாடடார்கள் பேசினால் நட்பின் பொலிவு அழிந்து வாடும்.

இனையர் இவர்எமக்கு
இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு.

நட்பானது உணர்ச்சி ஒப்புமையால் தோன்றும் என்று சொன்னதோடு, அதைக் காரண காரியம் பார்த்துச் சோதித்தால் அதன் பொலிவு அழியும் என்கிறார். இரு உள்ளமும் ஒன்றாகிவிட்ட நிலை நட்பு. ஓருயிர் போல் ஒன்றிருந்த நிலையில் புகழ்ந்தும் வேற்றுமை காணலாகாது ஆராய்ச்சியே உதவாது. உயிருள்ள உடலைச் சோதிப்பது போலாகும்.

குறளில் சொல்லப்பட்ட நட்பு சாதாரணமாக உலக விவகாரங்களில் இருவர் ஒன்று சேர்வது போல் அன்று. குறளில் சொல்லப்பட்ட நட்பு இரு உயிர்கள் ஓர் உயிராகும் சேர்க்கை

# சகடபுரம் ஸ்ரீ சங்கராச்சாரியாரின் பதரி யாத்திரை

சகடபுரம் ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் ரிஷிகேசத்திலிருந்து 8-5-59-ல் புறப்பட்டு தேவப்ரயாகை, ஸ்ரீநகர், ருத்ரப்ரயாகை, கர்ணப்ரயாகை மார்க்கமாகச் சென்று நந்தப்ரயாகையை அடைந்து அங்கே அலகநந்தா நதியில் நீராடி, பூஜை அபிஷேகம் முதலியவற்றை நதிதீரத்திலே முடித்துக் கொண்டு மே மாதம் 10-ந் தேதி பிப்பல்கோடிக்கு வந்து அங்கிருந்து பாதசாரியாகவே ஸ்வாமிகள் வழியிலுள்ள குமாரச்செட்டி, ஜோஷி மடம், பாண்டுகேச்வர் செட்டி முதலிய இடங்களைக் கடந்து மே, 13-ம் தேதி பகல் பதரிக்ஷேத்திரத்தை அடைந்தார்கள். அங்கே கோவில் அதிகாரிகளும் பொது மக்களும் பூர்ண கும்ப மரியாதைகளுடன் ஸ்வாமிகளை வரவேற்று ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். மூன்று நாட்கள் ஸ்வாமிகள் பதரியில் தங்கியிருந்தார்கள். பதரிநாராயண மூர்த்திக்கு ஸ்வாமிகள் தாமே மகாபிஷேகம் செய்து மகிழ்ந்தார். பூஜை அபிஷேக ஆராதனைகளுக்குப் பின் ஆலயத்திலேயே ஸ்வாமிகளால் ஒரு சபை கூட்டப்பட்டது. அங்கு தரிசனத்துக்காக வந்திருந்தவர்களுக்கெல்லாம் மந்திராக்ஷதையும் வழங்கப்பட்டது. ஆலயத்தைச் சார்ந்தவர்களுக்கும் தர்மாதிகாரிகளுக்கும் வேதாத்யாயிகளுக்கும் சன்மானங்கள் வழங்கப்பட்டன. அன்றுமாலை முக்கிய இடங்களான பஞ்ச தீர்த்தங்களுக்கும் பஞ்சசிலங்களுக்கும் விஜயம் செய்த பின்னர் பிரம்மகபாலத்துக்கும் சென்று தமது பதரி யாத்திரையை முடித்துக் கொண்டு மேமாதம் 16-ந் தேதி அன்று பதரியை விட்டுப் புறப்பட்டார்கள்.



பதரிக்ஷேத்திரத்திலுள்ள பதரிபீடம் ஸ்ரீ ஸ்வாமிகளின் பரம குருவான ஸ்ரீ தோடகாச்சாரியாருக்குச் சேர்ந்தது. பரம்பரை வாயிலாக வந்து கொண்டிருக்கும் இந்தப் புனித ஸ்தானத்துக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் விஜயம் செய்தது தமது சொந்த இடத்துக்கு வந்தது போலவே கருதப்பட்டது. எல்லா இடங்களிலும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு உபசாரங்களும் வழிபாடுகளும் குறைவின்றி நடந்தன

ஜூன் 10 உ முதல்

மோஹன் பிலிம்ஸ்
அளிக்கும்
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியின்.....

# நாரதர் கல்யாணம்



ஸ்டுடியோ
ஜெமினி • வாஹினி
ஜெயந்தி

டைரக்ஷன் • C.S.ராவ்

மோஹன் பிலிம்ஸ், 1.B, எடாம்ஸ் ரோட் சென்னை-18.

இப்பொழுதெல்லாம் கல்லூரி மாணவர்களிடையே அமைதியின்மை ஏற்பட்டு, கல்லூரித் தலைவர்களுக்கும், பெற்றோர்களுக்கும் பெருத்த வேதனை அளித்து வருகிறது. அதற்குப் பரிகாரமாகப் பலர் பல யோசனைகள் சொல்லுகிறார்கள். இந்தக் கட்டுரையின் ஆசிரியர் கூறும் யோசனை நேயர்களின் சிந்தனைக்கு உகந்த விஷயம்.

— ஆசிரியர்

# தொழிலாளர்க்கு உயர் கல்வி

**காப்டன் சேஷாத்ரிநாதன்**

தாய் மொழியே கல்லூரிகளில் போதனா மொழியாகிவிடப் போகிறது. இது ஒரு நல்லகாலம். கல்லூரிப் படிப்பைக் கற்றுக் கொள்ளத் தொழிலாளிகளுக்கும் வசதி கொடுத்தாலென்ன? 'இவர்களுக்கு எழுத வாசிக்கத் தெரியாதே, எப்படிக் கற்றுக் கொடுப்பது? இவர்களுக்குப் படிப்பில் கருத்து உண்டாகாதே? முதியோர் கல்வி முயற்சியெல்லாம் பயன் தரவில்லையே' என்று குறை கூறலாம்.

தமிழில் நவீன விஷயங்களைச் சொல்ல முடியாது என்று நினைத்தவர்கள் அநேகர் இருந்தனர். பள்ளிகளில் தமிழைப் போதனா மொழியாக்குவதற்குத் தக்க சொற்கள் இல்லையென்று குறை சொன்னவர்கள் இன்று நமது பள்ளிகளில் நடைபெறும் முறைகளைக் கண்டு வாயை மூடிக் கொண்டு விட்டனர். தண்ணீரில் நீந்துவதற்குப் புத்தகம் படித்தால் சாத்தியமாகுமா? தண்ணீரில் இறங்கி நீந்தக் கற்றுக் கொள்வதுதான் வழி.

தொழிலாளிகள் சிறு வயதிலேயே தொழிலில் சேருகின்றனர். தொழிற்சாலைகளில் சேரும் தொழிலாளிகளில் படிக்கத் தெரிந்தவர்கள் இருக்கின்றனர்; புத்திசாலிகள் இருக்கின்றனர், விஷயங்களைக் கேள்வி ஞானத்தாலும் கைப் பழக்கத்தாலும் எளிதில் அறிந்து கொள்கின்றனர் இந்தத் தொழிலாளிகளுடைய தரத்தை உயர்த்த வேண்டுமானால் தொழிற்சாலையில் உயர்ந்த பதவிகளை அவர்கள் அடையலாம் என்ற நம்பிக்கை உண்டாக வேண்டும். இதற்கு இவர்களுக்கு வசதி இருக்க வேண்டும். இத்தொழிலாளிகளிடையே படிக்கத் தெரிந்தவர்களில் சிலர் தொழிலில் உயர் பதவியடைய எல்லா வகையிலும் திறமையுள்ளவர்களாயிருப்பர் ஆனால் ஒரே ஒரு குறைதான், பட்டதாரியாயில்லையென்பதுதான் இந்தக் குறையைத் தீர்க்கப் பல்கலைக் கழகங்கள் முன் வர வேண்டும்.

இவர்களுக்கு அந்தந்தத் தொழில் நுட்பங்களைக் கற்றுத் தேர்ச்சி பெறத் தொழிற் சாலைகள் நடத்துகிறவர்கள் நேரம் கொடுக்க வேண்டும் கல்லூரிகளில் இவர்களுக்கென்று தனி நேரம் கொடுக்கப்பட வேண்டும். இந்த நேரங்களில் பாடங்களைச் சொல்ல ஆசிரியர்கள் முன்வரவேண்டும். ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கத் தொழிலாளர்களிடமிருந்து பீஸ் வசூலிக்கலாம். விருப்பத்துடன் கொடுப்பார்கள் தொழிற்சாலைகளிலிருந்தும் நிதி கேட்கலாம். இவர்கள் இத்தகைய தேர்ச்சியடைவதால் தொழிற்சாலைகளே நன்மையடையப்போகின்றன. சனி, ஞாயிறு நாட்களில் இத்தொழிலாளர்கள் நேரத்தை இப்பொழுது வீணாக்குகின்றனர். ஒரே மாதிரித் தொழிலில் அலுத்துப் போனவர்களுக்குக் கல்விபயில்வது ஒரு பொழுது போக்காகவே முடிந்துவிடும். இதனால் வரக்கூடிய நன்மைகளை உணர்ந்து கல்வி பயில்வதில் கருத்துச் செலுத்துவார்கள் தொழிலாளிகளின் தரம் உயரும்; அதோடு தொழிலாளி முதலாளி என்ற வித்தியாசம் கூட மாறலாம். வேலை நிறுத்தங்கள் இதனால் குறையக் கூடும்.

பாங்கிச் சிப்பந்திகள், குமாஸ்தாக்கள், பியூன்கள் ஆகியோரைப் பதினெட்டு வயதிலேயே வேலைக்கு எடுத்துக் கொள்ளலாம். இவர்களுக்குப் பாங்கிப் பரீக்ஷைகள் போன்ற மேல் படிப்புக்கு வசதி கொடுக்க வேண்டும். கல்லூரிகளில் இத்தகைய மாணவர்களுக்குச் சாயங்கால வகுப்புகள் தனியாக ஏற்படுத்தவேண்டும்.

வேறு பட்டதாரிப் பரீக்ஷைகளுக்கும் இத்தகைய வசதி இருக்க வேண்டும். கணித, பௌதிக, இரசாயன மருந்து உற்பத்தியும் சோதனையும் செய்தல் ஆகிய துறைகளிலும் கூட வேலையிலிருக்கும் சிறுவர்களுக்கு வேலையிலிருந்தபடியே பட்டதாரிப் பரீக்ஷைக்குப் படிக்க வசதி இருக்க வேண்டும். வழக்கமான ஆங்கில போதனா முறையில் கற்றுக் கொள்பவர்கள் கற்றுக் கொள்ளட்டும் தொழிலில் இருப்பவர்களுக்குத் தமிழைப் போதனா மொழியாக்கி விட வேண்டும்.

மாணவர்கள் தங்களுக்கு விருப்பமான துறைகளில் பாடப் பிரசங்கங்களைக் கேட்கவோ, கைப் பழக்கங்களை முடித்துக் கொள்ளவோ அனுமதிக்கப்பட வேண்டும். விதிக்கப்பட்ட நாள், பிரசங்கங்களைக் கேட்ட பிறகு மாணவர்களுடைய இஷ்டம் போல் பரீட்சைக்கு உட்கார்ந்து வெற்றியடைந்து பட்டதாரிகளாக வசதி இருக்க வேண்டும். இதற்காகப் புதிய கட்டடங்கள் கட்ட வேண்டியதில்லை. இப்போதுள்ள கட்டடங்களே போதுமானவை.

கல்வி போதனைகள் ஒவ்வொரு துறையிலும் நடைபெறுவதை முன்னதாகவே வெளியிட்டு மாணவர்களின் விண்ணப்பப் பத்திரங்களைப் பெற்றுக் கொள்ள பாடங்களின் மீது நிகழ்த்தப்பட்ட விரி

வுரைகளைக் கேட்டதற்கு அத்தாட்சிப் பத்திரங்கள் சேர்த்து வைத்துக் கொள்ளலாம். பிறகு இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள்ளாகப் பரீட்சைகளை முடித்துப் பட்டம் பெறப் பல்கலைக் கழகம் அனுமதிக்க வேண்டும்.

இந்த முறைப்படி மாணவர்கள் பொறுப்புடன் விருப்பமான பாடங்களைக் கற்றுக் கொள்வார்கள். அவரவர்களுடைய தொழிலிலும் மற்றத் துறைகளிலும் தேர்ச்சி பெற்று உயர் பதவி பெற வாய்ப்புக் கிடைக்கும். அவரவர் செய்யும் வேலையிலும் கருத்து செலுத்துவார்கள் என்று எதிர்பார்க்கலாம். தொழில் தரம் உயரும். தொழிலுக்கும் கல்விக்கும் உறவு விருத்தியாகும். தொழிலாளியின் புத்தித் திறமையை உபயோகிக்க வழி வகை கிடைக்கும்.

கைத் தொழிலுக்கே அதிக மதிப்பு ஏற்படும். "ஒரு நாள் நானும் தொழிலில் உன்னத பதவியை அடையலாம்" என்று நம்பித் தொழிலாளி ஊக்கத்துடன் வேலை செய்வான். இத்தகைய மாணவர்கள் அதிகமாகும் பொழுது தொழிலில்லாமல் தனிப் படிப்பு பெற்றுப் பட்டதாரிகளாக விரும்பும் மாணவர்களுடைய தொகை குறையலாம். இது கல்வியின் தரத்தைக் குறைக்கச் செய்யும் கிளர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காது. சிறு வயதிலேயே தொழிலில் அமர்ந்த மாணவர்களாயிருப்பதால் பொறுப்பில்லாமல் அரசியல் கிளர்ச்சிகளிலும் மற்ற வகையிலும் நேரத்தைச் சிதற அடிக்க மனம் இடந் தராது. வீண் பொழுது போக்குவதும் குறையும். நாட்டுக்கே இந்தக் கல்வி முறை பெருமை தரும் என்பதில் ஐயமில்லை.

# இலங்கையில் இந்திய ஜனதிபதி

கொழும்பு, ஜூலை 6உ

இந்திய யூனியன் ஜனதிபதி டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் இம்மாதம் 16-ம் தேதி இலங்கைக்கு விஜயம் செய்கிறார். அவர் ஒரு வாரகாலம் இங்கிருப்பார். ராஜன்பாபுவை யாழ்ப்பாணத்துக்கும் கிழக்கு மாகாணத்திலுள்ள மட்டக்களப்புக்கும் அவசியம் அழைத்து வரவேண்டுமென்று தமிழ்ப் பிரமுகர்கள் பிரதம மந்திரிக்கு அவசர வேண்டுகோள்களை அனுப்பி யிருக்கிறார்கள். வெளிநாடுகளிலிருந்து பிரபலஸ்தர்கள் வரும்பொழுதெல்லாம் அவர்களைச் சிங்களப் பகுதிகளுக்கு மட்டும் அழைத்துச் சென்று காட்டுவதே வழக்கமாயிருந்து வருகிறது. இது வடக்கு, கிழக்கு மாகாணங்களில் வசிக்கும் தமிழர்களுக்கு வேதனை தருவதாயிருக்கிறது. இந்திய ஜனதிபதி விஜயத்தின் பொழுதும் தமிழ்ப் பிரதேசங்கள் அலட்சியம் செய்யப்பட்டு விடலாகாதென்பதற்காகவே தமிழ்த் தலைவர்கள் முன்னதாகவே பிரதம மந்திரிக்கு வேண்டுகோள் அனுப்பி யிருக்கிறார்கள்.

சென்ற வாரம் திருகோணமலையில் கலாசார இலாகா ஆதரவில் ஒரு கலை விழா சிறப்பாக நடைபெற்றது. அவ்விழாவில் ஆயிரக்கணக்கான மாணவ மாணவிகளும் மற்றவர்களும் உற்சாகத்தோடு கலந்து கொண்டார்கள். தமிழ் அரசுக் கட்சித் தலைவரான ஸ்ரீ என். ஆர். ராஜவரோதயம் பேசுகையில் தற்போதைய அரசாங்கம் தமிழ் மக்களுக்குப் பல மாதிரியான இன்னல்களைத் தோற்றுவித்த பொழுதிலும் கலை விஷயங்களிலாவது தமிழ் மக்களின் கலை, கலாசார வளர்ச்சிக்கு உதவி புரியக்கூடிய முறையில் கலை விழாவை நடத்த முன் வந்தது பாராட்டத்தக்கதென்றார். அவர் தொடர்ந்து பேசுகையில், "தமிழ் மக்கள் கலைத்திறன் படைத்தவர்கள், நீண்ட காலம் பண்பாட்டுடன் வாழ்ந்தவர்கள். அவர்களது கலைகளையும் பண்பாட்டையும் கண்டு உலகமே வியக்கிறது. இந்தப் பெருமையை வளர்க்க மக்கள் மேலும் மேலும் முயல வேண்டும்" என்று கூறினார்.

சிறப்பாக நடைபெற்ற இவ்விழாவில் நாட்டுப் பாடல்கள், நாட்டியக் கச்சேரிகள், இசைவிழா முதலியவை இடம் பெற்றிருந்தன. இதையொட்டி நடந்த ஒரு பொருட்காட்சியில் சிற்ப சித்திரத் திறமையைப் பிரதிபலிக்கும் பல சித்திரங்களும் கைப்பணிப் பொருள்களும் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன.

ரப்பர் தேயிலைத் தோட்டப் பகுதிகளில் வாழும் இந்தியத் தொழிலாளரிடையில் கொஞ்சகாலமாக சமய மறுமலர்ச்சி யேற்பட்டு வருவது வரவேற்கத் தகுந்த தொரு அம்சமாயிருக்கிறது. தொழிலாளரது பிரதிநிதித்துவ ஸ்தாபனமாகிய காங்கிரஸ் இதுவரை அரசியல் பிரச்னைகளிலும் யூனியன் பிரச்னைகளிலும் மட்டுமே கவனம் செலுத்தி வந்தது. இப்போது தொழிலாளர்களின் கல்வி கலாசார சமய விஷயங்களிலும் தீவிரமாகச் சேவை செய்து வருகிறது. சுவாமி சச்சிதானந்த யோகியாரைப் பல தோட்டங்களும் அடிக்கடி அழைத்து சமயப் பிரசங்கங்களும் யோகாப்பியாசங்களும் செய்யச் சொல்லுகின்றது. ஆலய வழிபாடும் தோட்டங்களில் அதிகரித்து வருகிறது. சமீபத்தில் லவுக்கலைத் தோட்டத்தில் தொழிலாளர் சுமார் 10,000 ரூபாய் வரையில் வசூலித்து ஒரு மாரியம்மன் கோவிலைக் கட்டிச் சிறப்பாகக் கும்பாபிஷேகம் செய்தார்கள். அதற்குக் காங்கிரஸ் தலைவரும் பக்கத்துத் தோட்டங்களிலிருந்து பல்லாயிரக் கணக்கான தொழிலாளரும் வந்திருந்தனர். —ரஜனி

# பூச்சிப் பத்திரிகை

## மூட்டைப் பூச்சிகளின் ஒரு காலனியே ப்ளிட் விஷத்தால் அழிந்தது!



### மூட்டைப் பூச்சி சமூகத்தில் பெரும் பீதி!

படுக்கையறையைச் சேர்ந்த கட்டிலிடைப் பேட்டையில் வசிக்கும் பிரபல மூட்டைப் பூச்சிகளில் ஆயிரக்கணக்கான பேர்களை நேற்று பட்டப்பகலில் ப்ளிட் ஆயுதபாணி இரக்கமின்றி கொலை செய்ததாக தெரியவருகிறது.

இந்த கோரசம்பவம் நேர்ந்தபொழுது மூட்டைப் பூச்சிகளில் பல பேர்களும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள் என்று தெரியவருகிறது. ப்ளிட்டின் தீவிர சக்தியினால் பலருக்கும் எழுந்து ஓடக்கூட முடியாமல் போய்விட்டதாம். இந்த சம்பவம் மூட்டைப் பூச்சிகள் சமூகத்தில் பெரும் பீதியைக் கிளப்பி விட்டிருக்கிறது.







ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

**கல்கி**

# மாவட்டச் சிறுகதைப் போட்டி

**முதற் பரிசு ரூ. 200.** **இரண்டாவது பரிசு ரூ. 100**

★

★ ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு மாவட்டத்தை இலக்காகக் கொண்டு இந்தச் சிறுகதைப் போட்டி நடத்தப்படும். ஒவ்வொரு மாதமும் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளில் இரண்டு கதைகளுக்குப் பரிசு வழங்கப்படும்.

★ தமிழ்நாட்டின் மாவட்டங்களான கன்யாகுமரி, திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, தென் ஆற்காடு, செங்கற்பட்டு, வட ஆற்காடு, சென்னை, சேலம், கோயமுத்தூர், நீலகிரி ஆகிய பதின்மூன்று மாவட்டங்கள் இந்தப் போட்டியில் இடம் பெறும்.

★ எல்லா மாவட்டங்களைப் பற்றிய கதைப் போட்டிகளிலும், எல்லாத் தமிழ் எழுத்தாளர்களும் கலந்து கொள்ளலாம்.

★ கதைகள் பண்பட்ட தமிழ் நடையில் அந்தந்த மாவட்டத்தைப் பின்புலமாகக் கொண்டு, முழுவதும் அந்தப் பிரதேச மணம் கமழ்வதாக இருப்பதோடு சொந்தக் கற்பனையாகவும் இருக்க வேண்டும்.

### மூன்றாவது போட்டி

## நீலகிரி மாவட்டம்

### விதிகள்

1. கதைகள் நீலகிரி மாவட்டத்தின் சூழ்நிலை எல்லா வகையிலும் அமையுமாறு எழுதப்பட வேண்டும். நீலகிரி மலைப் பிரதேசத்தைச் சேர்ந்த ஊர்கள், பழக்க வழக்கம், தொழில், வாழ்வு போன்றவற்றைச் சித்திரிக்கும் கதைகளே இப் போட்டியில் இடம் பெறும்.
2. கதைகள் 'கல்கி' இதழின் ஐந்து பக்கங்களுக்குக் குறையாமல் ஏழு பக்கங்களுக்கு மேற்போகாமல் இருக்க வேண்டும்.
3. ஒரு எழுத்தாளரே ஒன்றுக்கு மேற்பட்டும் கதைகளை அனுப்பலாம்.
4. பரிசுக்கதைகளைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் 'கல்கி' ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது
5. பரிசுபெறாத கதைகளில் பிரசுரிக்கத் தகுதியுடையவை, உரிய சன்மானம் அளித்துக் 'கல்கி'யில் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.
6. பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படாத கதைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் கதைகளோடு உரிய தபால் பில்லைகள் இணைக்கவேண்டும்.
7. கதைகள் சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.
8. நீலகிரி மாவட்டப் போட்டிக்கான கதைகள் ஜூலை மாதம் 31-ந் தேதிக்குள் 'கல்கி' காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும்
9. போட்டி முடிவு ஆகஸ்டு மாத இறுதிக்குள் அறிவிக்கப்படும்.
10. கதைகளின் உறைகளிலும், கதைகளின் தலைப்புக்களிலும் "கல்கி நீலகிரி மாவட்டச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

குறிப்பு:— நீலகிரி மாவட்டத்தின் சிறுகதைப் போட்டி முடிவு வெளியாகும் இதழிலேயே அடுத்த மாவட்டச் சிறுகதைப் போட்டிக்குரிய விவரங்கள் அறிவிக்கப்படும்.

ஆசிரியர், கல்கி

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 41. வேணுகானம்

மழைக்காலம் ஆரம்பமாயிற்று. கதிரவனைச் சுற்றிக் கருவட்டம் தெரிந்தது. வானத்தில் இடியோசை முழங்கியது. கருமுகிலால் கிரகங்களும் நட்சத்திரங்களும் மறைந்து போயின. நல் வேந்தன் குடிகளிடமிருந்து எடுத்த வரியைக் குடிகளுடைய நன்மைக்கே வாரி இறைத்தாற்போல், கதிரவனும் பூமியில் நின்று வாங்கிச் சேமித்து வைத்திருந்த நீரை, தருணத்தில் பன்மடங்கு மழையாகப் பொழிந்தான். மின்னலோடுவந்த கார் மேகக் கூட்டங்கள் பெருங் காற்றில் தள்ளாடி, வெப்பத்தில் வாடியிருக்கும் புவிமீது பெரு மழை பெய்தன. பெரியோர், மற்றவர் துயர் தீர்க்கத் தம் உயிரையே கொடுப்பாரன்றோ? இளைத்த பூமி செழித்தது. இம் மாறுதல் தவம் செய்து மெலிந்தவன், தவம் முடிந்து கோரிக்கை கைகூடியதும் வளர்ந்தோங்கியது போல் இருந்தது. இரவில் நட்சத்திரங்கள் தெரியவில்லை; ஆனால் மினு




மினுப் பூச்சியின் ஒளி தெரிந்தது. தனிமையிலே பதுங்கியிருந்த தவளைகள், ஆசிரியர் அழைத்ததும் மறை ஓதும் அந்தணச் சிறுவரென, மழையைக் கண்டதும் கதறின. வறண்ட ஓடைகள், புலன்களை அடக்காதவன் செல்வமெனக் கரைபுரண்டு ஓடின. ஹரி பக்தி மிகுந்தவர் திகழ்வதைப்போல் நாட்டில் வாழ்வோரும், நீரில் வாழ்வோரும் தெளிவுற்றிருந்தனர். ஆற்றுநீர் பெருகிக் கலந்து புயல்காற்று வீசிக் கொந்தளிக்கும் கடல், பார்த்ததை விரும்பிப் பக்குவம் கெட்டுப் பரிதவிக்கும் யோகியின் மனத்தை ஒத்திருந்தது. விஷ்ணுவினிடம் சரணடைந்தவர் துயரங்களைப் பொருட்படுத்தாதிருப்பது போல் தம் மீது கொட்டிய மழையை மலைகள் தாங்கி நின்றன. பாதையெல்லாம் புல் முளைத்து, ஓதாத மறையென மறைந்து போயின. தோன்றி மறையும் மின்னலும் மேகத்தோடு, விலைமாதரைப்போல் கணநட்பைக் கொண்டாடியது. வானவில் குணமற்ற பிரமம், முக்குணம் வாய்ந்த சிருஷ்டியில் தொடர்பற்றிருப்பது போல், ஆகாயத்தில் தோன்றியது. சந்திரனும், மேகத்தால் மூடுண்டு தன் ஒளி தனக்கே வீச மற்றவருக்குத் தெரி

யாது, தானென்ற தன்மையால் மறையுண்ட ஜீவனென ஒளிர்ந்தது. கண்ணனைக் கண்டு களிக்கும் மாந்தரைப்போல் மயிலினம் முகில் கூட்டத்தைக் கண்டு தோகை விரித்து ஆடியது. முள்புதர் நிறைந்து சேறு வழியும் கரைகள் சூழ்ந்த ஏரிகளில் நாரைக் கூட்டங்கள், சிற்றின் பங்களில் உழன்று வரும் மனிதரைப் போல் வாழ்ந்தன. கலியில் தருமம் தகர்ந்து போவதுபோல் நீரைக் காக்கும் அணைகள் உடைந்தன.

இவ்வழகிய மழைக் காலத்தில் கண்ணனும் மற்றக் கோபாலர்களும் பிருந்தாவனத்தை அடைந்தனர். அங்கு பேரீச்சம் பழங்களும் நாகப்பழங்களும் மலிந்திருந்தன. கண்ணனின் குரலைக் கேட்டு, பால் நிறைந்த மடுவின் பாரத்தால் மெதுவாக நடந்து போகும் பசுக்கள் விரைந்து சென்றன. காட்டிலே சென்று கொண்டிருந்த கண்ணன் அங்கு வசிப்பவர் களித்திருப்பதையும், மரங்களினின்று தேன் சொட்டுவதையும், மலைச் சாரலில் சலசலவென நீர் ஓடுவதையும் கண்டு மகிழ்ந்தான். மழை மிகுந்த நேரத்தில் மரத்தடியில் தங்கியிருந்து கனியுண்பான். பசி மிகுந்தால் நதியருகில் பாறைமீது அமர்ந்து தயிரமுதை உட்கொள்வான். பசும்புல்மீது படுத்துக் கண்மூடி அசைபோடும் ஆவினத்தைக் கண்டு கண்ணன் அளவற்ற ஆனந்தம் அடைவான்.

இவ்விதம் மழைக் காலம் முடிந்து, முன் பனிக்காலமும் வந்தது. வானம் மேகமற்றுத் தெளிந்தது. ஆற்று நீர் கலக்கமற்று ஓடியது. தாமரைகள் மலர்ந்தன. அவ்வப்போது தோன்றிய மேகங்கள், வெளுத்து ஆசையற்ற முனிவ



ரெனக் காரியமின்றி யிருந்தன. ஆயுள் குறைவதை அறியாத மதியீனரைப் போல் நீர் வாழும் பிராணிகள் நீர் குறைவதை அறியாமல் ஆனந்தமாக இருந்தன. கடல் அடங்கியது. குடியானவர் வயல் நீர் வெளியே போகாதிருக்க வரப்பை உயர்த்தினார்கள். கதிரவன் கொடுமையை வெண்மதி குறைத்தது. இரவில் வானமெல்லாம் நட்சத்திரங்கள் நிரம்பித் தெரிந்தது. பிருந்தாவனத்தில் வீசும் தென்றல் ஓரளவு மனிதருக்கு வெப்பத்தைத் தணித்தது; ஆனால் காட்டுக்குச் சென்ற கண்ணனைக் காணாமே என்று வீட்டிலிருந்து வருந்தும் கோபிகள் உள்ளம் சூடேறித் தவித்தனர். ஆம்பலைத் தவிர வேறு மலர்கள் கதிரவனோடு தாமும் மலர்ந்தன. வயல்களில் பயிர் வளர்ந்து கதிர் விட்டது.

கானகத்தை அடைந்த கண்ணன் தன் குழலை எடுத்து ஊதலுற்றான். அதன் இசையமுதைப் பருகிய கோபியர், அதன் அழகைப் பற்றித் தோழியருடன் பாட வேண்டுமென்று ஆவலுற்றனர். ஆனால் அவர்கள் மனத்திலே குழலூதும் கண்ணனின் உருவம் தோன்றவே, ஆசை மிகுந்து நாவெழாது சோர்ந்தனர். பிறகு, மயில் பீலிச்சுட்டியும் காதிலே கர்ணிக மலரும், மேனியிலே வனமாலையும், மஞ்சள் பட்டாடையும் அணிந்து கொண்டு, சிறு விரல்கள் குழல்மீது பாடிய இன்னிசை கீதம் பாடிப் பிருந்தாவனம் ஏகும் எம்பெருமானைக் கோபியர் மனத்திலே கண்டு மெல்ல மெல்லத் தாமும் பாடினார்கள்.

கண்ணிருந்தும் பயன் என்ன — சகியே
கானகத்தே குழலூதும்
அடிவதனம் காணாத (க)

குழல் பெற்ற பாக்கியம் யாதோ — சகியே
மாதவனின் அதரத்
தாரமுதைத்தான் பருகும் (உ)

காட்டுக்கும் வந்ததொரு மேன்மை — சகியே
கண்ணபிரான் தாள் பட்டு
விண்ணுலகை வென்றவரும் (௩)

பெண்மானின் புண்ணியமே மேலே — சகியே
குழலோசை செவியுற்றுக்
கண்மலரால் பூசையிடும் (௪)

ஆவினமும் அசைவற்று நிற்குமே — சகியே
கானாமுதத் தேன்பருகி
நீருதிரும் கண்களுடன் (ஆ)

பறவைகளும் கண்மூடிக் கேட்குமே — சகியே
கோபாலன் கானமதைத்
தவம் செய்யும் முனிவரென (ப)

யமுனாநதி மெதுவாகப் போகுமே — சகியே
குழலூதன் செந்தாளை
அலைகளினால் தழுவிடவே (ய)

வான்முகிலோர் வெண்குடை பிடிக்குமே-சகியே
குழலூதும் கோவிந்தன்
வெயிலினிலே வருந்தாது (வா)

கோவர்த்தன மலைக்கும்தான் இணையிலை-சகியே
குழலூதிக் களைப்புற்ற
கண்ணனுக்கு நீரளிக்கும் (கோ)

காணாத விந்தையதைக் கண்டேன் — சகியே
அசையாது பசுநிற்கத்
தாவரங்கள் அசைந்தாடக் (கா)

இவ்வாறு கண்ணனுடைய லீலைகளைப் புகழ்ந்து பாடிக் கொண்டு கோபிகள் அந்த லீலைகளிலேயே தங்கள் மனத்தை இழந்தனர்.

மார்கழி மாதம் பிறந்தது. குளிர் காலம் ஆரம்பமாயிற்று. ஆயர்பாடி மங்கையர் "காத்யாயனி விரதம்" என்ற நோன்பை நூற்றனர்.

"நெய்யுண்ணோம்; பாலுண்ணோம்
நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம்; மலரிட்டு நாம்
முடியோம்
செய்யாதனச் செய்யோம் தீக்குறளைச்
சென்றோதோம்"

என்று தம்முள்ளே இன்னம் கொண்டனர். விடியுமுன் யமுனையில் நீராடிவிட்டுப் பொழுது புலரும் வேளையில் நதிக்கரையில் காத்யாயனி விரதத்தை, மண்ணினால் உருவாக்கி அதற்குச் சாந்திட்டுப் பூச்சூட்டி நறுமணப் புகை காட்டி நைவேத்தியம் பல செய்து தேவியைப் பூஜை செய்தனர்; பாடித் தோத்திரமும் செய்தனர்:

"காத்யாயனி! மகாமாயே!
யோகபலம் பெற்றவளே!
நந்தகோபன் குமரன்
நாயகனாய் வந்திடவே
வணங்கும் இச்சிறுமிக்கு
நல்ல வரம் தந்திடுவாய்"

என்று பாடி அம்மையை வணங்கினர். இவ்வாறு ஒரு மாதம் அவர்கள் நோன்பு நோற்றனர்.

அதிகாலையில் ஆற்றுக்குப் போவதற்கு ஒருவரை யொருவர் கூப்பிட்டு எழுப்புவார்கள். பிறகு கைகோத்துக்கொண்டு எல்லோரும் கண்ணன் புகழைப் பாடிக் கொண்டு யமுனையை அடைவார்கள்.

நோன்பு முடியும் "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாள்" அன்று வழக்கம் போல் கோபிகள் தங்கள் ஆடைகளைக் கரையில் வைத்து விட்டு நதியில் இறங்கி நீராடிக் கொண்டிருந்தனர். கண்ணனுக்கு அவர்களைத் திருப்தி செய்ய வேண்டுமென்ற எண்ணம். நண்பரோடு ஆற்றோரம் ஏகினான். மங்கையர் ஆடைகளை எடுத்துக் கொண்டு கதம்ப மரத்தின் மீது ஏறிக் கொண்டான். நங்கையரோடு நையாண்டி பேசினான். "இங்கு வந்து ஆடைகளைப் பெற்றுச் செல்லுங்கள். நான் பொய் பேசுவதே இல்லை. நான் சொல்வது உண்மை. வேண்டுமானால் இந்தப் பையன்களைக் கேட்டுப் பாருங்கள்" என்றான்.

இதைக்கேட்ட கோபிகளுக்குக் கண்ணனிடம் அன்பு பெருகியது. ஆனால் நீரை விட்டு வெளியேறத் தயங்கினர். நீரிலே நடுக்கமுற்று நின்றனர். "ச்யாமசுந்தரா! நாங்கள் உன் சேடியரன்றோ? நீ இட்ட கட்டளையை எள்ளளவும் எதிர்க்க மாட்டோம். பார்! குளிர்ந்து நடுங்குகின்றோம். ஆடைகளைக் கொடுத்து விடு. இல்லையேல், அரசரிடம் சொல்லட்டுமா?" என்றனர்.

அதற்குக் கண்ணன், "நீங்கள் என் சேவகரானால் இங்கு வந்து ஆடையைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றான். வேறு வழியில்லாமல் கோபிகள் கரை மீது ஏறி மரத்தடியில் போய் நின்றார்கள். "ஆடையின்றி ஆற்றில் நீராடுவது வருணனுக்கு அபசாரம். ஆகவேதான் உங்களுக்கு இந்த நிலை வந்தது" என்று சொல்லி ஆடையைத் திரும்ப அளித்தான். அவர்களும் தத்தம் ஆடைகளை அணிந்து கொண்டு கண்ணனை நோக்கி அங்கேயே நின்றனர். அவர்களுடைய மனப்பான்மையைக் கண்ணன் அறிந்து கொண்டார். தன் தாளைத் தொட்டுத் தண்டனிட்டு முன்னேறவே இந்தக் காத்யாயனி நோன்பை அவர்கள் நோற்றார்கள் என்பதை அறிந்தான். அன்பருக்கு அடிமையான கண்ணன் அவர்களிடம் பின்வருமாறு மொழிந்தான். "என்னை வழிபட்டு என்னையே அடைய நீங்கள் விரும்புவதை நான் அறிவேன். என்னிடம் வந்தவருக்கு மற்ற ஆசைகள் அழிந்து போகும். வறுத்த விதை முளைக்குமா? இப்பொழுது நீங்கள் வீடு திரும்புங்கள். வரும் சரத்கால இரவுகளில் என்னோடு கிரீடை செய்வீர்கள். உங்கள் எண்ணம் நிறைவேறி விட்டது" என்றான். அவர்கள் தம் வீடு சென்றனர்.



பஞ்சாப் சிங்கம் என்று பெயர்பெற்ற தேசபக்தர் லாலா லஜபதிராய் **1914-17** ஆண்டுகளில் அமெரிக்காவிலிருந்த போது எழுதி அங்கு விட்டு வந்த நூலின் கையெழுத்துப் பிரதியை நியூயார்க் நகரப் பொதுநூல் நிலையத்தின் நிர்வாகஸ்தரிடமிருந்து சமீபத்தில் அமெரிக்காவிலுள்ள நமது இந்திய ஸ்தானிகர் திரு எம். ஸி. சாக்லா பெற்றுக் கொண்டார்.

---

ஒருநாள் கண்ணன் பலராமனுடனும் மற்ற பையன்களுடனும் பிருந்தாவனத்தில் மாடு மேய்த்துக் கொண்டிருந்தான். குடை பிடித்தாற் போல் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்களைப் பார்த்துக் கண்ணன் தன் தோழர்களிடம் புயலையும், மழையும், வெய்யிலையும் பனியையும் தாம் தாங்கி நம் மீது அவை படாமல் காப்பாற்றுகின்றன. மரத்தின் ஒவ்வொரு பாகமும் நமக்கு உபயோகமாகிறது. இதுவே வாழ்க்கைக்குப் பயன்'' என்றான்.

இவ்வாறு பேசிக் கொண்டு அனைவரும் யமுனைக் கரையை அடைந்தனர். அப்பொழுது மாடு மேய்த்துக் களைப்புற்ற பையன்களுக்குப் பசி அதிகரித்தது. கண்ணனையும் பலராமனையும் நெருங்கி முறையிட்டுக் கொண்டனர். அதற்குக் கண்ணன் அருகில் ஒரு யாகசாலை இருக்கிறது. அங்கு ஒரு சிலர் அந்தணர்கள் வேள்வியை நடத்தி வருகின்றனர். அங்கு சென்று என் பெயரைச் சொல்லி அன்னம் கேளுங்கள்'' என்றான். அவ்வாறே சிறுவர்கள் யாக சாலைக்குச் சென்று அந்தணரை வணங்கிக் கைகூப்பி, ''பெரியோர்களே! நாங்கள் கண்ணனுடைய ஆட்கள். பசிஅதிகமாக வருத்துகிறது. எங்களுக்கு அன்னம் அளிப்பீர்'' என்றனர். ஆனால் வேள்வி செய்யும் அந்தணர்கள் இவ்வேண்டுகோளுக்கு இணங்க வில்லை. வேள்வி செய்து விண்ணுலகம் செல்வதில் கண்ணாயிருந்தனர். ஆனால் வேள்வியும் வேள்விக் கருவியும் எல்லாம் விஷ்ணுவான கண்ணனே என்று அவர்கள் அறியவில்லை. மானிடச் சிறுவன் என்று கண்ணனைக் கருதிய அறிவிலிகள்.

''அந்தணர் ஒன்றுமே சொல்லாது சும்மா இருந்து விட்டனர்'' என்று பையன்கள் கண்ணனிடம் வந்து கூறினார்கள். கண்ணன் நகைத்தான். ''மறுபடியும் சென்று அவ்வந்தணர் மனைவியரிடம் நான் இங்கு இருக்கிறேன் என்று தெரிவியுங்கள். அவர்கள் உங்களுக்கு அன்னம் அளிப்பார்கள்'' என்றான். அவ்வாறே பையன்கள் அந்தணப் பெண்மணிகளிடம் சென்று தெரிவித்தார்கள். கண்ணனே பசியால் வருந்துவதாகவும் சொன்னார்கள். உடனே கண்ணனைக் காண ஆவல் கொண்ட மாதர்கள் பரபரப்புடன் எழுந்தனர். அறுசுவை உண்டியைப் பல பாத்திரங்களில் எடுத்துக் கொண்டனர். கடலை நோக்கி ஓடும் ஆற்றைப் போல் கண்ணனைக் காண விரைந்தனர். கணவர் தடுத்தும் அவர்கள் கேட்கவில்லை.

யமுனைக் கரையில் கண்ணன் ஒரு சோலையில் உலவிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். ஒரு கையைத் தன் தோழனுடைய தோள் மீது வைத்துக் கொண்டிருந்தான். மற்ற கையில் ஒரு தாமரையைச் சுற்றிக் கொண்டிருந்தான். காதில் ஆம்பல் தரித்திருந்தான். கழுத்தில் வனமாலை அணிந்திருந்தான். எத்தனையோ நாளாகக் கண்ணனைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலை அந்தண மாதர்கள் அன்று தீர்த்துக் கொண்டார்கள்.

மாதர்களை அவர்கள் கணவன்மார் தடுத்தும் கேளாமல் வேள்வியை விட்டுத் தன்னைக் காண வந்ததை அறிந்து கண்ணன் அவர்களுக்குப் பின்வருமாறு புத்திமதி உரைத்தான்: ''பெண்மணிகளே! அமருங்கள். நான் என்ன செய்ய வேண்டும்? என்னை நீங்கள் காண வந்தது பொருத்தமே. எனினும் வேள்வி முடியவில்லை. நீங்கள் அங்கிருக்க வேண்டும். ஆகவே உங்கள் கணவரிடம் செல்லுங்கள்'' என்றான். மாதர் திரும்பிச் செல்ல மறுத்தனர். ''உங்கள் சரணத்தை அண்டினவர் திரும்புவதென்பதும் உண்டோ? கணவனையும் மக்களையும் விட்டு உம்மையே சரண் புகுந்தோம்'' என்றனர். ''உங்கள் மனத்தை என்னிடம் அர்ப்பணம் செய்வது சரியே. ஆனால் வாழ்க்கையை விடாதீர்கள்'' என்றான் கண்ணன் மறுமுறையும். வேறு வழியின்றி அவர்கள் யாகசாலைக்குத் திரும்பிச் சென்றனர். கண்ணனும் அவர்கள் கொண்டு வந்த உணவைத் தன் தோழர்களுடன் அருந்தினான்.

வீரப்பன் எடையில்
குறைந்தவனாக இருந்
தாலும், சக்தியை சேக
ரித்துக்கொள்கிறான்.

# வீரப்பன் மல்யுத்தத்தில் வெற்றி வீரனாகிறான்



முரட்டாளான அவனு
டைய எதிராளியை
தோற்கடித்து வெற்றி
யடைந்ததற்கு காரண
மும் அதுவேதான். வீரப்
பன் க்ளூகோவிடாவிலி
ருந்துதான் அதிக வலி
மையைப் பெறுகிறான்.
நீங்கள் வேலையிலோ
அல்லது விளையாட்டிலோ
அதிகமாக உழைக்கும்
போது உங்கள் ரத்தத்
துடன் சீக்கிரம் கலந்து
கொள்ளும் அவசியமான
சர்க்கரையை
க்ளூகோவிடா
அளிக்கிறது.

★ ★ ★

க்ளூகோவிடாவை
டீயிலோ, காப்பியிலோ,
பாலிலோ அல்லது
குளிர்ந்த பானங்களிலோ
சேர்த்து அருந்துங்கள்.
ஒரு கப் அல்லது
கிளாஸுக்கு ஒன்று
முதல் மூன்று
தேக்கரண்டியளவு
க்ளூகோவிடாவை
கலந்து சாப்பிடுங்கள்
அது எளிதில்
கரையக்கூடியது.




அதிக சக்திக்கு
அவசியம் வேண்டியது

## க்ளூகோவிடா

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள் :
பாரி அண்டு கோ லிட்.



கிளாக்ஸோ லிமிடெட் குரீர்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

# கண்கள் உறங்காவோ?



அத்தியாயம் 10

## உறங்காத உள்ளம்

மாயாவி

வீணா படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தாள். அவள் கண்கள் உறக்கம் கொள்ள மறுத்தன. மூட்டைப் பூச்சி கடித்துக் கொண்டே இருந்தால் மனிதர் தூங்க முடியுமா? அவளையும் அப்பொழுது மூட்டைப் பூச்சிதான் கடித்துக் கொண்டிருந்தது. ஆனால் உடலைக் கடிக்கவில்லை; உள்ளத்தை!

கிட்டத்தட்ட இருபத்து மூன்று வருஷங்களை வடநாட்டில் கழித்து விட்டுத் தாய் நாட்டின் மடியில் நிம்மதியாகப் படுத்துறங்கும் ஆவலோடு அவள் வந்தாள். ஆனால் இங்கே வந்த முதல் நாள் முதல் இரவே அவளைத் தூங்க விடாமல் அடித்து விட்டது அந்த மூட்டைப் பூச்சி.

வீணா குழந்தையில்லை. பெற்ற தந்தை கூட அவளைக் 'குழந்தை' என்று அழைப்பதில்லை. வளர்ந்த பெண்ணுக்குரிய மரியாதையுடன் பெயர் சொல்லித்தான் அழைத்தார். ஆதலால் அவள் தன்னை அறியாதவள் என்று கருத முடியாது. இன்றில்லை; நேற்றில்லை; சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பிருந்தே அவள் தன்னை அறிவாள். தான் பிறந்தது, வளர்ந்தது, வாழ்ந்தது, வாழப் போவது எல்லாம் அவளுக்குத் தெரியும். இருந்தாலும் இன்றுதான் அவள் தன் வாழ்வின் சிக்கலான பகுதி ஒன்றை உணர்ந்தாள். ஆம், எது இன்று அவளை உறக்கம் கொள்ள விடாமல் அடித்ததோ, அந்த மூட்டைப் பூச்சி பத்து வருஷங்களுக்கு முன்பே அவள் உள்ளத்தில் புகுந்து கொண்டிருந்தபோதிலும் நேற்று வரை அவளைக் கடிக்கவில்லை. அவளுக்கு எவ்விதத் தொல்லையும் அளிக்கவில்லை. சாதுவாக உறங்கிக் கொண்டுதான் இருந்தது. இன்று அதன் உறக்கம் கலைக்கப்பட்டு விட்டது. உடனே அது தன் குணத்தைக் காட்டத் தொடங்கியது. 'நான் உறங்காதபோது உனக்கு என்ன உறக்கம்?' என்று கேட்பதுபோல் அவளைக் கடித்துக் குதற ஆரம்பித்துவிட்டது.

வீணாவின் உறங்காத உள்ளம் பல ஆண்டுகள் பின்னோக்கி ஓடி, அந்த மூட்டைப்பூச்சி தன்னுள்ளே புகுந்த நாளை நினைத்துக் கொண்டது.

அவளுடைய அந்த நினைவோட்டத்தைத் தொடர்ந்து ஓடுவதற்குமுன், அதற்கு அடிப்படையான விஷயங்கள் சிலவற்றை நாம் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஐந்தாவது வயதிலே வாழ்க்கை மூளியானவள் அவள். அப்பொழுது அவளுக்கு அறியாப் பிராயம். ஆகையால் அச்சமயம் யாரும் அக்குறையை அவள் அறிய விடவில்லை. ஒருகால் தைலம்மாள் காசிப் பூரிலே தொடர்ந்து தங்கியிருந்தால், ஒருகால் தையல்நாயகி இன்னும் சில காலம்

உயிரோடு இருந்திருந்தால், ஒருகால் சச்சிதானந்தம் விதியின் செயலுக்கு மதியை அடகு வைக்கும் குணம் படைத்தவராக இருந்திருந்தால், அந்தப் பிராயத்திலே வீணாவின் வாழ்க்கை இருள் அவளுடைய பச்சை உள்ளத்தில் பலவந்தமாகத் திணிக்கப்பட்டிருக்கும்; அந்த இருளிலே அவள் அமிழ்ந்தும் போயிருப்பாள்.

ஆனால் அதிர்ஷ்டவசமாக இறைவன் அவளை அப்பொழுதே அந்தக் கொடுமைக்கும் ஆளாக்கி விடவில்லை. அன்று கப்பல் மூழ்கிப் போனதாகத் தந்தி வந்ததும், எல்லாரும் அவளைக் கட்டிக் கொண்டு அழுதார்கள்; அவளுடைய நெற்றித் திலகத்தை அழித்தார்கள்; கூந்தல் பூவை எடுத்து எறிந்தார்கள்; சடை போட்டிருந்த கூந்தலையும் அவிழ்த்துப் போட்டார்கள். "ஏன்?" என்று அவள் கேட்கத்தான் கேட்டாள். ஆனால் விடை எல்லோரிடமிருந்தும் அழுகையாகத்தான் வெளிப்பட்டது. அவர்கள் அழுவதைப் பார்த்து அவளும் அழுதாள். ஆனால் அது பிறர் அழுததால் ஏற்பட்ட அழுகையாக இருந்ததேயன்றி, அவள் வரையில் எதையோ இழந்து விட்டு அழும் அழுகையாக இருக்கவில்லை.

இது நடந்து மூன்றாவது நாள் தையல் நாயகி உலகிலிருந்து விடை பெற்றுக் கொண்டாள். அன்றும் எல்லோரும் அழுதார்கள். அப்பொழுதும் அவர்கள் அழுகையின் காரணத்தை அவள் வினவினாள். ஆனால் அன்று விடை வெறும் அழுகையாக மட்டும் வரவில்லை. "பெத்தவளையும் உருட்டிட்டியே, அதிர்ஷ்டம் கெட்டவளே!" என்ற சொற்களும் அழுகையுடன் கலந்து வந்தன. அதை அவள் கண்ணாரவும் கண்டாள். அம்மாவைக் கட்டி எடுத்துச்சென்ற போது கதறி அழுதாள்.

இப்பொழுது அவள் இளம் உள்ளத்தில் காரணத்தோடு கூடிய கேள்வி ஒன்று எழுந்தது. "அப்படியானால் அன்று நான் யாரை உருட்டி விட்டதற்காக எல்லாரும் அழுதார்கள்?" இதை அவள் ஒவ்வொருவரிடமும் கேட்டாள். ஆனால் அப்பொழுதும் அவளுக்கு ஓர் அழுகையோ, ஒரு விசும்பலோதான் விடையாகக் கிடைத்தது.

அவர்கள் மௌனம் சாதித்து விட்ட போதிலும் அவளுக்கு ஒன்று நிச்சயமாகத் தெரிந்தது. 'இன்று அம்மா திரும்பி வராமல் போய்விட்டதுபோல், அன்றும் எங்கோ, யாரோ போய்விட்டிருக்க வேண்டும்.' இந்தச் சமாதானமே அந்த இளம் உள்ளத்துக்கு அப்பொழுது போதுமானதாக இருந்தது.

ஆனால் அது அழுகையைப் பொறுக்க வரையில்தான். ஆனால் தனக்கு ஏன் இப்பொழுதெல்லாம் தலை வாரி விடுவதில்லை? சடை போடுவதில்லை? பூச் சூட்டுவதில்லை? பொட்டு வைப்பதில்லை? இந்தக் குறைகளை அவளால் நெடு நாட்கள் பொறுத்திருக்க முடியவில்லை. பத்துப் பதினைந்து நாட்கள் வீடு ஒரே அழுகை மயமாக இருந்ததாலும், வீட்டிலுள்ள பெண்டிர் எவரும் தலை வாரிக் கொள்ளவோ, பூச் சூட்டிக் கொள்ளவோ இல்லையாதலாலும், அவள் கவனமும் அவற்றில் செல்லாமல் இருந்தது. பிறகு அத்தையைத் தவிர மீதி எல்லோரும் அலங்காரம் செய்து கொள்ள ஆரம்பித்தார்கள். அவள் மனமும் அதற்கு விழைந்தது.

அன்றெல்லாம் ஏதாவது காரியம் ஆக வேண்டுமென்றால் அவள் உடனே ராணி ஊர்மிளா தேவியிடந்தான் போவாள். "பெரியம்மா! எனக்குத் தலைவாரி, பூ வைத்து விடு!" என்றாள் அவளிடம் சென்று.

ராணி சிறிது நேரம் தயங்கினாள். பிறகு, "அம்மா இறந்து விட்டாள் இல்லையா, வீணா? அதனால் இன்னும் சில நாட்களுக்கு நீ அலங்காரம் எதுவும் செய்து கொள்ளக் கூடாது" என்று சாதுரியமாக அவளைச் சமாதானப்படுத்தி அனுப்பினாள்.

அந்தச் சில நாட்கள்என்ற கெடுவை நெடுநாட்கள் நீடிக்க முடியவில்லை. மேலும் ஒரு பத்து நாட்கள் சென்றதும் வீணா மீண்டும் அதே கோரிக்கையுடன் அவளிடம் வந்தாள். இன்று ராணி தயங்கவில்லை. வழக்கம்போல் அவளுக்குப் பின்னிப் பூச் சூட்டிப் பொட்டும் இட்டு அனுப்பிவிட்டாள். நல்லவேளை! அத்தை தைலம்மாள் அதற்குள் ஊருக்கு மூட்டை கட்டி விட்டாள். இல்லாவிட்டால் அங்கே ஒரு பெரிய ரகளையே நடந்திருக்கும்.



ஆனால் இப்பொழுதும் அங்கே சிறிது பரபரப்பு ஏற்படாமல் போய்விடவில்லை. அன்று மாலையில் வீணாவை அலங்கார பூஷிதையாகக் கண்ட சச்சிதானந்தம் திடுக்கிட்டார். "யார் கண்ணு, உனக்கு இதெல்லாம் செய்து விட்டது?" என்று அவர் உள்ளம் பதறக் கேட்டார்.

"பெரியம்மா."

சச்சிதானந்தம் உடனே அரண்மனை அந்தப்புரத்துக்குச் சென்றார்.

"ராணி அம்மா!"

அவர் அதற்கு மேல் எதுவும் கூற வில்லை. ஆனால் ஊர்மிளா தேவி புரிந்து கொண்டாள்.



"அது பச்சைக் குழந்தை, ஆனந்த் அண்ணா!" என்றாள் அவள் தொண்டை அடைக்க.

"அது சரிதான். ஆனால் உலகம் குழந்தைகளுக்கென்று இவ் விஷயத்தில் ஒரு தனிப்பட்ட நியதியைப் படைத் திருக்கவில்லையே! ஊரார் பார்த்தால் தூற்றுவார்களே!"

"அறிவுள்ளவர்கள், மனித இதயமுடை யவர்கள் தூற்ற மாட்டார்கள். அறிவற்ற அரக்கர்கள்தாம் தூற்றுவார்கள். அந்த அறிவிலிகளின் தூற்றலுக்காக நம் வீணையை இச் சிறு வயதிலே துன்பக் கட லில் தள்ளுவதா? முடியாது, அண்ணா! நீங்களில்லை, உங்கள் மன்னர் இல்லை, இந்த ஊர் முழுவதுமே என் செயலைக் கண்டித்தாலும் அச் சிறுமி யின் உள்ளத்தில், தான் குறைப்பட்டவள் என்ற நினைவு படியவிட மாட்டேன்" என்றாள் ஊர்மிளாதேவி.

"ஆயினும் என்றேனும் ஒரு நாள் அவள் அதை அறிந்துதானே ஆக வேண்டும்?" என்றார் சச்சிதானந்தம்.

"அந்த என்றேனும் ஒரு நாள் வரும் போது பார்த்துக் கொள்ளலாம். மாலையில் குளிப்பதற்குக் காலையிலிருந்தே வெந்நீரைக் கொதிக்க வைத்துக் கொண்டிருப்பது மதியீனமாகும்!"

சச்சிதானந்தம் மனித உள்ளம் படைத்தவர். ஆதலால் இவ் விஷயமாக இதற்கு மேல் ராணியிடம் வாதாட முடியவில்லை. "நாம் ஹிந்துக்கள். நம் பெரியோர் வகுத்த பாதையில் செல்ல வேண்டியவர்கள். அதுமட்டும் உங்களுக்கு நினைவிருந்தால் போதும்" என்று கூறிவிட்டுப் போய் விட்டார்.

இவ்வாறு வீணாவின் குழந்தைப் பிராயம் அவள் தனது குறையை உணர்ந்து கொள்ளாமலே கழிந்து விட்டது. அதுவும் அவள் ஒரு சமஸ்தானாதிபதியின் மகளாக வளர்ந்து வந்ததால்தான் சாத்தியமாயிற்று. சாதாரண மனிதன் ஒருவனின் மகளாக இருந்திருந்தால் சமூகம் அவளைப் பிய்த்துப் பறக்கவிட்டிருக்கும்!

வருஷங்கள் உருண்டன. வீணாவுக்கு அப்பொழுது பதின்மூன்று வயது. காசிப்பூரிலிருந்த மகாராஜா கல்லூரியில் உயர்நிலைப் பள்ளிப் பிரிவில் அவள் ஐந்தாவது படிவத்தில் படித்துக் கொண்டிருந்தாள்.

சாதாரணமாக அந்தச் சமஸ்தானத்தில் அரண்மனைக் குழந்தைகளையும், திவான் வீட்டுக் குழந்தைகளையும் எந்தக் கல்வி நிலயத்துக்கும் படிக்க அனுப்புவது வழக்கமில்லை. அவர்களுக்கென்று தனியாகப் போதகர்களை நியமித்து அரண்மனையிலேதான் கல்வி புகட்டுவது வழக்கம். மெட்ரிகுலேஷன், பி. ஏ. போன்ற பரீட்சைகளை மட்டுந்தான் அவர்கள் மற்ற மாணவ மாணவியரோடு ஒன்ருக அமர்ந்து எழுதிவிட்டு வருவார்கள்.

ஆனல் மகாராஜா மோஹன்ஸிங்தான் ஒரு தனி மனிதர் ஆயிற்றே! அவர் ஐந்தாவது வகுப்புத் தகுதியை அடையும் வரையில்தான் வீணாவுக்கு அரண்மனையிலேயே கல்வி புகட்ட ஏற்பாடு செய்தார். அதுவுங்கூட அவளுக்குத் தாய்மொழியாகிய தமிழில் பயிற்சி ஏற்பட வேண்டும் என்று சச்சிதானந்தம் விரும்பியதாலும், காசிப்பூரிலுள்ள கல்வி நிலயங்கள் எவற்றிலும் தமிழ் மொழி போதிக்கப்படாததாலுந்தான், தமிழ்ப் போதகர் ஒருவரைத் தென்னகத்திலிருந்து வரவழைத்து அவரிடமே வீணா இதர மொழிகளிலும் பயிற்சி பெற ஏற்பாடு செய்தார்.

ஐந்தாவது வகுப்புக்குரிய தகுதியை அடைந்ததும் "இனி அவள் தமிழைத் தானே கற்றுக் கொள்ளுவாள் என்று கூறி, வீணாவைத் தமது சமஸ்தானப் பள்ளியில் சேர்த்து விட்டார். அரண்மனையின் நான்கு சுவர்களுக்குள்ளே அறிவை எவ்வளவுதான் கரைத்துப் புகட்டினலும் அது வெறும் ஏட்டறிவாகவே இருக்கும்; பலரோடு கலந்து பழகிப் பெறும் கல்வியறிவுதான் பரந்த அறிவாக இருக்கும் என்பது மன்னரின் நிர்மானமான கருத்து. ஆகையால்தான் அவர் வீணாவைப் படிக்கப் பொதுப் பள்ளிக்கு அனுப்பி வைத்தார்.

வீணா இயற்கையிலேயே தந்தையின் அறிவையும், தாயின் அழகையும் கொண்டிருந்தாள். ஆகையால், அரசரின் வளர்ப்புப் பெண் என்ற சலுகைக்கு இடமின்றியே வகுப்பில் அவள் முதல் மாணவியாக விளங்கினள். அன்பார்ந்த வளர்ப்பு, ஆனந்தமான சூழ்நிலை, குறை உணராத வாழ்க்கை ஆகியவை வேறு அவள் அழகையும் அறிவையும் விரிவடையச் செய்தன. உடலுக்கும் உள்ளத்துக்கும் ஒரு தனி மெருகேற்றி விட்டன. இந்நிலையில்தான் அந்தச் சம்பவம் நடந்தது. அவள் மனத்தில் மூட்டைப் பூச்சி புகுந்து கொண்டதே, அந்தச் சம்பவம்.

பதின்மூன்று வயது. அது இளமை மொட்டு மலர்ந்து விகசிக்கும் பிராயமில்லையா? காண்பதிலெல்லாம் கவர்ச்சியும் கற்பனையும் உதிக்கும் பருவமில்லையா? என்றும் மறக்க முடியாத பொற்கால மில்லையா?

வீணாவின் வகுப்பில் விகாஸ் என்று ஒரு மாணவன் படித்து வந்தான். அவன் வீணாவைவிட ஓரிரு வயதுகள் மூத்தவன். ஆயினும் பள்ளியில் அவள் எப்படிக் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய மாணவியாக விளங்கினளோ, அவ்வாறே விகாஸும் விளங்கினன். இந்த ஒற்றுமையோடு மன்னரும், விகாஸின் தந்தை ரகுசந்திரரும் பல தொழிற்சாலைகளில் கூட்டாக முதலீடு செய்திருந்தமையால் அவர்கள் குடும்பத்தாரிடையே கூட நெருங்கிய பழக்கம் இருந்தது. இவையெல்லாந்தான் காரணமோ என்னவோ, வீணாவும் விகாஸும் விண்டால் விள்ள முடியாத நட்புடையவர்களாக இருந்தனர். அவர்கள் நட்பு இன்று நேற்று ஏற்பட்டதன்று. குழந்தைப் பிராயத்தில் வீணா அரண்மனையிலே படித்து வந்த காலந்தொட்டு ஏற்பட்டிருந்த களங்கமற்ற நட்புத்தான். ஆயினும்...

மணமற்ற மலராக இருந்தாலும் அதுவும் ஒரு நாள் மலரத்தான் மலருகிறது. வீணா என்ற அந்த முகர முடியாத மலரும் ஒரு நாள் மலர்ந்தது. விதி மட்டும் அந்தக் கோர விளையாட்டு விளையாடியிராவிட்டால் வீணாவின் மலர்ச்சி காசிப்பூர் எங்கும் விழாவாகக் கொண்டாடப்பட்டிருக்கும். ஆனல் இப்பொழுது அவள் மலர்ச்சியின் சுவடு மிக நெருங்கியவர்களுக்கு மட்டுமே தெரிந்த ஒரு சாதாரண நிகழ்ச்சியாயிற்று. ஒரு கொண்டாட்டமில்லை; கோலாகலமில்லை; விருந்தில்லை; விமரிசையில்லை. ஏன்? அந்த மலர்ச்சி பெற்ற மலருக்கு ஒரு புத்தாடைகூட உடுத்தப்படவில்லை. அது மட்டுமா? இதுவரை கவலையின்றி வீணாவை அவள் போக்குப்படி விட்டு வந்தவர்கள் மனத்திலெல்லாம், இனி அவளைக் கட்டிக் காக்க வேண்டுமே என்ற கவலை முளைத்தது. ஆனல் அவர்கள் அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை, மனத்தினுள்ளே வைத்துக் கொண்டு விழிப்புடன் இருந்தனர்.

ஆம், அவர்கள் மட்டுமென்ன? வீணா உள்பட எல்லாருமே விழிப்போடு இருக்க வேண்டிய காலம் ஆரம்பமாகிவிட்டது. அதை மற்றவர்கள் உணர்ந்தார்கள்; வீணா உணரவில்லை. அவள் தன்னை இன்னும் குழந்தையாகவே கருதிச் சக மாணவ மாணவியருடன், குறிப்பாக விகாஸுடன் பழகி வந்தாள். முன்போலவே அவனை அடிக்கடி அரண்மனைக்கு அழைத்து வந்தாள்; அல்லது தான் அவன் வீட்டுக்குச் சென்றாள். உடன் அமர்ந்து படித்தாள்; பேசிச்சிரித்தாள்; விளையாடிக் களித்தாள்.

மன்னரும் ராணியும், ஏன்? சச்சிதானந்தங்கூட விழிப்போடு இருந்தபோதிலும், இவர்கள் பழக்கத்துக்குத் திரையிடத் துணியவில்லை. கண்காணிப்பு இருந்ததால் கட்டுப்பாடு தேவையில்லையென விட்டு விட்டனர்.

ஆனால் வேறோர் இடத்திலிருந்து அந்தக் கட்டுப்பாடு வந்தது. மிகக் கனமான இரும்புத் திரை ஒன்று அவர்கள் நட்பின் நடுவே விழுந்தது. அந்த ஆண்டுக் கோடை விடுமுறை முடியும் தறுவாயில் ஒருநாள் விகாஸ் விசனத்துடன் வீணாவிடம் வந்து, "போய் வருகிறேன், வீணா! இனி நான் ஜோதிஷ்நகர் பள்ளியில் படிக்கப் போகிறேன்" என்றான்.

ஜோதிஷ்நகர் காசிப்பூரிலிருந்து சுமார் நூறு மைல் தூரத்திலிருந்த மற்றொரு சமஸ்தானம். தவிர, அவ்வூர்ப் பள்ளி மிகவும் மோசமானது. அங்கே சரியாகப் படிப்பே சொல்லித்தரமாட்டார்கள் என்பது பிரசித்தம். ஆகையால் விகாஸ் அங்கே படிக்கப் போவதாக அறிந்ததும் வீணா வியப்புற்றவளாய், "ஏன், விகாஸ்?" என்று வினவினாள்.

"ஏனென்று எனக்கே தெரியாது. திடீரென்று அம்மாவும், அப்பாவும் இப்படி முடிவு செய்திருக்கிறார்கள். அங்கே என் சித்தி—அம்மாவின் தங்கை—இருக்கிறாள். அவள் குழந்தைகளோடு அப் பள்ளியிலேயே படித்து வர வேண்டுமாம். நாளையே நானும், அப்பாவும் புறப்படப் போகிறோம்." விகாஸுக்கு நெஞ்சைக் கட்டியது. அவன் கண்களில் கண்ணீர் தளும்பியது.

இச்சமயத்தில் ஊர்மிளா தேவி அங்கே வந்தாள். அவர்கள் அரண்மனையில் சந்தித்துக் கொள்ளும் போதெல்லாம் அவள் இப்படித் திடீர் திடீரென்று அவர்களைக் கண்காணிக்க வருவது வழக்கம். "ஏன் அழுகிறான் விகாஸ்?" என்று அவள் கேட்டாள்.

வீணா விஷயத்தைச் சொன்னாள். ஆனால் ராணி இதைக் கேட்டதும் வியப்படையவில்லை; அதிர்ச்சியடைந்தாள்.

"நான் இப்பொழுதே அஹல்யா மாமியிடம் போய்க் கேட்கிறேன், ரகுசந்திர மாமாவிடம் போய்ச் சொல்லுகிறேன். எதற்காக அவர்கள் விகாஸை இந்த நல்ல பள்ளியை விட்டு மோசமான பள்ளிக்கு அனுப்ப வேண்டும்? எதற்காக எங்களை இப்படித் திடீரென்று பிரிக்கவேண்டும்?" என்று வீணா வேகத்தோடு பேசினாள்.



வேலூர் கூப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷனைச் சேர்ந்த திரு ஆர். சேஷாத்திரிக்கும் சௌபாக்கியவதி பிரேமாவுக்கும் ஏப்ரல் 27-ந் தேதி வேலூரில் விமரிசையாக விவாகம் நடந்தது.

"அதெல்லாம் அவர்கள் குடும்ப விஷயம் வீணா. நாம் இம்மாதிரி விஷயங்களில் தலையிடக் கூடாது" என்று ஊர்மிளா தேவி அவளைச் சமாதானப்படுத்தினாள்.

பிறகு அவள் விகாஸிடம் திரும்பி, "எந்தப் பள்ளியானால் என்ன விகாஸ்? உன்னைப் போன்ற கெட்டிக்காரப் பையன்கள் எங்கே படித்தாலும் நன்றாகப் படிப்பார்கள். போய் வா, தம்பி. வீணாவைப் பற்றிக் கவலைப்படாதே. அவளும் இங்கே நன்றாகப் படிப்பாள்" என்றாள்.

விகாஸ் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான். ஆனால் வீணாவின் மனம் சமாதானம் அடையவில்லை.

"இரு விகாஸ், நானும் வருகிறேன். உன் அம்மாவிடம் எதற்காக இப்படிச் செய்தார்கள் என்று கேட்கிறேன்" என்று அவள் அவனுடன் புறப்பட முயன்றாள்.

ஊர்மிளா தேவி அவள் கையைப்பிடித்து நிறுத்தி, சிறிது கோபத்துடன் சொன்னாள்: "இதோ பார், வீணா. இது அவர்கள் குடும்ப விஷயம்; நாம் தலையிடக் கூடாது என்று நான் சொல்லவில்லை......?"

"இல்லை, பெரியம்மா! எனக்கு இதன் காரணம் தெரிய வேண்டும்."

"காரணந்தானே? அது எனக்குத் தெரியும்; சொல்லுகிறேன். நீ. போய் வா, விகாஸ். நன்றாகப் படி; என்ன?"

"ஆகட்டும்" என்று தலையாட்டிவிட்டு விகாஸ் போய்விட்டான். அவன் உருவம் மறையும் வரையில் கண்களில் நீர் சோரப் பார்த்திருந்த வீணா, பிறகு ராணி



சென்ற ஏப்ரல் 26-ந் தேதியன்று, பம்பாய்த் தொகுதி தாதரில் பரத நாட்டியக் கலை விருந்தளித்துப் பல ரசிகர்களுடைய பாராட்டுதல்களைப் பெற்ற குழந்தைகள் சரஸ்வதி, லலிதா சீதாலட்சுமி இம்மூவரும் தானாவில் வசிக்கும் திரு சி. வி. சுப்பிரமணியத்தின் புதல்விகளாவர். டோம்பிவ்லி பகுதியிலுள்ள நடன ஆசிரியர் திரு என். ஆர். சேஷாத்திரியிடம் நடனம் பயின்றவர்கள்.

---

யிடம் திரும்பி, "சொல்லுங்கள், பெரியம்மா!" என்றான்.

"அவனை அங்கே அனுப்புவதற்கு நீதான் காரணம், வீணா!" ராணியின் குரல் தழுதழுத்தது.

"நானா?"

"ஆமாம்; நீ இன்னும் உன்னைக் குழந்தை என்று நினைத்திருக்கிறாய். ஆனால் பருவம் உன்னைப் பெரியவளாக்கி விட்டதை நீ அறியவில்லை."

"பருவம் என்னைப் பெரியவளாக ஆக்கி விட்டால் என்ன? அதற்காக அவனை ஏன் இங்கிருந்து அனுப்ப வேண்டும்?"

"அவனும் வயதடைந்த பிள்ளை. நீங்கள் ஒட்டுறவுடன் பழகுகிறீர்கள்."

"பழகினால்.........? பெரியம்மா! எங்களுடைய கட்பு தூய சகோதர பாவம் நிறைந்தது; களங்கமற்றது, பெரியம்மா!" என்று வீணா வெடித்தாள்.

"அந்தச் சகோதர பாவத்தைப் பருவக் காற்று திசை திருப்பி விடுமோ என்ற பயம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கலாம்."

வீணா அவளை முழுவதும் பேச விடவில்லை. "திசை திருப்பி விட்டால்தான் என்ன? நான் ஒன்றும் பேயோ பிசாசோ இல்லையே! அவர்கள் தகுதிக்குத் தாழ்ந்தவளும் இல்லையே?" என்று வெடுக்கென்று கூறினாள்.

ராணிக்கு மற்றோர் அதிர்ச்சி. விரும்பியிருந்தால் அவள் இன்னுங்கூட ஒரு பொய்ச் சமாதானத்தைக் கூறி வீணாவின் நெஞ்சக் குறுகுறுப்பைத் தணித்திருக்க முடியும். 'ஒருவேளை அவர்களுக்கு உன்னை மருமகளாக்கிக் கொள்ள விருப்பமில்லை போலும். என்ன இருந்தாலும் நீ தென்னாட்டவள்; தாங்கள் வடநாட்டவர் என அவர்கள் கருதியிருக்கலாம்' என்று சொல்லி அவள் வாயை மூடியிருக்க முடியும். ஆனால் அவளை அவ்வாறு பொய் பேச விடவில்லை, வீணாவிடமிருந்து சற்றுமுன் வந்த சொற்கள். அவை அவளுடைய மனம் முதிர்ந்து விட்டதன் முரசொலியாகப் பட்டன ராணிக்கு. இனி அவள் உண்மையை ஒளிக்க முடியாது. முன்பொரு சமயம் அவள் சச்சிதானந்தத்திடம் கூறிய அந்த 'என்றாவது ஒருநாள்' இன்று வந்துவிட்டது.

அரண்மனையின் அகன்ற வாயில் திண்ணையில் அவர்கள் நின்று கொண்டிருந்தனர். ஊர்மிளாதேவி மெல்ல வீணாவின் கையைப் பிடித்து அருகிலிருந்த பெரிய ஸோபா ஒன்றில் உட்கார்த்தித் தானும் அமர்ந்தாள். வெளியே உச்சி வெய்யில் மண்டையைப் பிளந்தது. அதைவிடப் பலமாக ஊர்மிளாதேவியின் உள்ளத்தைப் பிளந்தது அவள் வெளியிட வேண்டியிருந்த செய்தி. எட்டு வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட சாவோலையை இன்று அவள் படிக்கப் போகிறாள். அதன் விளைவுகள் எப்படி எப்படி இருக்கப் போகின்றனவோ? நேற்றுவரை கவலையற்ற பறவையாக இன்பப் பூஞ்சோலையில் பறந்து திரிந்த இந்தப் பைங்கிளியின் தலையில் அவள் ஒரு பேரிடியைப் போடப் போகிறாள். அந்த இடியை அவள் தாங்கி மீளுவாளா? அல்லது......? தாய்மையின் கடமைதான் எவ்வளவு கடினமானது!

வீணாவுக்கு அவள் தயக்கம் வேதனையை அளித்தது. "சொல்லுங்கள், பெரியம்மா! ஏன் பேச மாட்டேன் என்கிறீர்கள்? விகாஸுக்கு நான் ஏற்றவளில்லையா?" என்று அவள் துளைத்தாள்.

"நீ யாருக்குமே ஏற்றவள் இல்லை, கண்ணே!" என்று தேம்பினாள் ராணி.

"என்ன? ஏன்?"

"உனக்கு ஏற்கெனவே கலியாணம் ஆகிவிட்டது."

வீணாவால் இதை நம்ப முடியவில்லை. "எனக்குக் கலியாணம் ஆகிவிட்டதா? எப்பொழுது? யாருடன்?"

"உன் அத்தானுடன்."

"அத்தானுடனா?" வீணாவுக்கு மயில் வண்ணனையே நினைவில்லை என்றால் அவனுடன் தனக்கு நடந்த கல்யாணம் எப்படி நினைவிருக்கும்? முதலில் அது கலியாணமென்றே அவளுக்குத் தெரியாதே! என்றோ ஒருநாள் அவனையும் தன்னையும் ஒன்றாக உட்கார்த்தி, பெரியவர்களாக ஏதோ செய்தது மட்டுந்தான் அவள் நினைவில் நின்றது. அதுதான் கலியாணமா? அப்படியானால் அதன் பிறகு அந்த அத்தான் எங்கே? எங்கே? எங்கே?

இந்தக் கேள்வி அவள் உள்ளத்திலிருந்து வாய் வழியாகக் குதித்தது.

"உன் மஞ்சளையும் குங்குமத்தையும் பறித்துக் கொண்டு அவன் போய்விட்டான், வீணா" என்று தொடங்கி ராணி அந்தத் துயரச் சம்பவத்தை அவளுக்கு விவரமாகக் கூறினாள். பிறகு சிறு வயதிலேயே இந்த அவலச் செய்தியை அவள் அறியக்கூடாது என்பதற்காகத் தாங்கள் ஒரு மங்கலப் பெண்ணுக்குரிய அலங்காரங்களை அவளுக்கு அளித்து வந்ததையும் சொன்னாள்.

இந்தச் செய்திதான் வீணாவின் உள்ளத்தில் கூட்டைப்பூச்சியாக ஏறி அமர்ந்து கொண்டது. அப்படியானால் அவளுடைய நெற்றித் திலகமும், கூந்தல் மலரும் போலி அலங்காரங்களா? முறையற்ற சின்னங்களா? இப்பொழுது அவளுக்கு, விகாஸின் பெற்றோர் அவனை இங்கிருந்து நூறு மைல்களுக்கு அப்பாலிருந்த மோசமான பள்ளி ஒன்றுக்கு ஏன் அனுப்பத் துணிந்தார்களென்பது விளங்கி விட்டது.

சடாரென்று அவள் தன்னை அணைத்துக் கொண்டிருந்த ராணியின் கரங்களை விலக்கி விட்டு எழுந்தாள். அவள் வலக்கை நெற்றிப் பொட்டை அழித்தது; இடக்கை தலைப்பூவை எடுத்து எறிந்தது.

"ஐயோ, வீணா!" என்று சோகத்துடன் அலறினாள் ராணி.

ஆனால் வீணா அலறவில்லை; கதறவில்லை. அமைதியுடன் சொன்னாள்: "அன்றே உங்கள் கையால் இதைச் செய்திருந்தால் இன்று அநாவசியமாக ஒரு பையன் தன் பெற்றோரைப் பிரிய நேரிட்டிராது. அழாதீர்கள், பெரியம்மா. என்னை நான் தெரிந்து கொண்டேன். இனி என் காரணமாக எந்த ஆண்மகனுக்கும் எவ்விதக் கொடுமையும் ஏற்படாது!"

அன்று தனக்குத் தாய்க்குத் தாயாக விளங்கியவளிடம் கொடுத்த உறுதிமொழியை இன்றுவரை அணுவும் பிசகாது காப்பாற்றி வந்தாள் வீணா. என்றென்றும் காப்பாற்றி வரவும் உறுதி கொண்டிருந்தாள். ஆனால் அவள் உள்ளத்தில் உறங்கிக் கொண்டிருந்த கூட்டைப்பூச்சி இன்று உசுப்பப்பட்டு விட்டதே! அது அவளைக் குடை - குடை என்று குடைகிறதே!

அதிலும் அது ஒரே இடத்தில் கடித்துக் கொண்டிருந்தால்கூட அவள் பொருட்படுத்தியிருக்க மாட்டாள். ஆனால் அது அவள் மனத்தின் இரண்டு நுட்பமான பகுதியில் மாறி மாறிக் கடித்து, உள்ளத்தில் வேதனை தந்தது.

அந்த வேதனைகளில் ஒன்றை அவள் எதிர்பார்த்துத்தான் இங்கு வந்தாள். ஏறக்குறைய பத்து ஆண்டுகளுக்கு முன்பே தான் வாழ்விழந்தவள் என்பதை அறிந்து கொண்டுவிட்ட போதிலும், அதற்கேற்ற கோலம் பூண்டுவிட்ட போதிலும், அதைக் காசிப்பூரில் யாரும் சுட்டிக் காட்டிக் கொண்டே இருக்கவில்லை. எனவே நீடித்த நோயாளி தன் நோயின் வேதனையைத் தன்னை அறியாமலே மறந்து விடுவது போல் அவளும் அதைக் கிட்டத்தட்ட மறந்த நிலையிலே இருந்தாள். வர்ணப் பொட்டும், வாசமலர்களும், நகையும் நட்டும் இல்லாத நிலையே அவளுக்குச் சகஜமாகி விட்டது.

ஆனால் படிப்பை முடித்துக் கொண்டு கிராமத்துக்குப் புறப்பட்ட போது, ஊர்மிளா தேவி அவளை அணைத்துக் கொண்டு கூறிய புத்திமதிகள், சமூகத்தில் தான் ஒரு விலக்கப்பட்ட நோயாளி என்பதை அவளுக்கு நினைவூட்டின. ராணி சொன்னாள்: "உன் நிலையை உணர்ந்து கொண்டு, உலக வழக்கோடு ஒத்துப் போனதை இந்தப் பத்தாண்டுகளாகக் கண்டதால்தான் உன்னை ஊருக்கு அனுப்பத் துணிவு கொண்டேன், வீணா! ஆயினும் ஒன்று மட்டும் உன் நினைவில் இருக்க வேண்டும். நேற்றுவரை நீ நகரத்தில் இருந்தாய்.!" இன்று கிராமத்துக்குப் போகிறாய். நகரத்துச் சூழ்நிலை வேறு; கிராமத்துச் சூழ்நிலை வேறு. இது நாகரிகம் பெருத்த இடம். ஆதலால் சமூகத்தின் சட்டதிட்டங்களுக்கு ஓரளவுதான் மதிப்பு உண்டு. ஆனால் கிராமாந்தரங்

## ✲ அருள் வாக்கு ✲

மகான்கள் எல்லோரும் ஆண்டவனையே எண்ணி, அவன் புகழைப் பாடுவது; அவனுக்காகவே வாழ்வது; மற்ற எல்லாவற்றையும் துறந்து விடுவது என்று வாழ்ந்தார்கள். வேறு குடும்பக் கவலை, காரியம் அவர்களுக்கு இல்லை. எப்பொழுதும் இடைவிடாமல் அல்லும் பகலும் அனவரதமும் ஆண்டவனை நினைந்து வாழ்ந்தனர். அப்பேர்ப்பட்ட இறைவனுக்காகத்தானே நாமும் வாழ வேண்டும். மற்ற நிலையற்ற பொருள்களுக்காக வாழ்ந்து என்ன பயன்? துக்கமும், ஏமாற்றமும் தான் மிச்சம். இதையே தாயுமானவர் உலகமெல்லாம் பொய், ஆண்டவனை அறிவது ஒன்றுதான் உண்மை என்று பாடியுள்ளார்.

-ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

## ☆ அருள் வாக்கு ☆

ஈசுவரனை வேதம் வர்ணிக்கையில் அவருக்குக் கையில்லை, காதில்லை; கண்ணில்லை. ஆனால் எல்லாவற்றையும் செய்பவர்; கேட்பவர், பார்ப்பவர் என்று சொல்லியிருக்கிறது. அவருக்கு ஆதியுமில்லை; அந்தமுமில்லை. ஸ்படிக லிங்கம் அவரை இன்னும் தெளிவாகத் தெரிவிக்கிறது. நாம் எப்படி நினைக்கிறோமோ அப்படி அவர் ஆகிவிடுவார் என்பதையும் காட்டுகிறது. ஸ்படிக லிங்கத்தை ரோஜாவினால் அர்ச்சித்தால் ரோஜாப்பூ நிறமாக ஆகிவிடும். வில்வத்தால் அர்ச்சனை செய்தால் பச்சையாகத் தெரியும். அவரை மானும் மழுவும் திரிசூலமும் உடையவராக தியானித்தால் அவ்விதமே தோன்றுவார். சங்கு சக்கர கதாபாணியாக நினைத்தால் அவ்விதமே காட்சி அளிப்பார்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

களில் சமூகப் பழக்க வழக்கங்கள்தான் முழுக்க முழுக்க ஆட்சி செலுத்தும். எனவே உனக்குக் கட்டுப்பாடுகளும் சிறிது அதிகமாகவே இருக்கும். அவற்றை நீ பொறுத்துக் கொள்ள வேண்டும்.''

ராணியின் இந்த அறிவுரை, தக்க முன்னேற்ட எச்சரிக்கையாக அமைந்ததால் வீணை அங்கே ஓரளவு மூட்டைக்கடியை எதிர்பார்த்துத்தான் வந்தாள். வந்த உடனே அது அவளுக்குக் கிட்டவும் கிட்டியது. அத்தை தைலம்மாள் அவளைக் கட்டிக் கொண்டு அழுத அழுகையில், பாடிய பிலாக்கணத்தில், பின்னர் வீட்டுத் தோட்டத்துக்குப் போகக் கூடாதென்று விதித்த தடையில், இவற்றிலெல்லாம் அந்த மூட்டைக்கடியை அவள் அனுப

பெண்கள்! இரண்டு வெவ்வேறு வாழ்க்கை வாழ்வார்கள். ஒன்று காதல் வாழ்க்கை; மற்றொன்று கடமை வாழ்க்கை. காதல் வாழ்க்கையில் அவர்கள் இன்பம் பெறுவார்கள். கடமை வாழ்க்கையில் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாவார்கள். வீணை வைப்போல் தொழிலிலோ, வேலையிலோ ஈடுபட்டவர்களாக இருந்தால், அந்தக் கடமைக்காக ஓடாக உழைப்பார்கள். ஆனால் அந்த உழைப்பினால் ஏற்படும் அயர்வைக் காதல் வாழ்க்கையில் ஈடு செய்துகொண்டு விடுவார்கள்.

ஆனால் வீணைவுக்கு இருந்ததெல்லாம் ஒரே ஒரு வாழ்க்கைதான்; கடமை வாழ்க்கைதான். எனவே காதல் என்ற சொல்லுக்குக்கூட இன்றுவரை அவள் தன் உள்ளத்தில் இடம் அளித்ததில்லை. தன் உடல் தனது கடமை வாழ்க்கைக்காக மட்டும் படைக்கப் பட்டிருப்பதாகவே அவள் கருதியிருந்தாள். ஆனால் அந்த உடலிலே வேறொரு காந்த சக்தி இருக்கிறது; அது மின்மினிப் பூச்சியைப் போல் தனக்குச் சத்துருவைத் தானே அழைத்து விடும் என்பதை இன்று தானுவதியைப் பற்றி மாலா கூறிய விமரிசனத்தைக் கேட்டபோதுதான் அவள் உணர்ந்தாள். ''எந்த வீட்டில் எந்தப் பெண் வந்திருக்கிறாளென்று எப்படித்தான் அவனுக்கு மூக்கில் வேர்க்குமோ?'' என்ற அவள் கூற்றும், அதற்கு ஏற்றவாறு அவன் போகும்போது தன்னைப் பார்த்த பார்வையும், சிரித்த சிரிப்பும், இப்பொழுது தாங்க முடியாத மூட்டைக் கடியாக அவள் உறக்கத்தைக் கெடுத்தன.

சச்சிதானந்தத்தின் எச்சரிக்கை வேறு இந்த மூட்டைக்கடியோடு அவளுடைய உள்ளத்தை ஊசியாகக் குத்தியது. ''இதை விரோதிச்சுக்கிட்டா என்ன செய்யுமின்னு சொல்ல முடியாது......''

ஆம்; அவள் அவனை விரோதித்துக் கொள்ளக் கூடாது; நல்லதனமாகவே நடந்துகொள்ள வேண்டும். கழைக்கூத்தாடி கம்பத்தில் கயிறு கட்டி நடப்பது

அகிலன் எழுதும்

புதிய
சரித்திர நாவல்

# வேங்கையின் மைந்தன்

கல்கி

ஜூலை 5 இதழில்

ஆரம்பமாகிறது

# கடமை

**ஸ்ரீவத்ஸன்**

"வாசு! இன்றைக்காவது அவனைக் கேட்டாயா?"

"பெரியம்மா, எப்படிக் கேட்பது? இதுவரையில் பத்துப் பன்னிரண்டு பேரைக் கேட்டாகிவிட்டது. எல்லோரும் மாட்டேன் என்று சொல்லிவிட்டார்கள். இவன் மட்டும் சம்மதிக்கப் போகிறானா, என்ன?"

"கேட்டுப் பாரேன்! நீயாகவே அவன் சம்மதிக்க மாட்டான் என்று நினைத்துக் கொள்வானேன்?"

"எனக்கு நம்பிக்கையே இல்லை. எதற்கும் கேட்டுப் பார்த்து விடுகிறேன்!"

"பையனைப் பார்த்தால் நல்ல இரக்க குணமுள்ளவனாக இருக்கிறான். கேட்டுப் பார். அவனும்தான் பாமாவுடன் நன்றாகப் பழகுகிறான்."

"இன்றிரவு எப்படியும் அவனைக் கேட்டு விடுகிறேன்."

"எப்படியாவது பாமா கழுத்தில் ஒரு தாலி ஏறிவிட்டால் போதும்."

வாசு வெளியே கிளம்பிப் போய் விட்டான். அவன் பெரியம்மா அடுக்களையில் புகுந்து கொண்டாள்.

✻

அவர்கள் வீட்டின் முன்புற அறையில் வசித்து வந்த ரங்கன் அன்றிரவு வெகு நேரம் கழித்து வந்தான்.

உள்ளே வந்து அறையைத் திறந்தான். உடனே பாமாவும் உள்ளே வந்தாள்.

"ரங்கு மாமா! நீயா என்னைக் கலியாணம் செய்துகொள்ளப் போறே?"

ரங்கன் சிரித்தான்.

"ஏன் பாமா அப்படிக் கேட்கிறே?"

---

பித்துப் பிடித்த பெண்ணை வாழச் செய்வதற்காக அவன் செய்த தியாகம் பெரிதுதான். ஆனால், அந்தப் பெண் செய்த தியாகமோ?

---

"பின்னே எங்க பெரியம்மா 'அந்தப் பிள்ளையாண்டானைப் பாமாவுக்குப் பாரேன்' என்று சொன்னாளே!"

"உனக்குச் சம்மதமா, பாமா?"

"நீங்க பைத்தியமாச்சே! யார் கல்யாணம் செய்து கொள்வார்கள்?"

"நானா பைத்தியம்?"

"பின்னே நானா?" - இப்படிக் கேட்டவள் வாய் விட்டுச் சிரித்தாள்.

"நீ போ, பாமா! எனக்குப் படுத்துக் கொள்ளணும்."

"ரங்குமாமா பைத்தியம், ரங்குமாமா பைத்தியம்" என்று அவள் அவனைப் பழித்துக் கொண்டே போய் விட்டாள்.

"பாவம்! சித்த ஸ்வாதீனம் இல்லாத பெண்! வாசு எப்படித்தான் எட்டு வருடங்களாகச் சித்த ஸ்வாதீனம் இல்லாத தங்கையை வைத்துக் காப்பாற்றி வருகிறானோ?"

✻

ரங்கன் படுக்கையை உதறிப் போட்டுக் கொண்டு படுத்தான்.

அதே சமயம் வாசு அறைக்கு வந்தான்.

"வாங்க, சார்!"

"ரங்கன்! உங்களிடம் என் குடும்ப விஷயமாய்க் கொஞ்சம் பேசணும்."

"தாராளமாய்!"

வாசு பேச ஆரம்பித்தான்:

"மிஸ்டர் ரங்கன்! என் தங்கை பாமாவுக்குச் சித்த ஸ்வாதீனம் இல்லை என்பதை அறிவீர்கள். எட்டு வருட காலமாக இப்படி இருக்கிறாள். அவள் விஷயம் தான் என் உடலில் புரையோடிய புண்ணாக இருக்கிறது. இதே பம்பாயில்தான் என் அப்பா இருந்து வந்தார். நல்ல கம்பெனியில் வேலை பார்த்து வந்தார். நானும் பாமாவும்தான் அவர்களின் குழந்தைகள்.

எனக்கு இருபது வயதானதும் அப்பா ஒரு கம்பெனியில் என்னை வேலைக்கு அமர்த்தினார். கம்பெனியின் அதிபர் ஒரு மராட்டியர். அவர் முகத்தில் நான் விழித்தது ஒரு பெரிய அதிர்ஷ்டம். இன்று நான் அதே கம்பெனியில் முந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கும் மானேஜர்.

என் தங்கை பாமாவுக்கு அப்பொழுது பன்னிரண்டு வயது நடந்து கொண்டிருந்தது. சில காலமாகவே என் அப்பாவின் போக்கில் ஒரு மாறுதலை அம்மாவும் நானும் கண்டோம். கடைசியில் என் அப்பா சில மாதங்களாகவே வீட்டைத் திரும்பிப் பார்ப்பதில்லை.

விஷயம் இதுதான்.

அப்பாவுக்கும் ஒரு குஜராத்திப் பெண்மணிக்கும் தொடர்பு உண்டாகி எந்நேரமும் அவர் அங்கேயே கிடந்தார்.

அம்மா முட்டிக் கொண்டாள்; மோதிக் கொண்டாள். அப்பாவின் காலில் விழுந்து கெஞ்சினாள்.

பலன் அப்பா வீட்டுக்கு வருவதையே நிறுத்தி விட்டார். வீட்டுச் செலவுக்கு மட்டும் பியூன் மூலம் பணம் அனுப்பி வந்தார்.

பத்து வருடங்கள் முன்பு இதனால் அம்மாவுக்குப் பைத்தியம் பிடித்து, இரண்டு வருடங்கள் கழித்து இறந்து விட்டாள். அப்பொழுதுகூட அப்பா திரும்பிப் பார்க்க வில்லை. நல்ல வேளையாகக் கிராமத்தில் இருந்த என் பெரியம்மா இங்கு வந்தாள். பெரியம்மா சிறு வயதிலேயே கணவனை இழந்தவள். கையில் கொஞ்சம் காசு உண்டு. அவள் தான் இதுவரையில் எங்களைப் பாதுகாத்து வருகிறாள். மறுவருடம் அப்பாவும் காலமானார். அம்மா இறக்கும் போது பாமாவுக்கு வயது பதின்மூன்று.

'பாமா! என் கதி உனக்கும் வரக் கூடாது, அம்மா! நல்ல கணவனாக வந்து உன்னை நன்றாக வைத்துக் கொள்ள வேணும். அதைக் கண்ணால் பார்க்காமல் போகிறேன். வாசு! அவளை நல்ல கணவனாக, மனைவியை விட்டுப் பிரியாத கணவனாகப் பார்த்து மணம் செய்து கொடு' என்றாள்.

பைத்தியமா யிருந்தாலும் சாகும் போது சுயபுத்தியுடன் பேசினாள்.

அம்மா இறந்து விட்டதும் சில காலம் பாமா பித்துப் பிடித்தாற் போல் இருந்தாள்.

விவரம் தெரிந்தும், தெரியாமலும் இருக்கும் பருவம் அல்லவா?



அப்பா அம்மாவை நன்றாக வைத்துக் கொள்ளாததால்தான் அம்மாவுக்குப் பைத்தியம் பிடித்தது என்பதை அவள் நினைத்து நினைத்துப் பார்த்தாள்.

திடீரென்று 'யாரடா என் கணவன்? என்னை நன்றாக வச்சுப்பியா? போடா, போ! கணவனும். உன்னைக் கலியாணம் பண்ணிக்க மாட்டேண்டா' என்று உரக்கக் கத்தி இடி இடி யென்று சிரித்தாள்.

அன்று பிடித்த பைத்தியம் வருடம் எட்டாகியும் இன்னும் தெளியவில்லை. மனோதத்துவ டாக்டரிடம் கொண்டுபோய்க் காட்டினேன்.

'மிஸ்டர் வாசு! இது பைத்தியமில்லை. ஒருவித மனப்பிராந்தி. நீர் நல்ல பையனாகப் பார்த்து அவளுக்கு மணம் செய்து வையும். அவன் அவளை நன்றாக வைத்துக் கொண்டால் அவள் மனத்தில் தன் கணவன் நன்றாக வைத்துக் கொள்கிறான் என்ற உணர்வு

ஏற்பட்டதும் தன்னாலே இந்த மனப் பிராந்தி போன இடம் தெரியாமல் மறைந்து போய்விடும்' என்றார்.

'பைத்தியத்தை யார் ஸார் மணந்து கொள்வார்கள்?' என்றேன்.

'மிஸ்டர் வாசு! கவனமாய்க் கேளும். அவளுக்குக் கணவனாக வருபவனிடம் ஒளிவு மறைவு இல்லாமல் எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டும். ஏமாற்றிச் செய்து விட்டால் அனர்த்தம்தான். ஆதலால் நல்ல பையனாகப் பார்த்து அவனிடம் விளக்கமாகச் சொல்லிக் கலியாணம் செய்து வையும்' என்றார்.

"மிஸ்டர் ரங்கன்! இவ்வளவு வருட காலமாக அவளுக்கு நல்ல கணவனைத் தேடுவதைத் தவிர வேறு எதையும் நான் செய்யவில்லை. நாலைந்து நண்பர்களிடம் என் நிலையையும் பாமாவின் நிலையையும் சொன்னேன். எல்லோரும் பரிதாபப் பட்டார்களே தவிர, ஒருவராவது அவளை மணக்க முன் வரவில்லை.

அலுத்துச் சலித்துவிட்ட நான் இது பற்றிப் பிரஸ்தாபிப்பதையே விட்டு விட்டேன். ஆனால், மிஸ்டர் ரங்கன்! உங்களைப் பார்த்ததும் என் மனத்தில் ஒருவித நம்பிக்கை உண்டாகி விட்டது. நீங்கள் என்னைக் கைவிட்டுவிடாதீர்கள்."

இப்படிச் சொன்ன வாசு ரங்கனின் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டான்.

ரங்கன் திடுக்கிட்டான்.

"எழுந்திருங்கள், வாசு!"

"முடியாது. கைவிடமாட்டேன் என்று சொல்லுங்கள்."

"வாசு! நீங்கள் நினைப்பதுபோல்..." ரங்கன் மென்று விழுங்கினான்.

வாசு ரங்கனைப் பேசவிடவில்லை.

"வாக்குறுதி கொடுங்கள், ரங்கன்!"

"எழுந்திருங்கள். பாமாவைக் கலியாணம் செய்து கொள்கிறேன். ஆனால் ஊருக்கு விவரம் எழுதித் தெரிவித்து, பிறகுதான் கலியாணத்துக்கு நாள் குறிப்பிட முடியும்."

"ரங்கன்! நான் பாக்கியசாலி. நீங்கள் என் குல தெய்வம்" வாசு உணர்ச்சிப் பெருக்குடன் பேசினான்.

✽

ரங்கன் பாமாவை மணந்து கொண்டு விட்டான்.

ஆறுமாத காலம் ஓடிவிட்டது.

ரங்கன் தன் அன்பு முழுவதையும் பாமாவிடம் காட்டினான். பாமாவுக்குப் புத்தி தெளிந்து வருவது அவள் பேச்சிலிருந்து தெரிய வந்தது. ஒருமாதமாக அவள் புத்தி நன்றாகத் தெளிந்து விட்டது.

அந்தச் சமயம்தான் ரங்கனை மறுபடியும் தமிழ் நாட்டுக்கே, அதாவது கடலூருக்கு மாற்றினார்கள்.

அன்று அவன் பூனாவில் உள்ள சில நண்பர்களிடம் விடைபெற்றுக் கொண்டு வருவதற்காகப் போயிருந்தான்.

அன்றிரவு நண்பர்கள் வற்புறுத்தியதால் அங்கேயே தங்கிச் சாப்பிட்டு விட்டு மறுநாள் காலையில்தான் தன் வீட்டுக்குத் திரும்பினான்.

✽

ரங்கன் வீட்டுக்குள் நுழைந்தான்.

"ஐயோ, ரங்கன்! பாமாவைக் காணோமே!" என்று கதறினான் வாசு.

அதிர்ச்சியடைந்தான் ரங்கன்.

"நேற்று நீ போனதும் பாமா உன் பெட்டியை யெல்லாம் ஒழித்துக் கொண்டிருந்தாள்.

விடியற்காலம் எழுந்து வந்தேன்.

அவள் அறைக்கதவு திறந்து கிடந்தது.

அவள் அவ்வளவு அதிகாலையில் எழுந்து விட்டாளா என்று பார்க்க உள்ளே போனேன். அவளைக் காணோம்.

மேஜையின்மீது இந்தக்கடிதம் இருந்தது" என்று சொல்லி ஒரு கடிதத்தை எடுத்துக் கொடுத்தான் வாசு.

முத்து முத்தான எழுத்தில் பாமா எழுதியிருந்தாள்.

"அநேக நமஸ்காரம்,

என்னை உத்தேசித்து என் பைத்தியம் நீங்கி நானும் கணவனுடன் வாழ்க்கை நன்றாக நடத்த வேண்டும் என்று என் அண்ணா தங்கள் காலைக் கெட்டியாகப் பிடித்தான்.

மனமிரங்கி என்னை ஏற்றுக் கொண்டீர்கள். ஆனால் நேற்று உங்கள் பெட்டியைக் குடைந்தபோது அகப்பட்ட ஒரு கடிதம்—தாங்கள் என் அண்ணா விலாசமிட்டு எழுதி வைத்திருந்த கடிதம், தங்கள் தியாகத்தை எனக்கு எடுத்துக் காட்டியது.

உங்களைப் போன்ற தியாகத்தை யாரும் செய்யவே முடியாது. அதையும் தூக்கி அடித்து விட்டது தங்கள் மனைவி செய்த தியாகம்.

ஊரில் உங்களுக்கு ஒரு மனைவி இருக்கிறாள். என்னை மணம் செய்து கொள்வதற்கு ஆறுமாதம் முன்பு அவளை மணந்து கொண்டிருக்கிறீர்கள்.

அவளையும் எப்படிப்பட்ட சூழ்நிலையில் மணந்தீர்கள் என்பதை அறிந்தேன்.

சிதம்பரத்திலே நீங்கள் வேலையில் இருந்தபோது ஒரு குமாஸ்தா வீட்டுக்கு நாலு வீடு தள்ளிக் குடியிருந்தீர்கள். அங்கு வந்து ஒரு மாதம் ஆனபோது

குமாஸ்தாவின் பெண்ணுக்கும் வேறு ஒருவருக்கும் கலியாணம் நிச்சயமாகி அன்று மாப்பிள்ளை அழைப்பு நடந்தது.

பேசின தொகையில் பெரும் பகுதியை அந்தப் பெண்ணின் தகப்பனார் கொடுக்காததால் அன்றிரவு சண்டை உண்டாகிக் கலியாணம் நின்று விட்டது. கலியாணப் பெண்ணின் பெற்றோருக்கு இடிவிழுந்த மாதிரி ஆகிவிட்டது.

கலியாணப் பெண் இதனால் கிணற்றில் விழப் போனபோது தாங்கள் காப்பாற்றி, அவள் பெற்றோரிடமும் சொல்லி அதே முகூர்த்தத்தில் அவளை மணம் செய்து கொண்டீர்கள். மணப் பெண்ணும் அவள் பெற்றோரும் தங்களைக் கடவுளாகவே எண்ணி விட்டார்கள்.

அதன்பின் ஒரு மாதம் ஆனதும் திடீரென்று தங்களைப் பூனாவுக்கு மாற்றி விட்டார்கள்.

என் வீட்டில் அறை வைத்துக் கொண்டீர்கள். என் அண்ணா என்னை நீங்கள் மணக்க வேண்டுமென்றபோது தங்களுக்கு மணமாகி விட்டது. முடியாது என்று சொல்லி விட்டால் எனக்கும் அண்ணாவுக்கும் எதிர்பாராத இடியாக இருக்கும் என்று எண்ணி, ஊருக்குக் கடிதம் எழுதிப் பதில் சொல்வதாகச் சொன்னீர்கள். சரிதான். தாயார் தகப்பனாருக்கு எழுதப் போகிறீர்கள் என்று எண்ணினேன். ஆனால் தாங்களோ தங்கள் மனைவிக்கு 'உன்னைப்போல் ஒரு அபாக்கியவதியைக் காப்பாற்ற அவளை மணக்க விரும்புகிறேன். இருவரையும் இரு கண்களாக வைத்துக் கொள்வேன்' என்று சம்மதம் கேட்டு எழுதினீர்கள்.

உங்கள் மனைவியோ 'எனக்குப் பூரண சம்மதம். அவள் என் தங்கை. என்னைக் காப்பாற்றியது போல் அவளையும் காப்பாற்றுவதில் தவறில்லை. கண்டிப்பாய் மணம் செய்து கொள்ளுங்கள்' என்று எழுதினாள்.

நேற்றுவரையில் எனக்குத் தெரியாது இவை எல்லாம்.

இன்று உங்கள் பெட்டியில் அந்தக் கவர் அண்ணாவின் விலாசத்துக்கு இருப்பதைக் கண்டேன்.

உடனே புரிந்து விட்டது எனக்கு. ஊருக்குப் புறப்படும்போது அந்தக் கவரை அண்ணாவின் கையில் கொடுத்து விட்டுப் புறப்பட எண்ணித்தான் நடந்தவரையில் விவரமாக எழுதி வைத்திருக்கிறீர்கள். ஏனெனில் அண்ணாவை நீங்கள் ஏமாற்றி விட்டதாக அண்ணா நினைக்கக் கூடாதல்லவா ?

தவிரவும் ஒரு மனைவி இருக்கும்போதே என்னைத் தாங்கள் மணம் செய்ய முன்வந்தது பெண் பித்தினால் அல்ல.

என்னை, சித்தஸ்வாதீனம் இல்லாதவளை, யாருமே கலியாணம் செய்து கொள்ள விருப்பப்படாத என்னை, என் பைத்தியம் தெளிய வேண்டுமானால் எனக்கு நல்ல கணவனாக வந்து என்னை நன்றாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக என்பேரில் பரிதாபப் பட்டு என்னை மணம் செய்துகொள்ள முன்வந்தீர்கள்.

அதேமாதிரிதான் தங்கள் மனைவியும். தற்கொலை செய்து கொள்ளப் போனவளைக் காப்பாற்றிமணம் செய்துகொண்டு, அவள் வாழ்வை வளமாக்க முன்வந்த உங்களிடம் அளவில்லா அன்பும் நம்பிக்கையும் கொண்டு தாங்கள் என்னை மணம் செய்து கொள்ளச் சம்மதம் கொடுத்தாள் அவள்.

அண்ணாவின் பேரில் பரிதாபப்பட்டு, என் பைத்தியம் தெளிய என்னை மணம் செய்துகொண்டு தாங்கள் கடமையைச் செய்தீர்கள்.

அவ்வாறே உங்கள் மனைவியும் உங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யச் சம்மதம் கொடுத்துத் தன் கடமையைச் செய்தாள்.

அவ்வாறே அடியாள் தன் கடமையைச் செய்ய வேண்டாமா ?

உங்களுக்கு ஊருக்கே மாற்றலாகி விட்டது. நாளைக்குப் புறப்படவேண்டும்.

ஆதலால் கருணை உள்ளம் கொண்ட உத்தமராகிய தாங்களும், விட்டுக் கொடுக்கும் பரந்த மனோபாவம் கொண்ட தங்கள் மனைவியும் ஆனந்த வாழ்க்கை நடத்துவதற்கு நான் செய்யக் கூடிய கடமை ஒன்று உண்டு.

நடுவில் வந்து புகுந்த நான் நடுவிலேயே வெளியேறி விடுவதுதான் நான் செய்யும் கடமை.

என்னைத் தேடும் வீண் முயற்சியில் காலம் கடத்தாமல் ஊர் போய் மனைவியுடன் நிம்மதியாய் வாழுங்கள்.

என்பொருட்டுத் தாங்களும் தங்கள் மனைவியும் செய்த தியாகத்தை எண்ணி எண்ணிப் பெருமைப்பட்டபடியே இந்தப் பாரதத்தின் ஏதாவது ஒரு மூலையில் மக்களுக்குச் சேவை செய்தபடி இருப்பேன்.

கடந்த ஒரு மாத காலமாக என் புத்தியில் தெளிவு உண்டாகி விட்டது, தாங்கள் அறிந்த விஷயம்.

வருகிறேன் அடியாள்,
பாமா''

விம்மி விம்மி அழுதான் ரங்கன் !

இந்தக் கதையில்வரும் ஒரு காட்சியையே இவ்வார அட்டைப்படமாகத் தீட்டியிருக்கிறார் ஓவியர் வினு

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 106. பரிணமசூலை

**ப**ரிணமம் என்பதற்கு மாற்றமுறல், தோற்றம் பெறல் என்று பொருள். பசு புல்லைத் தின்கிறது. அப்புல் ஜீரண மான பிறகு பற்பல மாற்றங்களை அடைந்து வேறு பொருளாக அல்லது பொருள்களாகப் புதிய தோற்றத்தைப் பெறுகிறது. இப்படி உண்டாகும் மாற்றம், மாறியதொரு தோற்றம் இவற்றைத்தான் பரிணமம் என்று சொல்வது வழக்கம்.

தன் ஆகாரத்துக்காகத் தாயை மட்டும் நம்பி இருக்கும் கைக் குழந்தை ஒன்று. அக் குழந்தையின் தாயார் ஒரு நாள் 'பூண்டு ரஸம்' வைத்துச் சாப்பாட்டில் சேர்த்துக் கொள்கிறாள். மறுநாள் அவ் வம்மையின் கைக் குழந்தையை எடுத்துக் கொள்வோமானால் அதன் வாயிலும், அக்குழந்தை விடும் மூச்சிலும் பூண்டின் நாற்றம்...மன்னிக்கவும்-மணம் வருவதை அறிகிறோம்.

''குழந்தைக்குப் பூண்டு கொடுத்தாயா என்னம்மா ?'' என்று கேட்டால் அவ் வம்மை நாணிக் கோணிக் கொண்டு, ''இல்லை, உடம்பெல்லாம் கடுப்பும் வலியுமாக இருந்தது. அதற்காக நான் தான் நேற்று சிறிது பூண்டு ரஸம் சேர்த்துக் கொண்டேன்'' என்கிறாள்.

தாயார் உட்கொண்ட பூண்டு அவள் சரீரத்தில் தாதுக்களாக பரிணமமாக வும், அப்பரிணமமான நிலையில் பூண்டு அல்லது பூண்டின் அம்சம் தாய்ப் பாலோடு ஒன்றி இரண்டற்ற தாய்த் தோற்றம் பெறவும் நேரிட்டதாலல்லவா அப்பாலை உண்ட சிசுவின் வாயில் பால் மணத்துடன் பூண்டின் மணமும் கலந்து இரண்டற ஒன்றியதாய்த் தோற்றம் பெற நேரிட்டது?

இதைத்தான் பரிணமம் அல்லது தாது பரிணமம் என்று வைத்திய சாஸ்திரத்தில் சொல்வது வழக்கம்.

இப்படிப் பரிணமமாகும் நேரத்தில் வயிற்றில் ஒரு சூலம் ஏற்படுமானால் அதைத் பரிணம சூலை என்று சொல்வது முழுதும் பொருத்தமானதல்லவா ?

ஆகாரம் ஜெரித்து விட்டால் பிறகு பசி எடுக்க வேண்டியதுதானே நியாயம்? இதைச் சூலை — அல்லது வலி என்பானேன் என்கிறீர்களா ?

பசிக்கும் வலிக்கும் கூடவா வித்தியாசம் தெரியாது ? விஷயத்தை நேரிட விளக்கினால்தான் விளங்கும். ஒருவன் சாப்பிடும் ஆகாரம் — அதன் தரத்துக்குத் தக்கபடி ஏறத்தாழ மூன்று மணி நேரத்துக்குள் ஓரளவு ஜீரணமாகி — அல்லது ஜீரணத்தில் ஒரு நிலையை அடைந்ததாய் — இரைப்பையிலிருந்து வெளியே (டுவாடீனம் என்னும் பச்யமானசயத்தின் வழியாகச்) சிறுகுடலில் சேரும். அப்போது இரைப்பையில் அன்னாதிகள் ஒன்றுமிராது. சிறுகுடலில் சென்ற, புதிய தோற்றம் பெற்ற அல்லது நிலையை அடைந்த ஆகாராதிகள் மேலும் சில மாற்றங்களையும் அவ்விடத்தில் அடைந்த பின், அங்குள்ள 'உறிஞ்சி' களால் சத்துப் பொருள்கள் உறியத் தக்கதோர் நிலையை அடையும். அச் சமயத்தில் அதாவது ஆகாரம் புசித்த பின் சுமார் மூன்று மணி நேரத்துக்குப் பின் இச்சூலை ஏற்படுகிறது.

வயிற்றிலிருந்து இச்சூலை ஒருவிதமான ஆவி புறப்படுவது போல் 'குபுகுபு' வென்று மேலே எழும். பிறகு சிறிது சிறிதாக மார்புப் பிரதேசத்தில் வியாபிக்கும். முன்னால் மார்புப் புறமும் அதற்கு நேராக முதுகுப் புறத்திலும் மிகக் கடுமையான நோயாக மனிதனை வாட்டிவிடும். ஒரு வேலை வெட்டி செய்ய இயலாது. உற்சாகமாகப் பேசவும் மனமிராது. களித்த முகத்துடன் ''சன்னு பின்னு'' என்று எடுத்ததற்கெல்லாம் கோபப்படும் சிடுமூஞ்சியாகி விடுவான் மனிதன்.

இதெல்லாம் ஏற்படுவது எப்போது தெரியுமோ? **ஆகாரம் ஏற்ற 3-4 மணி நேரத்துக்குப் பிறகுதான்.** இரவில் தூங்கிக் கொண்டிருப்பவரும் விழித்துக் கொள்ளுமளவு தீவிர நோவாக இருக்கும். உடலை முறுக்கிப் பிழியலாமென்ற யோசனையும் உண்டாகும். **அந் நேரத்தில் சிறிது சூடான பானம் பருகினால் உடனே இவ்வேதனை சமனப் படும்.** இதைத்தான் ''பரிணம சூலை'' என்று நமது சாஸ்திரங்களில் சொல்வது. ஆகாரம் ஜீர்ணமாகி - சத்தான அம்சம் சரீரத் தாதுக்களாகப் பரிணமமாகத் தொடங்கும், அல்லது ஆகும் நேரத்தில் ஏற்படும் சூலம் அல்லது வலி. இதில் மேற்சொன்ன இரண்டு குறிகள் மிகவும் முக்கியமானவை. ஒரு சிலருக்குக் கடுமையான மல பந்தமும் இருக்கும்.

ஆகாரமானது இரைப்பையில் சேர்ந்ததுமே அதை ஓரளவு ஜெரிக்கச் செய்ய

தற்கு இரைப்பையிலிருந்தே ஊறும் ஒரு திரவமுண்டு. இரைப்பையில் எந்தப் பொருள் சென்று சேர்ந்தாலும் சரி, உடனே இந்தத் திரவம் தானாகவே சுரக்கும். இதை மேனாட்டு வைத்தியத்தில் 'காஸ்ட்ரிக் ஜூஸ்' என்பர். இதில் 'ஹைட்ரோ-க்ளோரிக் ஆஸிட்' என்னும் அமிலம் இருக்கிறது. ஆகாராதிகளை ஜீர்ணத்துக்குக் கொண்டுவர இந்த அமிலம் பெரிதும் உதவுகிறது. ஆனால் சிலரில் சில சமயங்களில் சில காரணங்களை யொட்டி இந்த அமிலம் எஞ்சியதாய் இரைப்பையிலேயே தங்க நேரிடுகிறது. இந்த அமிலத்தில் எல்லா அமிலங்களிலும் உள்ளது போலவே அக்னியின் அம்சம் இருக்கிறது. உபரியாக எஞ்சி நிற்கும் இந்த அமிலம் இரைப்பையில் ஒருவிதக் காந்தலை உண்டாக்குகிறது. உண்டாக்காமல் இருக்குமா? இந்நிலையைச் சமாளிக்க என்ன செய்வது? செய்யக் கூடியது இரண்டுதான். ஒன்று அதிகப்படியான இந்த அமிலத்தைச் சமனப்படுத்த, அமிலத்துக்கு எதிர்க்குணம் பெற்ற, 'ஆல்கலைன்' பொருளொன்றைச் சிறிது சாப்பிடுவது. இன்னொன்று அதிகப்படியான அமிலத்துக்கும் ஓர் உபயோகம் உண்டாக்கும் வகையில் எதையாவது கொஞ்சம் ஆகாரத்தைச் சாப்பிடுவது. இந்த இரண்டாவது உபயோகத்தைத் தான் மேலே குறிப்பிட்டேன்.

இவ்வித நோயுள்ளவர் "சோடா உப்பு" என்னும் பொருளில் ஒரு சிறிய பொட்டலத்தை சதா சர்வகாலமும் விபூதி சம்புடம் அல்லது பொடி டப்பி போல் இடுப்பில் செருகிக் கொண்டு இருப்பர். வேறு சிலர் சில இட்டிலி அல்லது ஒரு ரோல் பிஸ்கோத்து ஒரு பிளாஸ்க் காப்பி இவற்றைச் செல்லுமிடமெல்லாம் சதா சுமந்து கொண்டே செல்வர். வீட்டிலிருக்கும்போது கூட இரவு போஜனத்துக்குப் பிறகு படுக்கப் போகும்போது ஒரு பிளாஸ்க் வெந்நீர், ஹார்லிக்ஸ் புட்டி, 2 டம்ளர், ஒரு ஸ்பூன், சர்க்கரை டப்பி, டார்ச் லைட் இவற்றைத் தலைமாட்டில் வைத்துக் கொண்டுதான் தூங்குவர். இரவு 1-2 மணி சுமாருக்குப் பரிணாம சூலை ஏற்படுமே! ஏதாவது உடனே சாப்பிட்டாலல்லவா வயிற்றுவலி நிற்கும். அதற்காக இடுப்பில் செருகிக் கொண்டிருக்கும் "சோடா"மாவில் ஒரு சிட்டிகை யளவை வாயிலிட்டுச் சிறிது ஜலத்துடனோ அதுவுமில்லாமலோ விழுங்கிச் சமனமடைவர் சிலர். வேறு சிலர் சாங்கோபாங்கமாக ஹார்லிக்ஸ் கரைத்துக் குடித்துச் சமனம் பெறுவர்.

இதை எத்தனை காலம் அனுஷ்டிப்பது? மேலும், 'சோடா' உப்பு இரைப்பையில் சென்றாலும்.....அதன் காரணமாகவும் சிறிது இரைப்பையின் ஊறல் சுரக்குமல்லவா? அதிலுள்ள உபரி அமிலம்...? மறுபடியும் காந்தல் சூலம் இவற்றை உண்டாக்குமே! ஹார்லிக்ஸ் — அல்லது காப்பி – பிஸ்கோத்து அல்லது இட்டிலி. எதுவானாலென்ன? இரைப்பையில் ஏதோ ஒன்று சென்றதோ இல்லையோ... உடனே இரைப்பையின் ஊறல் சுரக்கும். மறுபடியும் பழைய கதைதான். எவ்வளவு ஆல்கலைன் கொடுத்தாலும் போதாது. ஆகவே ஆல்கலைன் பிரயோகம் பயனற்றது என்றாகும். பிறகு..? 'உஷ்ணம் உஷ்ணேன சாம்யதி' என்று ஒரு கதை உண்டல்லவா? அதையொட்டி "அமிலம் அமிலேன சாம்யதி" என்று அதிகப்படி அமிலத்தைச் சுரக்காமல் இருக்குமாறு கொஞ்சம் அமிலத்தையே கொடுப்பது என்று ஒருகாலத்தில் செய்து வந்தனர். இதனாலும் பலன் காணவில்லை. ஆகவே அமிலம், ஆல்கலைன் இரண்டையும் கலந்து ஒரு துவந்தப் பிரயோகம் (Combined therapy) என்ற முறையை அனுஷ்டித்தனர். இதனாலும் பலன் காண முடியவில்லை.

இப்படியாகத்தானே வைத்திய நிபுணர்கள் தங்கள் ஆராய்ச்சிகளைச் சளைக்காமல் செய்துவர நோயாளியும் சாகாமல் பொறுத்துவர விஞ்ஞானமும் முன்னேறி வர நாளொரு பௌடரும் தினமொரு மிக்சருமாய் எண்ணிறந்த புதிய புதிய மருந்துகள் விற்பனைக்காக வந்து குவியலாயின.

இதனால் உலகம் பெற்ற பயனைப் பற்றிக் கவலையில்லை. சூல ரோகிகள் கதி என்னவாயிற்று? அமிலத்தினால் ஏற்பட்ட அழற்சி காரணத்தாலோ அல்லது சில அபத்தியங்கள் அவ்வித அழற்சிக்கு துணைக் காரணமாக நேரிட்ட காரணத்தாலோ- ஜீரண கோசத்தில் ரணம் ஏற்பட நேரிட்டது. இந்த ரணம் இரைப்பையில் ஏற்பட்டிருப்பின் அதை காஸ்ட்ரிக் அல்ஸர் என்றும் — இரைப்பைக்கும்-சிறு குடலுக்குமிடையே உள்ள பச்யமாசயத்தில் ஏற்பட்டிருப்பின் அதை டுவாடினல் அல்ஸர் என்றும் மேநாட்டு வைத்திய நிபுணர்கள் நாமகரணஞ் செய்தனர். எக்ஸ்ரே முதலான புகைப் படங்களைப் பிடித்துக் குறிப்பாக இன்ன இடத்தில்தான் ரணம் இருக்கிறது என்று சுட்டிக்காட்டவும் செய்வர்.

பரிணாமசூலம் என்பது பச்யமாசயத்திலுள்ள "டுவாடினல் அல்ஸர்" என்னும் ரணத்தினால் உண்டாகும் வலியாகும்.

BAR ASSOCIATION

வாதத்திற்கு வழியேது இல்லை ! உங்கள் பணத்திற்கு தரம் உயர்ந்த தேநீர், மிகுந்த கோப்பைகள் தருவது ப்ரூக் பாண்ட் தேயிலைதான் !

வழக்குக்கு இடமேது ? தனிச்சிறப்புற்ற பாக் செய்யும் முறை ஒன்றே, ப்ரூக் பாண்ட் தேயிலையின் பரிசுத்தத்திற்கு சாட்சியாக விளங்குகின்றதே!

முடிவு கூறுமிடத்து, மற்றெல்லாத் தேயிலையை விட மக்கள் யாவரும் விரும்பி அருந்துவது ப்ரூக் பாண்ட் தேயிலையையே ! சந்தேகமே இல்லை!

# எப்பொழுதும் இன்பம் தப்பாது அளிப்பது ப்ரூக் பாண்ட் தேயிலையே



ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்

BB 272K






டால்கம் பௌடர்



யூ டி கோலான்



லிப்ஸ்டிக்

பேஸ் பௌடர்



டஸ்டிங் பௌடர்



# Lakmé

## லக்மே

அழகின் அலங்காரத்திற்கென
ப்ரஞ்சு முறையிலிருந்து
தயாரிக்கப்பட்ட சாதனங்கள்




லக்மே ஒரு டாடா தயாரிப்பு

குறைந்த செலவில் நிறைந்த புகழுக்கு ஆசைப்பட்டார் அவர். நிறைந்த செலவு செய்தாலும் அழிக்க முடியாத பழியை அல்லவோ கல்லில் செதுக்கி விட்டிருந்தான் சிற்பி !

கல்பாளையம் கிராமத்தில் குளம் வெட்டுவதற்கான ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற ஆரம்பித்து விட்டன. கிராமத்து ஜனங்கள் அத்தனைபேரும் பம்பரமாகச் சுழன்று வேலை செய்தனர். கோடைக் காலத்தில் கல்பாளையத்துக்கு மூன்று மைலுக்குள்ளாகக் குடிதண்ணீர் அகப்படாது. நாற்பது ஐம்பது வருடங்களுக்கு முன் குடிதண்ணீருக்காக உபயோகப்படுத்தப்பட்ட குளம் தூர்ந்து மண்மேடிட்டுக் கிடந்தது. அதை வெட்டிப் புதுப்பிக்க வேண்டுமென்ற யோசனை வெகு நாட்களாகவே பொது ஜனங்களிடையே நிலவி வந்தது யாவரும் சேர்ந்து அந்த ஜில்லா கலெக்டருக்குப் பலமுறை மனு எழுதிப் போட்டுச் சோர்ந்து விட்டனர். கிராமப் பஞ்சாயத்துப்போர்டு தலைவரிடம் முறையிட்டும் அவரும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. கோடையில் அநேகமாக எல்லாக் கிணறுகளும் வற்றி விடும். அப்போது கிழத் தெருவில் நான்கு மாடி கட்டி வசித்து வரும் வஜ்ரவேலு முதலியார் வீட்டுக் கிணற்றில் தான் நிறையத் தண்ணீரைப் பார்க்கலாம். அவர் நெஞ்சம் ஈரக் கசிவற்ற பாலைவனமாக இருந்தாலும், அவர் வீட்டுக் கிணறு என்றும் வற்றாமல் இருந்தது. அக்கம்பக்கவாசிகள் ஒரு குடம் தண்ணீர் வந்து எடுத்துச் சென்று விட்டால், தாம்புக்கயிறு நைந்து விட்டதா, தரை தேய்ந்துவிட்டதா என்று பார்த்துப் பார்த்து மாய்ந்து போவார்.

எந்த வழியிலும் ஊருக்கு விமோசனம் கிட்டாமற் போகவே, முதலியாருக்கு அடுத்தபடியாகச் செல்வ நிலையும் முதலியார் எட்டிப் பிடிக்க முடியாத தயாள நெஞ்சமும் படைத்த கோவிந்தப் பிள்ளை என்பவர் தாமே முன் நின்று கணிசமான பணத்தை முதலில் போட்டுக் குளம் வெட்ட வசூல் என்று ஆரம்பித்தார். கிழத்தெரு, மேலத்தெரு, வடக்குத்தெரு, தெற்குத்தெரு நான்கும் கொஞ்சம் கைப்பசையுள்ள ஆசாமிகள் வசிக்கும் இடம். நான்கு தெருக்களுக்கும் மத்தியில் ஒரு சிவன் கோயில், கோயிலுக்கு அருகில் தான் குளத்து வேலை ஆரம்பிக்கப்பட்டது. கோவிந்தப் பிள்ளையின் முயற்சியில் நம்பிக்கை கொண்ட அனைவரும் தங்களால் இயன்ற பொருளுதவியை மனமுவந்து கொடுத்தனர். சிறிது நாட்களில் பிள்ளை எதிர்பார்த்ததற்கு மேலாகவே பணம் சேர்ந்து வேலை எவ்விதத் தடையுமின்றி முன்னேறியது.

தருமம், நன்கொடை என்றாலே நான்கு மைல் விலகிப் போகும் வஜ்ரவேலு முதலியார் மட்டும் குளத்து விஷயத்தில் தலையிடவில்லை. அவரை நன்கு அறிந்திருந்த கோவிந்தப் பிள்ளையும் முதலியாரிடம் வந்து பணம் கேட்கவில்லை.

என்றைக்காவது அபூர்வமாகக் கோயிலுக்கு வந்துவிட்டுப் போகும் முதலியார்




குளம் வெட்ட ஆரம்பித்ததும், கோயிலுக்குப் போவதையே நிறுத்திக் கொண்டார். தம்மிடம் பணம் கேட்டுவிடப் போகிறார்களே என்ற பயம்.

கிட்டத்தட்ட ஒரு வருடம் ஓடி விட்டது. குளமும் அநேகமாகப் பூர்த்தியாகி விட்டது. அந்த வருடம் எதிர்பாராத விதமாகக் கோடையில் நல்ல மழை பெய்து தண்ணீர் குளத்தின் நான்கு படித்துறைகளையும் தொட்டுக் கொண்டு நிரம்பியது. கிராமத்து ஜனங்கள் அவ்வளவு பேர் நெஞ்சமும் மகிழ்ச்சியால் பூரித்துப் பொங்கியது. இத் தர்ம கைங்கரியத்தை முன்னின்று நடத்தி வெற்றிகரமாகப் பூர்த்தி செய்த கோவிந்தப் பிள்ளையை மனமார வாழ்த்தினர்.



வேலை முற்றிலும் பூர்த்தி அடைந்த பிறகு, குளத்தின் திறப்பு விழாவை ஜில்லா கலெக்டரைக் கொண்டு நடத்தத் தீர்மானித்தனர். திறப்பு விழாவுக்கு இன்னும் ஒரு வாரமே இருந்தது. கோவிந்தப் பிள்ளை உற்சாகத்தில் வஜ்ர வேலு முதலியாரைத் திறப்பு விழாவில் கலந்துகொள்ள அழைத்தார்.

"நாமெல்லாம் என்ன செய்துவிடப் போகிறோம்! நீங்களெல்லாம் சேர்ந்து 'ஜாம் ஜாம்' என்று நடத்திவிடுவீர்கள்" என்று ஒட்டாமலே பதிலளித்தார் முதலியார்.

"அதென்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்? உங்களைப் போன்ற பெரிய மனிதர் கலந்து கொள்ளாமல் நடக்கும் காரியம் எப்படிச் சோபிக்கும்? எல்லாவற்றிலும் உங்களுக்கும் பங்கு உண்டு. வாருங்கள். முதலில் குளத்தைப் போய்ப் பார்க்கலாம். சுற்றிலும் ஒரு தும்பு தூசியின்றிச் சுத்தம்செய்ய ஆட்களை அனுப்பியிருக்கிறேன்" என்று கூறி விடாப்பிடியாக முதலியாரைக் குளத்துக்கு இழுத்து வந்து விட்டார் பிள்ளை.

முதலியாரின் நெஞ்சம் ஒரு கணம் விம்மி எழுந்தது. ஒரு வருடத்தில் எப்பேர்ப்பட்ட முயற்சி! நான்கு தெருக்களுக்கும் நடுநாயகமாக அமைந்திருந்த கோயிலும் குளமும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன. கரையின் நாற்புறமும் நடப்பட்டிருந்த பசும் பூஞ்செடிகள் ஆடி அசைந்து வரவேற்பளித்தன. மாலைக்கதிரவனின் ஒளியில் ஜிலுஜிலு வென்று ஜொலித்துக் கொண்டிருந்த தண்ணீருக்கிடையே தலைநீட்டித் தாமரையும் அல்லியும் முறுவலித்தன.

பிள்ளை மிக மகிழ்ச்சியோடு ஆரம்பத்திலிருந்து முடிந்த வரையில் சலிக்காமல் வர்ணித்துக் கொண்டிருந்தார்.

முதலியார் அசுவாரஸ்யமாக 'உம்' கொட்டிக் கொண்டிருந்தார்.

"ஆண்டவன் புண்ணியத்தில் வசூலான பணத்துக்கு மேல் கொஞ்சமும் செலவாகாமல் எல்லாம் நல்லபடியாக முடிந்து விட்டது. தர்மம் செய்வதென்பது சாதாரணமான காரியமல்ல. அதுவும் இம்மாதிரி எல்லோருக்கும் உபயோகப்பட்டு எந்தக் காலத்துக்கும் நீடித்து நிலைக்கக் கூடிய உத்தமமான பணிக்கு உதவக் கொடுத்து வைக்க வேண்டும். ஆகவே இக்காரியத்துக்கு உதவிய எல்லோருடைய நாமமும் நிலைத்து நிற்க நான் ஒரு காரியம் செய்யத் தீர்மானித்துள்ளேன். இந்த ஊரில் அதிகமாகப் பணம் கொடுத்து உதவியவர்கள் குளத்தின் நான்கு வீதிகளில்தான் வசிக்கிறார்கள். ஒவ்வொரு வீதியையும் பார்த்து ஒவ்வொரு படித்துறையும் அமைந்திருக்கிறது. அந்தப் படித்துறைக் கல்லில் அவ்வீதியில் வசிக்கும் பணம் கொடுத்தவர்களின் பெயரைப் பொறித்துவிட உத்தேசித்திருக்கிறேன்" என்று உற்சாகத்தோடு முடித்தார் பிள்ளை.

பிள்ளையின் வார்த்தை ஒவ்வொன்றும் முதலியாரின் நெஞ்சில் கல்லில் வெட்டின மாதிரியே பதிந்து விட்டது.



ஒவ்வொருவரின் பெயர்! படித்துறைக் கல்லில்! கண்டைக்காய், வெண்டைக்காய் மனிதர்களின் பெயரெல்லாம் நீடித்து நிற்கப் போகிறது. அவர்......? ஊருக்கு உயர்ந்து நான்கு மாடிகள் கட்டி வாழ்பவரை யார் புகழப் போகிறார்கள்?

"அப்படியா? கலெக்டர் வந்து திறந்து வைக்க இன்னும் ஒரு வாரம் கூட இல்லையே! அதற்குள் கல்வெட்டு வேலையெல்லாம் முடிந்து விடுமா? கலெக்டர் வருவதற்குள் செய்தால்தானே அதுவும் நன்றாயிருக்கும்?" என்று முதன் முதலில் ஆவலோடு வினவினார் முதலியார்.

"ஓ! முடிந்து விடும் அதற்கென்று விசேஷத் திறமை பெற்ற ஒருவனை வெளி

யூரிலிருந்து வரவழைத்து விட்டேன். அவனிடம் ஏழெட்டு உதவியாட்களும் இருக்கிறார்கள். நான்கு தெருக்களுக்கும் சேர்த்து நூறு பேர்களுக்கு மேல் பொறிக்க வேண்டியிருக்காது. மூன்று நாட்களில் முடித்து விடுவதாகச் சொல்கிறான். கூலி விஷயத்தில்தான் சிறிது தகராறு செய்து கொண்டிருக்கிறான்.''

முதலியாரின் நெஞ்சில் மின்னல் மாதிரி ஒரு தீர்மானம் தோன்றி உறுதியடைந்து விட்டது.

''ஒரு காரியம் செய்கிறீர்களா? அவனை என்னிடம் அனுப்பி விடுங்கள். பேரம் எல்லாம் நான் செய்து கொள்கிறேன். இத் தர்ம கைங்கர்யத்தின் கடைசிச் செலவை என் உபயமாக ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று பணிவோடு வேண்டினார் முதலியார்.

பிள்ளைக்குத் தாம் காதால் கேட்ட வார்த்தைகள் நிஜமாகவே முதலியாரின் வாயிலிருந்து வந்தவைதானா என்று ஆச்சரியமாயிருந்தது. ''ஆகா! அதற்கென்ன? தாராளமாகச் செய்யுங்கள். தங்களைப் போன்றவர்களால் முடித்து வைக்கப் பெறுவதற்குப் பாக்கியம் செய்திருக்க வேண்டுமே!'' என்று சமாளித்துக் கொண்டு முகஸ்துதி செய்தார்.

மறுநாள் மாலை பிள்ளை அனுப்பி வைத்த பெருமாள் மேஸ்திரி முதலியாரின் இல்லத்துக்கு வந்து சேர்ந்தான். அவன் கையில் பணம் கொடுத்தவர்களின் பெயர்கள் அடங்கிய பட்டியல் இருந்தது. அதை வாங்கித் திருஷ்டியைச் செலுத்திய வண்ணம் முதலியார், ''ஹும், பிள்ளையவர்கள் எவ்வளவு பேசினார்? நீ எவ்வளவு எதிர்பார்க்கிறாய்?'' என்று அதிகாரத்தோடு வினவினார்.

''மொத்தம் மூன்று நாட்கள் வேலை. எனக்கு எட்டு கையாட்களுக்குக் கூலி கொடுக்க வேண்டும். நான் நூற்றிருபத்தைந்து ரூபாய் கேட்டேன். பிள்ளை நூறு தருகிறேனென்றார்.''

''என்ன இது? பகற்கொள்ளை அடிக்கவென்று கிளம்பி விட்டீர்களா? நியாயமாகக் கேட்டால்தான் உனக்கும் ஜீரணமாகும்'' என்று உறுமினார் முதலியார். இலவசமாக முடித்துப் புகழைத் தட்டி விடலாம் என்று மனக்கோட்டை கட்டியிருந்த முதலியாருக்கு அவன் பேச்சு எரிச்சலை அளித்தது.

அவருடைய மரியாதையற்ற சொல்லைக் கேட்டதும், பெருமாள் மேஸ்திரிக்கு முகம் சிவந்தது.

''ஏன், சாமி! எல்லோரும் தர்மம் என்று செலவழிக்கிறீர்கள். கூலிகளுக்



குக் கொடுக்கிறதிலும் கொஞ்சம் தாரா ளம்காட்டுங்களேன் ''என்று கோபத்தை அடக்கிக் கொண்டு கேட்டான்.

இதுவரையில் முதலியார் ஒன்றும் கொடுக்காததால் கல்வெட்டுச் செலவை ஏற்றுக் கொள்ளுகிருரென்று பிள்ளை அவ னிடம் தெரிவித்திருந்தார்.

'தர்மம் என்ருல் கண்களில் மிள காய்ப் பொடியைத் தூவிப் பறித்துக் கொண்டு போக வேண்டுமென்கிற அர்த்தமா ?நியாயமானகூலியைக்கேள் ''

''நியாயமாக எவ்வளவு கொடுக்கலா மென்று அபிப்பிராயப்படுகிறீர்கள்?''

''இருபத்தைந்து ரூபாய் வாங்கிக் கொள். அதற்குமேல் என்ன ? பிற்பாடு உன் வேலை உயர்தரமானது என்று பட் டால், கூட ஒன்று இரண்டு போட்டுக் கொடுக்கவும் தயங்க மாட்டேன்'' என்று தமது தாராளத்தையும் கூறிக் கொண்டார் முதலியார்.

சிறிதுநேரம் மலைத்தமாதிரி பேசாமல் நின்ருன் மேஸ்திரி.

''நல்ல காரியம்; தடங்கல் சொல் லாதே. போய் வேலையை ஆரம்பி. உன் னுடைய ஒத்தாசையால் எல்லோர் பெயரும் நிலைத்து நிற்கப் போகிறது. கீழத்தெரு வரிசையில் பிள்ளை என் பெயரை எழுத மறந்து விட்டிருக்கிருர். பட்டியலில் நான் சேர்த்து விட்டேன். இத் தெருப் படித்துறையில் மறக்காமல் என் பெயரை முதலில் பொறித்துவிடு. எழுத்துக்கள் கொஞ்சம் பெரிதாகவே இருக்கட்டும்'' என்ருர் முதலியார்.

''சரி! நீங்கள் இவ்வளவு பெரிய மனிதர் வற்புறுத்தும்போது நான் எப் படித் தட்டுவது ? எல்லோரையும் போல் என் தர்மமும் இக் குளத்துக்கு வந்து சேரட்டும். பணமா கூட வரப்போகி றது ? புகழ்தான் நிலைக்கும். உங்கள் விருப்பப்படியே செய்கிறேன். இப் போதே போய் வேலையை ஆரம்பிக் கிறேன். காலையில் வந்து பாருங்கள்'' என்று பணிவாகக் கூறிக் கும்பிட்டு விட்டு வெளியேறினன் மேஸ்திரி.

முதலில் அவ்வளவு கருராகப் பேசியவன் இறுதியில் தாழ்ந்து விட் டதை எண்ணி மகிழ்ந்தார் முதலியார். அவர் நெஞ்சம் துள்ளிக் குதித்தது. ஆயிரமும், ஐந்நூறும் கொடுத்தவர் களுக்குச் சமதையாக அவர் பெயரும் படியில் ஒளிரப் போகிறதை எண்ணி இரவு நித்திரை கூட வராமல் தவித்தார் வஜ்ரவேலு முதலியார்.

**ம**று நாள் விடிந்ததும் விடியாதது மாக அறைக் கதவு படபடவென்று தட்டப் படவே வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து கதவைத் திறந்தார் கோவிந்தப் பிள்ளை. எதிரே வஜ்ரவேலு முதலியார் படபடத்த தோற்றத்துடன் நின்றிருந்தார். பிள்ளை வந்த விஷயத்தை விசாரிப்பதற்கு முன்பாகவே, ' நீங்கள் சிபாரிசு செய்து அனுப்பினீர்களே! அந்த மேஸ்திரி எங்கே ஐயா தொலைந்தான்? இப்படிப்பட்ட அயோக்கியனை எங் கிருந்து தேடிப் பிடித்தீர் ? இரவோடு இரவாகக் குடிசையைக் காலி செய்து கொண்டு ஓடி விட்டானே !'' என்று மூச்சிரைக்கக் கத்தினர் முதலியார்.

''யார் பெருமாளையா சொல்கிறீர்கள்? என்ன செய்து விட்டான்? பணம் ஏதா வது கொடுத்து விட்டீர்களா ? அவன் எனக்கு நன்கு தெரிந்தவன்தான். கவ லைப்படாதீர்கள் !'' என்ருர் பிள்ளை.

''பணமா, என்னுடைய மானம் மரி யாதை அவ்வளவையும் அல்லவா காற் றில் பறக்க விட்டு ஓடி விட்டான் ! முதலில் கீழத் தெருப் படித்துறையை இடித்து நிரவச் சொல்லுங்கள். ஒரு வாரத்தில் இடித்துக் கட்ட முடியாவிட் டால் திறப்பு விழாத் தேதியைத் தள்ளி வைத்திருப்பதாகக் கலெக்டருக்குத் தந்தி அடியுங்கள். எத்தனை ஆயிரம் செலவழிந்தாலும் கவலையில்லை'' என்று பொழிந்தார் முதலியார்.

''படித்துறையை இடிப்பதா? தாங்கள் என்ன சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றும் விளங்க வில்லையே?''-திகைத்தார்பிள்ளை.

''குளத்தருகில் போய்ப் பாருங்கள். எல்லாம் புரியும். அந்த அயோக்கியனை என்னிடம் அனுப்பி விட்டு நிம்மதியாகத் தூங்குகிறீர்கள். பாவிப் பயல் ! என் இரத்தம் கொதிக்கிறது !'' என்று புரி யாத முறையில் சீறி விட்டு வேகமாக வெளியேறினர் முதலியார்.

கோவிந்தப் பிள்ளைக்கு ஒரே புதிராக இருந்தது. அவசரமாக முகத்தைக் கழு விக்கொண்டு குளத்தை நோக்கி விரைந் தார். படிகளில் 'பளிச்' சென்ற கல் வெட்டுக்கள் தெரிந்தன. அதற்குள்ளா கவா ஒரு துறை முழுதும் வெட்டி விட்டான் என்று வியந்த வண்ணம் படிக்கு ஒவ்வொரு எழுத்தாக இருந்த தைக் கூட்டிப் படித்தார் அவைகளில் காணப்பட்ட வாசகம் பின்வருமாறு :

''இந்தக் குளம் கல்பாளையம் கீழத் தெரு மாடி வீட்டுச் செல்வந்தர் வஜ்ர வேலு முதலியார் அவர்களைத் தவிர, கிராமத்திலுள்ள ஏனைய தயாள குண முள்ள பிரமுகர்களின் நன்கொடையால் பொதுஜனங்களின் உபயோகத்துக்காக வெட்டப்பட்டது. இக்கல் சாஸனம் ரெட்டிபாளையம் பெருமாள் மேஸ்திரி யால் இலவசமாகச் செய்யப்பட்டது.''

கோவிந்தப்பிள்ளை ஒன்றும் தோன்ரு மல் ஸ்தம்பித்து நின்ருர்.

# டன்லபில்லோ மீது

சிரம பரிகாரம் செய்து

கொள்ளும்படி

உங்களுக்கு

பிரியம் ஏற்படும்



மெத்தைகள்   தலையணைகள்   திண்டுகள்

OPC-92-TM

# பாண்டிமாதேவி





நா. பார்த்தசாரதி

## அத்தியாயம் 18

## வெள்ளூர்ப் போர்க்களம்

வெள்ளூர்ப் போர்க்களத்தில் இருந்த பாண்டியப் பெரும் படையும், அதற்கு உதவியாக வந்திருந்த சேரநாட்டுப் படையும், குமாரபாண்டியனுடைய எதிர்பாராத திடீர் வருகையைக் கண்டு பெருமகிழ்ச்சி எய்தின. இளவரசனின் வரவு அவர்களுக்குப் புதிய நம்பிக்கையையும், துணிவையும் அளித்தது. அதே சமயத்தில் தளபதி வல்லாள தேவன் ஏன் இன்னும் வரவில்லை என்ற ஐயப்பாடும் எல்லோருடைய மனங்களிலும் உண்டாயிற்று. சாதாரண வீரர்கள் மனத்துக்குள்ளேயே அந்தச் சந்தேகத்தை அடக்கிக் கொண்டு விட்டார்கள். பெரும் பெயர்ச்சாத்தனும், அவனுக்கு அடுத்த நிலையிலிருந்த சிறு படையணித் தலைவர்களும் 'தளபதி ஏன் போர்க்களத்துக்கு வரவில்லை?' என்ற கேள்வியைக் குமாரபாண்டியனிடமே கேட்டு விடுவதற்குச் சமயத்தை எதிர்பார்த்துத் துடித்துக் கொண்டிருந்தார்கள். முதல் நாள் காலை விழிஞத்திலிருந்து புறப்பட்டிருந்த குமாரபாண்டியனும் அவனுடன் வந்த வீரர்களும் மறுநாள் அதிகாலையில் வெள்ளூரை அடைந்து விட்டார்கள்.

அவர்கள் அங்கே சென்ற நேரம் பொருத்தமானது. அன்றைய நாட்போர் தொடங்குவதற்குச் சில நாழிகைகள் இருந்தன. இருதரப்புப் படைகளும் களத்தில் இறங்கவில்லை. அவரவர்களுடைய பாசறைகளில் தங்கியிருந்தனர். அதனால் மகிழ்ச்சியோடு ஒன்று கூடி ஆரவாரம் செய்து குமாரபாண்டியனை வரவேற்பதற்கு வசதியாக இருந்தது பாண்டியப் படைகளுக்கு. நீண்ட தொலைவு பரந்திருந்த படைகளின் கூடாரங்களில் தனித் தனியே தங்கியிருந்த வேறு வேறு பிரிவைச் சேர்ந்த வீரர்களெல்லாரும் ஆவலோடு ஓடி வந்தனர். சிரித்த முகமும் இனிய பேச்சுமாகக் குதிரையிலிருந்து கீழே இறங்கி வந்த குமாரபாண்டியனைப் பார்த்த போது சில நாட்களாகத் தொடர்ந்து போர் செய்து களைத்திருந்த வருத்தமெல்லாம் போய் விட்டது போல் இருந்தது அவர்களுக்கு. குமாரபாண்டியனை வரவேற்கு முகமாக வாள்களையும், வேல்களையும் வலக் கரங்களால் உயர்த்திப் பிடித்துவாழ்த்தொலிகளை முழக்கினார்கள். முகத்தில் மலர்ச்சி நிறையத் தன் வீரர்களை நோக்கி ஆரவாரத்தைக் குறைத்துக் கொள்ளுமாறு கையமர்த்தினான் இராசசிம்மன். பெரும் பெயர்ச்சாத்தனும், படையணித் தலைவர்களும் அவன் தங்குவதற்கு அமைந்திருந்த பாசறைப் பாடி வீட்டுக்கு அவனை அழைத்துச் சென்றனர்.

"இளவரசே! தளபதி இது வரை ஏன் போர்க்களத்துக்கு வரவே இல்லை? என்ன காரணமென்று தெரியாமல் மனம் கலங்கிக் கொண்டிருக்கிறோம் நாங்கள்!" என்று எல்லாருடைய சார்பாகவும் கரவந்த புரத்துப் பெரும் பெயர்ச்சாத்தன் அந்தக் கேள்வியைக்



கேட்டபோது அதுவரை குமாரபாண்டியனுடைய முகத்தில் நிலவிக்கொண்டிருந்த மலர்ச்சி மங்கி மறைந்தது. அந்தக் கேள்விக்கு என்ன மறுமொழி கூறுவதென்று தயங்கிக் கொண்டே பெரும் பெயர்ச் சாத்தன் முதலியவர்களுடைய முகங்களை ஏறிட்டுப் பார்த்தான் அவன். மகாமண்டலேசுவரர் விழிஞத்துக் கடற்பாறைக் கருகில் தன்னிடம் தனிமையில் பெற்றுக் கொண்ட வாக்குறுதிகள் அவன் மனத்தில் தோன்றிப் பயமுறுத்தின. "கரவந்தபுரத்துக் குறுநில மன்னரே! நீங்கள் கேட்ட கேள்விக்கு ஒரு வகையில் குறிப்பான பதிலை மட்டும்தான் இப்போது என்னால் கூற முடியும். அதற்கு மேல் என்னிடம் விளக்கம் கேட்காதீர்கள். தளபதி வல்லாள தேவன் எதிர்பாராத சில காரணங்களால் இந்தப் போரில் கலந்து கொள்ள முடியாமற் போய்விட்டது. அதற்காகக் கவலைப் படாமல் நன்றாகப் போர் செய்து வெற்றியோடு திரும்ப வேண்டியது நம் கடமையாகும்" என்று பொதுவாகப் பதில் சொல்லித் தன்னை அவர்களுடைய சந்தேகச் சுழு வளியிலிருந்து மீட்டுக் கொண்டான் குமாரபாண்டியன். அவன் கூறிய மறுமொழியைக் கேட்ட பின் அதற்கு மேல் அதைப் பற்றி அவனிடம் விசாரித்துத் தெரிந்து கொள்ள முடியாது என்று மௌனமானான் பெரும்பெயர்ச்சாத்தன். தளபதி வரவில்லை. இனி வரவும் மாட்டான் என்ற செய்தி மெல்ல மெல்ல எல்லாப் படை வீரர்களுக்கும் தெரிந்துவிட்டாலும் குமார பாண்டியனுடைய வரவு அக்குறையை ஓரளவு நீக்கியது. பின்பு அவர்களுடைய பேச்சு போர்க்களத்து நிலைகளைப் பற்றிச் சுற்றி வளர்ந்தது. அன்று வரையில் நடந்திருக்கும் போரில் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வு விவரங்களைக் குமாரபாண்டியனுக்கு விவரித்துச் சொன்னார்கள் பெரும் பெயர்ச்சாத்தன் முதலியவர்கள். அதிகக் காயங்களை அடைந்து போர் செய்யும் ஆற்றல் குன்றிப் பாசறையில் படுத்த படுக்கையாக இருந்த சேர நாட்டுப் படைத் தலைவனைப் போய்ப் பார்த்து ஆறுதல் கூறினான் குமாரபாண்டியன். தன் தரப்புப்படைகளின் அணித் தலைவர்கள் எல்லோரையும் கலந்து சிந்தித்தபின் எதிர்த் தரப்புப் படைகளின் வலுவை முறியடிப்பதற்கு ஏற்ற விதத்தில் இரண்டு விதமாகப் படை வியூகத்தைப் பிரித்தான். கரவந்தபுரத்து வீரர்களும், சேர நாட்டு வீரர்களும் அடங்கிய கூட்டத்துக்குப் பெரும்பெயர்ச் சாத்தன் தலைவனானான். தென்பாண்டிப் படை வீரர்கள் அடங்கிய ஐந்நூறு பத்திச் சேனைக்கும் குமார பாண்டியன் தானே தலைமை தாங்குவதென்று ஏற்பாடு செய்து கொண்டான். சக்கசேனாதிபதியும் ஈழநாட்டுப் படைகளும் வந்தால் அப்படியே மூன்றாவது படை வியூகமாக அமைத்துக் கொள்ளலாம் என்பது அவன் தீர்மானமாயிருந்தது.

எதிர்த் தரப்புப் படைகளோ ஐந்து வியூகங்களாக ஐம்பெரும் தலைமையின் கீழ் இயங்கிக் கொண்டிருக்கின்றன என்று குமார பாண்டியன் பெரும் பெயர்ச் சாத்தனிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தான். ஐந்து வியூகப் படைக்கும், மூன்று வியூகப் படைக்கும் ஏற்றத்தாழ்வு அதிகம்தான். ஆனாலும் போர்த் திறனும், சூழ்ச்சி வன்மையும் இருந்தால் மூன்று வியூகம் படை வீரர்களால் ஐந்து வியூகம் படை வீரர்களை ஏன் வெல்ல முடியாது? முடியும் என்றே நம்பினான் குமாரபாண்டியன்.

பயணம் வந்த அலுப்பையும் பொருட்படுத்தாமல் அன்றைக்குப் போரிலேயே தானும் களத்தில் தோன்றுவதென்று உறுதி செய்து கொண்டான் அவன். பாசறையிலேயே நாட் கடன்களை முடித்துக் கொண்டு போர்க் கோலம் பூண்டான். மார்பில் கவசங்களை



வாளையும் கேடயத்தையும் எடுத்துக் கொண்ட போதே குமாரபாண்டியனின் கரங்கள் போர்த்துடிப்பை அடைந்து விட்டன. அவன் உடலிலும் உள்ளத்திலும் வீராவேச உணர்ச்சி பொங்கி நின்றது. பாசறைக்கு வெளியே நின்ற ஆயிரக்கணக்கான வீரர்கள் குமாரபாண்டியனைப் போர்க் கோலத்தில் காண்பதற்குக் காத்திருந்தார்கள்.

மிக உயரமான பட்டத்து யானையின் பிடரியில் அம்பாரி வைத்துப் பாசறை வாயிலில் கொணர்ந்து நிறுத்தியிருந்தான் பாகன். அரச வேழமாகிய அந்தப் பிரம்மாண்டமான யானையின் பொன் முகபடாம் வெய்யிலொளியில் மின்னிற்று. அதற்கப்பால் நூல் பிடித்து வரிசை நிறுத்தினாற்போல் குதிரைப் படைகளும், யானைப் படைகளும் அணிவகுத்து நின்றன. காலாட் படைவீரர்கள் பிடித்த வேல்களின் நுனிகள் கூரிய நேர் கோடு போல் வரிசை பிழையாமல் தெரிந்தன. அதற்கும் அப்பால் தேர்ப்படைகள் நின்றன. குமார பாண்டியன் போர்க்கோலத்தோடு பாசறை வாசலில் வந்து நின்றபோது உற்சாக ஆரவாரம் திசை முகடுகளைத் துளைத்தது.

உடனிருந்த பெரும் பெயர்ச்சாத்தன் பட்டத்துயானையில் ஏறிக்கொள்



அணிந்தபோது பழைய போர்களின் நினைவுகளும், வெற்றி அனுபவங்களும் மனக்கண் முன் தோன்றின.

குமரித் தெய்வத்தையும், தன் அன்னையையும் நினைந்து கண் இமைகளை மூடித் தியானத்தோடு கை கூப்பி வணங்கினான். பட்டு உறை போர்த்த வட்டத் தட்டில் வைத்துப் பெரும் பெயர்ச்சாத்தன் மரியாதையோடும் பணிவோடும் அளித்த

ளுமாறு வேண்டினான். "எனக்கு ஒரு நல்ல குதிரை இருந்தால் போதுமே! போர்க் காலத்தில் இந்த ஆடம்பரங்களெல்லாம் எதற்கு?" என்றான் குமார பாண்டியன்.

"இளவரசே! நாளைக்கு உங்கள் விருப்பம்போல் குதிரையோ, தேரோ எடுத்துக் கொள்ளலாம். இன்று நீங்கள் யானையில் தான் களத்துக்கு எழுந்தருள வேண்டும்.

தென்பாண்டிப் படைகளுக்குப் பொறுப்பான தலைமையில்லை என்றெண்ணி இறுமாந்து கிடக்கும் நம் பகைவர்களெல்லாம் நீங்கள் வந்துவிட்டதைக் கண்டு அதிர்ச்சி அடையவேண்டும். குதிரையோ, தேரோ வைத்துக் கொண்டால் உங்களை யானையின் மேற் பார்க்கிறமாதிரி அவ்வளவு நன்றாக அவர்களால் பார்க்க முடியாது. மேலும் உயரமான இடத்திலிருந்து தாங்கள் காட்சியளித்துக் கொண்டேயிருந்தால்தான் நம் வீரர்கள் பார்த்து உற்சாகமடைய முடியும்'' என்று பெரும் பெயர்ச்சாத்தன் வேண்டிக்கொண்டான். குமார பாண்டியனால் மறுக்க முடியவில்லை. யானைமேல் ஏறி அம்பாரியில் அமர்ந்து கொண்டான். மற்றப் படைமுதன்மையாளர்கள் குதிரைகளில் ஆரோகணித்துச் சூழ்ந்தனர். போர் தொடங்குவதற்கு அறிகுறியான கருவிகள் முழங்கின. யானைமேலமர்ந்து களம் நோக்கிச் சென்றபோது குமாரபாண்டியனுடைய முகத்தில் வீரம் விரவிய ஒருவகை அழகின் கம்பீரம் தவழ்ந்தது. தென்பாண்டி வீரர்களின் ஊக்கம் அந்த முகத்தை அண்ணாந்து பார்க்கும்போதெல்லாம் நான்கு மடங்காகப் பெருகியது.

எதிர்ப் பக்கத்தில் வடதிசைப் பெரும் படையும் பெரு முழக்கங்களோடு களத்தை நோக்கிப் பாய்ந்து வந்து கொண்டிருந்தது. ஒன்றோடொன்று மோதிக் கலக்க வரும் இரண்டு கடல் விளிம்புகளெனப் பயங்கரமாகத் தோன்றியது படைகளின் சங்கமம். வீரர்களின் குரல்கள், வாத்திய முழக்கங்கள், ஓடும் ஓசை, கரி பரிகளின் ஓலம், தத்தம் தரப்பின் வாழ்த்து ஒலி, எல்லாமாகச் சேர்ந்து களம் பிரளய ஓசையின் நிலையை அடைந்தது. படைக் கடல்கள் ஒன்று கலந்தன. போர் தொடங்கிவிட்டது. வழக்கம்போல் அலட்சியமாகப் பாசறைகளிலிருந்து கிளம்பிப் போர்க்களத்துக்கு வந்த வடதிசை மன்னர்கள் ஐவரும் எதிர்ப் பக்கத்தில் யானைமேல் ஆரோகணம் செய்து வரும் குமாரபாண்டியன் இராசசிம்மனைக் கண்டு திகைத்தனர். மருண்ட கண்களால் சோழன் கொடும்பாளூரானைப் பார்க்க அவன் கண்டன் அமுதனைப் பார்த்தான். கண்டன் அமுதன் அரசூருடையானைப் பார்க்க அவன் பரதூருடையானைப் பார்த்தான். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்ட அந்தப் பார்வை, ''இனி நாம் அலட்சியமாக இருப்பதற்கில்லை'' என்று தங்களுக்குள் குறிப்பாலேயே பேசிக் கொள்வது போலிருந்தது. ஒரு கணம்தான் வியப்பு, திகைப்பு, எல்லாம். போர்க்களத்தின் பிரளயத்துக்கு நடுவே ஆச்சரியப்பட்டுக் கொண்டு நிற்க நேரம் ஏது? போரைக் கவனித்து அதில் ஈடுபட்டார்கள் அவர்கள். புதிய துணிவும், ஊக்கமும் பெற்ற காரணத்தால் அன்றைக்குப் போரில் தென்பாண்டிப் படைகளின் கைகள்தான் ஓங்கியிருந்தன. மறுநாளும் அதே நிலை. குமாரபாண்டியன் வந்த மூன்றாவது நாள் காலைப் போர் தொடங்குகிற சமயத்தில் சக்கசேனாபதியும் ஈழநாட்டுப் படைகளும் வந்து சேர்ந்து கொண்டார்கள். வடதிசைப் படைத் தலைவர்களுக்கு அது இரண்டாவது அதிர்ச்சியாக அமைந்தது. கொதிப்போடு போர் செய்தனர் அவர்கள்.

தீவினைவயத்தால் அன்றைக்குப் போர் முடிந்து பாசறைக்குத் திரும்பும்போது குமாரபாண்டியனும், சக்க சேனாபதியும், அவர்களுடைய வீரர்களும் சோர்வும் துயரமுமாகத் திரும்பினர். காரணம்...? அன்று நடந்த போரில் கரவந்தபுரத்து அரசனும், மாவீரனுமாகிய பெரும் பெயர்ச்சாத்தன் மாண்டு போனான். எதிர்த் தரப்புப் படையிலிருந்த கிழைப் பழூர்க்கண்டன் அமுதன் குறி வைத்து எறிந்த வேல் பெரும் பெயர்ச்சாத்தனின் உயிரைக் குடித்துவிட்டது. அன்று காலையில் சக்கசேனாபதி படைகளோடு வந்து சேர்ந்து கொண்டிருக்கா விட்டால் பெரும் பெயர்ச்சாத்தன் மரணத்துக்குப் பின் தன்னம்பிக்கையையே இழந்திருப்பான் குமாரபாண்டியன். அடுத்தடுத்து இரண்டு அதிர்ச்சிகள் தென்பாண்டிப் படைகளைத் தளரவைத்தன. பெரும் பெயர்ச்சாத்தன் களத்தில் போரிட்டு இறந்துபோன அதே தினம் இரவு, படுகாயங்களை அடைந்து பாசறையில் படுத்தபடுக்கையாக இருந்த சேரநாட்டுப் படைத் தலைவனும் உயிர் விட்டுவிட்டான். இந்த இரு அதிர்ச்சிகளிலிருந்தும் மீட்டுப் படைகளைத் தைரியப்படுத்துவதற்காக அன்று இரவு முழுவதும் குமாரபாண்டியனும், சக்கசேனாபதியும் உறக்கமின்றி அலைந்து உழைத்தனர். வாட்டமடைந்திருந்த கரவந்தபுரத்து வீரர்களையும், சேரவீரர்களையும், ஊக்கமூட்டுவதற்குப் பெரும்பாடு பட்டனர். சோர்வும், சோகமும் கொண்டிருந்த படை வீரர்களுடைய பாசறைக்குத் தானே நடந்து போய்த் தைரியம் கூறினான் இராசசிம்மன். இவ்வளவும் செய்த பின்பே கலக்கமில்லாமல் மறுநாள் விடிந்ததும் களத்திற் புகுந்து போர் செய்ய முடிந்தது அவர்களால். பெரும் பெயர்ச்சாத்தன் இறந்து போனதால் பழையபடி படைகள் இரண்டே வியூகங்களாகக் குறுக்கப்பட்டன. அப்போது சக்கசேனாபதியே அவனைக் கலங்கவைக்கும் அந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டார். ''தலைமையேற்கப் படைத் தலைவர்கள் இல்லையென்று ஏன் படை வியூகங்களைக் குறுக்குகிறீர்கள்? தனபதி வல்லாளதேவனை வரவழைத்து நெருக்கடியைத் தவிர்க்கலாமே?'' என்று சக்கசேனாபதி கேட்டபோது அவருக்கு மறுமொழி கூறும் வகையறியாது தயங்கினான் அவன்.

''சக்கசேனாபதி! அதைப் பற்றி இப்போது உங்களிடம் பேசும் சக்தியற்றவனாக இருக்கிறேன் நான். ஆனால் நீங்களும் தெரிந்து கொள்ளவேண்டிய சமயம் வரும்போது அந்தச் செய்தியை உங்க

## வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

## மூன்று நன்மைகளீயும் அளிக்கிறது!




✓ வாயில் நறுமணம்!

✓ ஒளிவீசும் பற்கள்! ✓ சொத்தை குறையும்!

வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத் பவுடரை உபயோகியுங்கள் :

★ சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பற்களை 2 நிமிஷம் பிரஷ் கொண்டு தேய்க்கவும்.
★ பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
★ எப்போதும் ஈற்றிலிருந்து பல் நுனி நோக்கித் தேய்க்கவும்.

**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**

---

புதுமை பெறுக!
இதம் பெறுக!
நிர்மலமாய் இருங்கள்! நாள்முழுதும்!



மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத, மனோரம்மிய மணத்துடன்.

ளிடம் சொல்வேன். இப்போது என்னை விட்டுவிடுங்கள்'' என்று பதில் கூறிய போது அவரிடம் ஏதோ ஒரு துயரமான வேண்டுகோளைக் கேட்பது போன்றிருந்தது அவன் குரல்.

சக்கசேனாபதிக்கும், அவனுக்கும் இந்த விஷயத்தைப் பற்றிப் பேச்சு நடந்த அன்று இரவு நடுயாமத்தில் எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்கும் சமயத்தில் பாண்டியப் படைகளின் பாசறைகள இருந்த பகுதியில் திடீரென்று ஒரு பெருங் குழப்பம் உண்டாயிற்று. கூக்குரல்களும், கூட்டமாகச் சிலர் திடு திடுவென ஓடுகிற ஒலியும், தீப்பந்த வெளிச்சமுமாகக் கலவரம் எழுந்தது. சக்கசேனாபதியும், குமார பாண்டியனும் எழுந்து அது என்னவென்று பார்ப்பதற்காகச் சென்றனர்.

## அத்தியாயம் 19

# ஊழிப் புன்னகை

மகா மண்டலேசுவரர் அந்த மாதிரித் தளர்ந்து பேசிச் சேந்தன் அதற்கு முன்பு கேட்டதில்லை. கம்பீரத்தின் சாயை குன்றித் துயர அமைதியோடு கூடிய சாந்தம் நிலவுவதை அந்த முகமண்டலத்தில் அன்றுதான் கண்டான் அவன். புரிந்து கொள்ள முடியாத புதிர்த்தன்மை நிறைந்த அந்தக் கண்களில் ஏக்கம் படர்வதை முதல் முதலாகச் சேந்தன் பார்த்தான். நிமிர்ந்து அகன்று நீண்டு மேடிட்டுப் படர்ந்த அவருடைய நெற்றியில் மேதா கர்வம் மறைந்து சுருக்கங்கள் தெரிந்தன. சேந்தன் மனத்தில் அதையெல்லாம் பார்த்துக் காரணமற்ற பயங்கள் கிளர்ந்தன.

"சுவாமீ! இன்று தங்களுடைய பேச்சும், தோற்றமும், இதற்கு முன்பு நான் காணாத விதத்தில் இருக்கின்றனவே! என் மனம் எதை எதையோ நினைத்து அஞ்சுகிறதே?" என்று துணிவை வரவழைத்துக் கொண்டு அவரிடமே கேட்டான். அவன் இப்படிக் கேட்டதும் அவர் நேருக்கு நேர் திரும்பி அவனுடைய முகத்தைப் பார்த்தார். மெல்லச் சிரித்தார். வாடிய பூவைக் காண்பது போல் மங்கித் தென்பட்டது அந்தச் சிரிப்பு. சேந்தன் பயபக்தியுடனே அந்த முகத்தையும், அந்தச் சிரிப்பையுமே பார்த்துக் கொண்டு நின்றான். மெல்ல நடந்து அருகில் வந்து தம் சொந்தக் குழந்தை ஒன்றைத் தடவிக் கொடுப்பது போல் அவன் முதுகை இரு கைகளாலும் வருடினார்.

"சேந்தா! உன்னைப்போல் என்னிடம் நன்றி விசுவாசங்களோடு உழைத்த மனிதன் வேறுயாருமில்லை. உன்னிடம் எந்த அந்தரங்கத்தையும் நான் மறைக்கக் கூடாது. ஆனாலும் இப்போது என்னிடம் எதுவும் கேட்காதே......பேசாமல் என்னுடன் இடையாற்று மங்கலத்துக்கு வா." இந்த வார்த்தைகளைச் சொல்லும் போது அவருடைய கண்கள் கலங்கி ஈரம் கசிந்து பளபளப்பதை அவன் பார்த்து விட்டான். அதைப் பார்த்ததும் சேந்தனுடைய மனத்தை ஏதோ ஒரு அவல உணர்வு இறுக்கிப் பிழிந்தது. அழுகை வந்துவிடும் போலிருந்தது. அரிய முயற்சியின் பேரில் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு அவரோடு இடையாற்று மங்கலம் சென்றான். இடைவழியிலுள்ள ஊர்களிலெல்லாம் போர்க்காலத்தில் நிலவும் பயமும், பரபரப்பும், நிலவிக் கொண்டிருந்தன. வேளாண்மைத் தொழில் சரியாக நடைபெறவில்லை. ஊர்கள் கலகலப்புக் குறைந்து காணப்பட்டன. பறளியாற்றில் நீர் குறைந்து காலால் நடந்து அக்கரை சேர்ந்து விடுமளவுக்கு ஆழமற்றிருந்தது. கரையோரத்து ஆலமரங்களில் இலைகள் பழுத்தும், உதிர்த்தும் விகாரமாகத் தென்பட்டன. சோகமயமான பெரிய நிகழ்ச்சி ஒன்று வருவதற்கு முன் கூத்தரங்கத்தில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருக்கும் அவையினரின் அமைதி போல இடையாற்று மங்கலம் தீவும், மகாமண்டலேசுவரர் மாளிகையும் நிசப்தமாயிருந்தன.

சேந்தனும், மகாமண்டலேசுவரரும், பறளியாற்றைக் கடந்து இடையாற்று மங்கலத்தை அடையும்போது நண்பகலாகி விட்டது. வெய்யில் நன்றாகக் காய்ந்து கொண்டிருந்தது. அம்பலவன் வேளானையும், இரண்டொரு காவல் வீரர்களையும் தவிர இடையாற்று மங்கலம் மாளிகையில் வேறு யாரும் இல்லை.

"சேந்தா! இப்போது இந்த இடம் மயானம்போல் அமைதியாயில்லை?" என்று ஒரு தினுசாகச் சிரித்துக் கொண்டே அவர் கேட்டார். அவன் அதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் விழித்தான். அந்தச் சமயத்தில் அம்பலவன் வேளான் வந்து அவர்களெதிரே வணங்கி நின்றான்.

"வேளான்! நீ உடனே அரண்மனைக்குப் புறப்பட்டுப் போ; அங்கே மகாராணியோடு குழல்மொழி தங்கியிருக்கிறாள். நான் அழைத்துவரச் சொன்னதாக உடனே அவளை அழைத்துவா" என்று மகாமண்டலேசுவரர் கட்டளையிட்டார். அவரே குழல் மொழியை மகாராணியோடு அரண்மனைக்கு அனுப்பிவிட்டு ஏன் இப்போது இவ்வளவு அவசரமாக அழைத்துவரச் சொல்கிறாரென்று விளங்காமல் சேந்தன் திகைத்தான். அவர் கட்டளை இட்ட உடனே வேளான் புறப்பட்டுப் போய்விட்டான். மகாமண்டலேசுவரர் சேந்தன் பின் தொடர மாளிகைக்குள் போய் ஒவ்வோர் இடமாக அன்றுதான் புதிதாகச் சுற்றிப் பார்ப்பவர் போல் சுற்றிப் பார்த்தார். நந்த

வனத்துக்குப் போய் ஒவ்வொரு செடியாக, ஒவ்வொரு மரமாக, ஒவ்வொரு கொடியாக, நின்று நோக்கினார். அவருடைய நோக்கம் என்னவாக இருக்குமென்று சேந்தனால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. கடைசியாக இடையாற்றுமங்கலம் மாளிகையின் மேல்மாடத்து நிலா முற்றத்தில் உயர்ந்த இடத்தில் ஏறி நான்கு புறமும் சுற்றிச் சுற்றிப் பார்த்தார். அப்போதும் மகாமண்டலேசுவரர் சிறு குழந்தைமாதிரிக் கண் கலங்கி நிற்பதைச் சேந்தன் கண்டான். அவனால் பொறுக்க முடியவில்லை. சகலத்தையும் ஆட்டிப்படைத்துக் கொண்டிருந்த அந்த அறிவுமலை கண்கலங்கி நிற்பதைக் காணப் பொறுக்காமல், "சுவாமீ! மறுபடியும் இப்படிக் கேட்பதற்காக என்னை மன்னியுங்கள். உங்கள் செயல்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை" என்று அழுகையின் சாயை பதிந்த குரலில் கேட்டான் சேந்தன். மெதுவாகத் திரும்பி அவன் முகத்தைப் பார்த்து முன்போலவே சிரித்தார் அவர். "சேந்தா! நீ மிகவும் நல்லவன்" என்று அவன் கேட்ட கேள்வியோடு தொடர்பின்றிப் பதில் வந்தது அவரிடமிருந்து.

சிறிது நேரத்தில் இருவரும் நிலா முற்றத்திலிருந்து கீழே இறங்கி வந்தனர். "சேந்தா! நீ போய் நந்தவனத்திலிருந்து எத்தனை வகை மலர்கள் இருக்கின்றனவோ அவ்வளவும் குடலை நிறையக் கொய்து கொண்டு வா. நான் போய் நீராடி வருகிறேன்" என்று கூறிச் சேந்தனை நந்தவனத்துக்கு அனுப்பிவிட்டுப் பறளியாற்றை நோக்கி நடந்தார் மகாமண்டலேசுவரர். குழந்தைத்தனமாக வெகு நேரம் துளைந்து முங்கி முழுகி நீராடினார். ஈரம்புலராத ஆடையோடு இடையாற்றுமங்கலம் மாளிகையிலிருந்த சிவன் கோயில் வாயிலுக்கு வந்தார். சேந்தன் குடலை நிறையப் பலநிறப் பூக்களோடு எதிரே வந்து நின்றான். அவற்றை வாங்கிக் கொண்டு ஆலயத்துக்குள் சென்றவர் வெகுநேரம் வெளியே வரவில்லை. மேலாடையை அரையில் பயபக்தியோடு கட்டிக் கொண்டு கோவிலுக்குள் நுழைந்து எட்டிப் பார்த்தான் சேந்தன். அங்கே கண்ட காட்சி அவனை மெய்சிலிர்க்க வைத்தது. சிவலிங்கத்திற்கு முன்னால் மகாமண்டலேசுவரர் தியானத்தில் அமர்ந்திருந்தார். சற்றே மூடிக் குவிந்திருந்த அவருடைய விழிப் பள்ளங்களிலிருந்து மாலை மாலையாகக் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. தம் சிரத்தை அலங்கரித்துக் கொண்டிருந்த முடியைக் கழற்றி மலர்களோடு சிவலிங்கத்தின் பீடத்தில் இட்டிருந்தார் அவர். சேந்தன் அதைக் கண்டு மெய்யும், மனமும் குழைந்து, உரோம புளகமெய்திக் கண்ணீரரும்ப நின்றான். எவ்வளவு நேரம் அப்படி நின்றானோ அவன்? தன்னை மறந்து நின்று கொண்டே இருந்தான்.

மகாமண்டலேசுவரர் தியானங்கலைந்து எழுந்து நின்றார். அப்போதுதான் மலர்ந்த செந்தாமரைப் பூப்போல் அவருடைய முகத்தில் தெய்வீகமானதொரு ஒளி மலர்ந்து இலங்கியது. அந்த ஒளியின் மலர்ச்சியில் அறிவின் அகங்காரம் எரிந்து சாம்பலாகிவிட்டது போல் திருநீறு துலங்கியது நெற்றியில்.

"சேந்தா! 'மகாமண்டலேசுவரரை, அதோ அந்த இடத்தில் கழற்றி வைத்து விட்டேன். இனி என் தலையில் யாரும் கல்லெறிய மாட்டார்கள்" என்று சிவலிங்கத்தின் பீடத்தைச் சுட்டிக் காட்டிச் சொன்னார் அவர். அப்போது அவருடைய முகத்தில் மலர்ந்த சிரிப்பில் கருணை பூத்திருந்தது. சேந்தன் பேசும் உணர்விழந்து போய் நின்றான்.

"என்னோடு வா!" என்று அவனைக் கைப்பற்றி அழைத்துச் சென்று சிவாலயத்து முன்குறட்டில் கொண்டுபோய் உட்கார வைத்து விட்டுத் தாமும் எதிரே உட்கார்ந்தார். அப்போது ஒளிமங்கி இருள்சூழ ஆரம்பித்திருந்த சமயம். காற்று இதமாகக் குளிர்ந்து வீசிக் கொண்டிருந்தது. சிவாலயத்துக்குள்ளிருந்து அகிற்புகையின் மணமும், மலர்களின் வாசனையும் கலந்து வெளிவந்து பரவியது. அந்த அற்புதமான சூழலில் இடையாற்றுமங்கலம் நம்பியின் குரல் சேந்தனை நோக்கி ஒலித்தது.

"சேந்தா, கேள்! நீயும் உன் மனமும் எந்தப் பேரறிவின் முன்னால் பணிந்து வீர வணக்கம் செலுத்தி வருகிறீர்களோ அந்த அறிவு இப்போது அழிந்து விட்டது. அல்லது தன்னை அழித்துக் கொண்டு விட்டது என்று வேண்டுமானால் வைத்துக் கொள். கயிற்றால் கட்டப்பட்டுக் கையும் காலும் ஆடும் மரப்பாவை கயிற்றின் இணைப்பறும்போது ஆட்டமற்றுப் போவது போல் நல்வினைகளின் கழிவு காலத்தில் அறிவும் மனிதனுக்குப் பயன்படுவதில்லை. இந்த உண்மையைத் தெரிந்து கொள்ள எனக்கு இத்தனை காலம் வாழ்ந்து பார்க்க வேண்டியிருந்தது அப்பா! அறிவு அளவற்றுப் பெருகிக் கூர்மையாகும்போது அதை நமக்களிக்கும் தெய்வத்தை நோக்கிச் செலுத்தும் பக்தியாக மாற்றிக் கொண்டுவிட வேண்டும். அதை நான் செய்யத் தவறிவிட்டேன். கத்தியை நீட்டிப் பயமுறுத்தும் வழிப்பறியாளனைப் போல என் அறிவைப் பிறர் அஞ்சும் கருவியாக்கினேன். அளவற்ற அறிவின் கூர்மைக்கு எதிரிகளும், பொறாமைப் படுபவர்களும், ஏற்படாமலிருக்க வேண்டுமானால் அதைப் பக்தியாக மாற்றிக் கொண்டுவிட வேண்டும். நான் இறுமாந்து செம்மாந்து திரிந்தேன். என் கண் பார்வையால் மனிதர்களை இயக்கினேன். நல்வினை துணை நின்றவரையில் என் அறிவு பயன்பட்டது. தளபதியும், கழற்கால் மாறனும், என்மேல் அருவைப்படத் தொடங்குகிற சமயத்திலேயே என் நல்வினையின் விளைவு குன்ற ஆரம்பித்து விட்டது.

"நான் சிறைப்படுத்திவைத்த தளபதி தப்பிவந்தான். நான் தந்திரமாக அடக்க எண்ணிய ஆபத்துதவிகள் தலைவனோடு சேர்ந்து கொண்டான். நான் மறைக்க விரும்பிய பகவதியின் மரணத்தைத் தளபதியும், ஆபத்துதவிகள் தலைவனுமே கேட்டுத் தெரிந்து கொண்டு என்மேல் கல்லெறிந்து விட்டு ஓடினார்கள். உங்கள் கப்பலில் உங்களோடு தற்செயலாக மாறு வேடத்தில் வந்து தன் திமிரால் இறந்து போன பகவதி என் சூழ்ச்சியினால் கொல்லப்பட்டாளென்றே தளபதி நினைத்து விட்டான். என் நல்வினை கழிகிற காலம் வந்ததனால்தான் அவன் மனத்தில் இந்த நினைவு உண்டாயிற்று. இப்போது அவனும் குழற்காலமாறனார் முதலியவர்களும் ஒன்று சேர்ந்து என்னை அழிக்க முயன்று திட்டமிட்டுக் கொண்டிருப்பார்கள். அதை எதிர்த்துச் சூழ்ச்சி செய்ய என் அறிவுக்கு இப்போது ஆற்றலில்லை. நல்வினைப்பயனை அது இழந்து விட்டது. ஒவ்வொருவருடைய அறிவுக்கும் 'ஆகூழ்' (வளர்ச்சி) 'போகூழ்' (அழிவு) என இரண்டு நிலை உண்டு. எனக்கு இப்போது போகூழ் நிலை. என் அறிவு இனிமேல் பயன்படாது. என் முகத்தை நிமிர்ந்து பார்ப்பதற்கே பயப்படுகிறவர்கள் என் நெஞ்சுக்குக் குறி வைத்துக் கத்தியை ஓங்கவும், தலையில் கல்லெறியவும் துணிந்து விட்டார்களென்றால் என் அறிவு அவர்களைத் தடுக்கும் நல்வினைத் துணையை இழந்துவிட்டது என்றுதான் பொருள். அதன் விளைவாக இந்தத் தென்பாண்டி நாட்டுக்கே துன்பங்களை வளர்த்து விட்டேன் நான். பக்தியாக மாறாத காரணத்தால், ஞானமாகப் பழுக்காத இயல்பால், எத்தனை பிரிவினைச் சக்திகளை இங்கே உண்டாக்கிவிட்டது என் அறிவு? தளபதியின் முரட்டு வீரத்தைப் போலவே, என் முரட்டு அறிவும் எவ்வளவு கெடுதலானதென்பதை இன்று உணர்கிறேன். ஆனால் இது காலங் கடந்த உணர்வு. மகாமண்டலேசுவரர் என்ற அந்தப் பதவியை ஏற்றுக்கொண்ட காலத்திலேயே எனக்கு இந்த உணர்வு இருந்திருந்தால் எவ்வளவோ பயன்பட்டிருக்கும்? ஒழுக்கம், நேர்மை,—அறிவின் அகந்தையழியாத தெய்வ பக்தி, இவற்றை வைத்துக் கொண்டிருந்தேன். இதுவரை இடையாற்று மங்கலத்துச் சிவன் கோவிலில் நான் செய்த அத்தனை வழிபாடும் அறிவின் ஆணவத்தோடு செய்தவை. ஏனென்றால் அந்த வழிபாடுகளின்போது நான் மனமுருகிக் கண்ணீர் சிந்தியதில்லை. இன்று செய்த வழிபாடுதான் உண்மையான வழிபாடு. இன்றைக்கு வடித்த கண்ணீரில் என் அறிவுக் கொழுப்பெல்லாம் கரைந்து விட்டது அப்பா! ஒவ்வொரு தலைமுறையிலும் மனிதனுக்குக் காலங்கடந்து புத்தி வருவதால் தான் விதியின் வெற்றிகள் அதிகமாகி விடுகின்றன. சேந்தா! நான் மறுபடியும் ஒரு பிறவி எடுத்தால் அறிவாளியாகப் பிறக்க மாட்டேன். பக்திமானாகப் பிறப்பேன். பாடியும், அழுதும் தொண்டு செய்யும் என்னை அழித்துக் கொண்டு இன்பம் காண்பேன்." இந்தக் கடைசி வாக்கியத்தைச் சொல்லும்போது இடையாற்று மங்கலம் நம்பியின் குரலில் அழுகை குமுறிப் பாய்ந்தது. குரல் தழுதழுத்துப் பேச்சுத் தடைப்பட்டது. இரண்டு கன்னங்களிலும் கண்ணீர் முத்துக்கள் உருண்டு வடிந்தன.

அதுவரை சிலைபோல் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்த சேந்தன் வாய் திறந்தான். "சுவாமீ! இந்த விநாடியே தாங்கள் உத்தரவு கொடுத்தால் தங்கள் எதிரிகளை அழித்தொழித்து விட என்னு





பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு புது டில்லியிலுள்ள அகில இந்திய வைத்திய விஞ்ஞானக் கழகத்துக்கு மே மாதம் 21ந் தேதி விஜயம் செய்தார். விஞ்ஞானக் கழகத்தைச் சேர்ந்த ஆஸ்பத்திரியில் ஒரு குழந்தையைப் பாரதப் பிரதமர் நேருஜி மகிழ்வூட்டித் தானும் மகிழ்கிறார்.

லான முயற்சியைச் செய்கிறேன். தாங்கள் இப்படி நைந்து மனம் புண்பட்டுப் பேசுவது நன்றாயில்லை!" இதைக் கேட்டு அவர் பலமாக வாய்விட்டுச் சிரித்தார். "சேந்தா! நீ நன்றியுள்ள ஊழியன். ஆனால் உன் கைகளின் ஆற்றல் விதியின் ஆற்றலுக்கு முன் மிகச் சிறியவை. என்னுடைய எதிரிகளால் என்னென்ன சீரழிவுகள் வரப் போகின்றன என்பதை நீ உடனிருந்து காணப் போவதில்லை! அதற்குள் ஒரு மாபெரும் சன்மானத்தை நீ கனவிலும் எதிர்பார்த்திராத சன்மானத்தை உனக்குக் கொடுத்து உன்னிடம் நான் பட்டிருக்கும் நன்றிக் கடனைத் தீர்த்து உன்னை இங்கிருந்து அனுப்பி விடுவேன்" என்றார்.

"சுவாமி! அப்படியெல்லாம் சொல்லி என் மனத்தைப் புண்படுத்தாதீர்கள். நன்றியுமில்லை, கடனுமில்லை, இந்த உடல் உங்களுக்குச் சொந்தம். உங்களுக்கே உழைத்துச் சாவதற்குக் கடமைப்பட்டது" என்று உருக்கமாகச் சொன்னான் சேந்தன்.

"அதெல்லாமில்லை! நான் எதை உனக்குக் கொடுக்கிறேனோ, அதை மறுக்காமல் ஏற்றுக் கொள்கிறேனென்று சத்தியம் செய்து கொடு. இந்த நாட்டு மகாராணிக்கும், குமாரபாண்டியனுக்கும் கூட நான் இவ்வளவு நன்றிக் கடன் படவில்லை. ஆனால் உனக்குக் கடன் பட்டிருக்கிறேன் சேந்தா!" அவர் கூறியதைக் கேட்டுச் சேந்தன் தயங்கினான். அவர் சிரித்துக் கொண்டே மேலும் கூறினார். "பார்த்தாயா? எனது கல்வினைப்பயன் தீர்கிற காலத்தில் நீ கூட நான் சொல்கிறபடி கேட்கமாட்டேனென்கிறாயே!"

"ஐயோ; சுவாமீ! அந்தக் குற்றத்தை என்மேல் சுமத்தாதீர்கள். நான் நீங்கள் கொடுப்பதை ஏற்றுக் கொள்கிறேன். நீங்கள் சொல்கிறபடியே கேட்கிறேன். இது சத்தியம். இது நிச்சயம்" என்று கைகூப்பிச் சொன்னான் சேந்தன்.

"சிவன்கோவில் குறட்டில் உட்கார்ந்து என்னை வணங்கிக் கொண்டே நீ சொல்லும் இந்த வார்த்தைகள் உறுதிதானே? எந்தக் காரணத்துக்காகவும் நீ கொடுத்த சத்தியத்தை மாற்றமாட்டாயே?"

"என்மேல் இன்னும் சந்தேகமா சுவாமீ?" என்று கூறிய அவனை விளக்கருகே கூட்டிக்கொண்டு போய் அவன் முகத்தை உற்றுப் பார்த்தார் அவர். சில விநாடிகள் அப்படியே பார்த்துக் கொண்டு நின்றவர், "சேந்தா! உன் சத்தியத்தை நம்புகிறேன்" என்று நிர்மானமான குரலில் சொன்னார்.

"என் பாக்கியம்" என்றான் சேந்தன்.

"இப்போது கேட்டுக் கொள்! அதிர்ச்சியோ கூச்சமோ அடையாதே. நான் பட்ட நன்றிக் கடனைத் தீர்த்துக் கொள்வதற்காக என் பெண் குழல்மொழியை உனக்குக் கொடுக்கப் போகிறேன்!"

"சுவாமீ! அபசாரம்...என்ன வார்த்தை கூறினீர்கள்? மகா மண்டலேசுவரரின் செல்வப் புதல்வி எங்கே? இந்த அடிமை ஊழியன் எங்கே? நான் அதற்குத் தகுதியற்றவன். குருபீ...மேலும் தங்கள் அருமைக் குமாரி அல்லும் பகலும் குமாரபாண்டியரின் நினைவிலேயே ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள்" என்று அலறிக் கொண்டே நெடுஞ்சாண்கிடையாக அவர் பாதங்களில் வீழ்ந்து பற்றிக்கொண்டான் நாராயணன் சேந்தன்.

"அவள் குமாரபாண்டியனைக் காதலிப்பதை நான் அறிவேன். ஆயினும் என் விருப்பம் அவளை நீ ஏற்கவேண்டும் என்பதுதான். இதை மாற்ற முடியாது. எழுந்திரு!" சிரித்தவாறே கூறினார் அவர். அந்தச் சிரிப்பு — அது ஊழிக்காலத்தின் புன்னகையா?

(தொடரும்)

*கொச்சைத் தமிழ்*

## பிள்ளையார் பிடிக்க....

சென்னையில் கொச்சைத் தமிழ் வழக்கு அதிகமாக உண்டு. 'காலாடி, இல்லாடி, லம்பாடி' முதலிய சொற்களை அடிக்கடி கேட்கலாம். காலாடி எனபது சோம்பேறியைக் குறிக்கும். சோதா என்றும் அப்பேர்வழியைச் சொல்வதுண்டு. சென்னைக்கு அருகேயுள்ள திருவொற்றியூரில் காலாடிப்பேட்டை என்ற பகுதியொன்று உள்ளது. காலாடிகளுக்கும் அவ்வூருக்கும் பெயர்ப் பொருத்தத்தைத் தவிர எவ்விதப் பொருத்தமும் இருப்பதாகத் தெரியவில்லை. நெசவுத் தொழில் செய்யும் மக்களே பெரும்பாலும் அப்பேட்டையில் வாழ்கிறார்கள். 'அப்படியானால் காலாடிப்பேட்டை என்ற பெயர் அதற்கு எப்படி வந்தது?' என்றால் அது ஒரு விந்தையான செய்தி. சென்னைத் துரைத்தனத்தில் 'காலெட்' என்ற ஆங்கிலேயன் மூன்று ஆண்டுகள் கவர்னராய் இருந்தான். தன் பேரை நிலைநாட்டுவதில் அவனுக்குப் பேராசை. திருவொற்றியூரில் புதிதாக ஒரு பேட்டையை உண்டாக்கி 'காலெட் பேட்டை' என்று அதற்குப் பெயர் கொடுத்தான். 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது' என்பது போல், 'காலெட் பேட்டை' காலாடிப் பேட்டையாகி விட்டது.

— பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை

காலையில் இருக்கும் புதுமலர்ச்சி
நாள் முழுவதும் இருக்க

# பாண்ட்ஸ்

ட்ரீம்ப்ளவர் டால்க்




நாள் முழுவதும் புதுமலர்ச்சியுடனும்
குளுமையுடனும் இருக்க, ஸ்நானத்திற்குப்பின்
பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்
உபயோகியுங்கள்!

பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்
இன்பகரமான பரிமளமுள்ளது; மற்றும்
வியர்வையை உறுஞ்சும் தன்மையுடையது.
அது உங்களுக்கு நாள் முழுவதும்
நீடித்திருக்கும் புத்துணர்ச்சியை அளிக்கும்!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

# தில்லை சங்கீத சபா துவக்க விழா





சென்ற 10-5-59 ஞாயிற்றுக்கிழமை மாலை திருச்சியில் 'தில்லை சங்கீத சபா' வின் ஆரம்ப வைபவம் மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. சிருங்கேரி சாரதா பீடாதிபதி, ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் முன்னிலையில் அவர்களுடைய அருளாசிகளோடு மேற்படி சபாவின் ஆரம்ப விழா காருகுறிச்சி திரு பி. அருணசலம் அவர்களின் நாதஸ்வரக் கச்சேரியோடு ஆரம்பமாயிற்று.

ஆரம்பத்தில் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் ''சாந்தமுலேக சௌக்யமு லேது (சாந்தம் இல்லையேல் சுகமில்லை) சங்கீதமானது சாந்தத்தைத்தந்து, அதன் மூலம் சௌக்யத்துக்கு வழி செய்கிறது. சங்கீதம், ஆத்மாவுக்கு அமைதி அளித்து, மனத்துக்கு மகிழ்ச்சி ஊட்டுகிறது. பக்தி இல்லாவிட்டாலும் கூட சங்கீதத்தின் மூலம் கடவுள் விசுவாசம் ஏற்படுகிறது. சாகித்ய சங்கீதத்துக்கு மக்கள் ஆதரவு கண்டு மகிழ்கிறேன். நல்லிசை மூலம் இறைவனின் நல்லருள் பெறலாம்'' என்று கூறிச் சபைக்கு ஆசி கூறினார்கள்.

சென்னை சர்வகலாசாலை சங்கீதப் பேராசிரியர் ஸ்ரீ பி. சாம்பமூர்த்தி தலைமை வகித்தார். ''இந்திய சங்கீதம் இந்தியாவுக்கே உரிய முறையில் சாஸ்திரீய அடிப்படையில் அபிவிருத்தி அடைந்துள்ளது. சப்தஸ்வரங்களான ஸ, ரி, க, ம, ப, த, நி இந்திய உபநிஷத்துக்களிலும், சாஸ்திரங்களிலும் காணப்படுவதே இந்திய சங்கீதத்தின் தெய்வீகத் தன்மையைப் புலப்படுத்துவதாகும்'' என்று திரு சாம்பமூர்த்தி அவர்கள் தமது தலைமை உரையில் கூறினர். சங்கீத ரத்னகர அரியக்குடி ஸ்ரீ ராமாநுஜ அய்யங்கார் சபாவைத் துவக்கி வைத்தார். அரியக்குடி அவர்கள் தமது தலைமை உரையில், ''சங்கீத சபை திறமையான வகையில் செயல்பட அனைவரும் ஒத்துழைக்க வேண்டும். சங்கீதத்தின் தூய்மை பாதுகாக்கப்படவேண்டும்'' என்று குறிப்பிட்டார். திருக்கோயிலூர் சகோதரிகள் அலமேலு, புஷ்பா பிரார்த்தனை கீதம் பாடினார்கள்.

பின்னர் அரியக்குடி ராமாநுஜ அய்யங்கார் அவர்களின் கச்சேரி நடைபெற்றது. கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களையும் அவர் தம் இசை வெள்ளத்தில் திளைக்க வைத்தார். பக்கவாத்தியங்களாக ஸ்ரீ டி. என். கிருஷ்ணன் அவர்கள் வயலினும், ஸ்ரீ டி. கே. மூர்த்தி அவர்கள் மிருதங்கமும், ஸ்ரீ எம். ராஜாராமன் அவர்கள் கஞ்சிராவும் வாசித்துச் சிறப்பித்தார்கள்.

அரியக்குடி அவர்களின் சங்கீத மேதையைப் பாராட்டி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அவருக்கு ''சங்கீத சாஸ்திர அலங்கார'' என்ற பட்டம் அளித்து, விலையுயர்ந்த பொன்னாடை ஒன்றும், ஸ்ரீ சாரதா அம்பிகையின் திருவுருவம் அமைந்த தங்க முத்திரை (பதக்கம்) ஒன்றும் வழங்கி அவரைக் கௌரவித்தார்கள்.

காருகுறிச்சி ஸ்ரீ அருணசலம் அவர்களின் வாசிப்பைப் பெரிதும் பாராட்டி, காலஞ்சென்ற ஸ்ரீ நாதசுவர மேதை ராஜரத்தினம் பிள்ளை அவர்களின் வாரிசாக விளங்கி அகில உலகமும் புகழும்படி நீடூழி வாழ வேண்டுமென்று ஆசீர்வதித்து, அவரைத் தமது ஆஸ்தான வித்வானாக நியமனம் செய்து கொண்டார்கள். தில்லை சங்கீத சபையார் காருகுறிச்சி அருணசலத்துக்காகச் செய்திருந்த தங்கப் பதக்கம் ஒன்றையும் சுவாமிகள் தமது திருக் கரங்களாலேயே அவருக்கு வழங்கியருளினார்கள்.

கடைசியாக ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் வந்தனோபசாரம் கூற, தில்லை சங்கீத சபாவின் ஆரம்ப விழா நிகழ்ச்சிகள் இனிது நிறைவேறின.

# வேங்கை மரத்து விநாயகர்

பிலோ இருதயநாத்

தலங்களுக்குப் பெயர் போனது தென்னுடு. அதிலும் ஆலயங்கள் நிறைந்தது தஞ்சை மாவட்டம். திருவாரூருக்கும் நாகைக்கும் இடையே சிக்கல் என்னும் தலம் இருப்பதை அறியாதவர்கள் இருக்க மாட்டார்கள். சிக்கல் என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே சிங்கார வடிவேலரின் நினைவு தானுக வந்துவிடும். இப்பொழுதோ...? அவரோடு அவ தமையனுரும் நினைவுக்கு வருகிருர். தம்பிக்குத் திருமணம் நடத்தி வைத்தவராயிற்றே! அதோடு கடல் கடந்தும் சென்று தமது புகழைப் பெருக்கிக் கொண்டவராயிற்றே!

எல்லோரும் பக்தியுடன் வழிபடும் இவர் திபேத், நேபாளம், துருக்கிஸ்தான் முதலிய நாடுகளிலும் கடல் கடந்து சுமத்ரா, ஜாவா, பாலி, போர்னியோ, சயாம், இந்தோ சீன, சீன, ஜப்பான், சுழம், தென் ஆப்பிரிக்கா முதலிய நாடுகளிலும் அன்றுமின்றும் வழிபடு தெய்வமாகக் காட்சியளிக்கிருர்.

பிள்ளையாரை அச்சில் வார்த்துக் களிமண்ணுல் கட்டையில் உருவம் எடுத்து விற்பனை செய்வதே ஒரு தனிக் கலை. களிமண்ணுல் பிள்ளையாரைச் செய்து கண்களில் குன்றிமணிகளை வைக்கும் காட்சியைக் காண்பதில் ஓர் ஆனந்தம்.

விநாயகசதுர்த்தி முடிந்து பிள்ளையாரை மணையின்மேல் வைத்துத் தூக்கிப்போய்க் கடலிலோ, கிணற்றிலோ, குளத்திலோ விடும்போது தெருப் பிள்ளைகள் எல்லோரும் ஒன்றுகக் கூடி விடுவார்கள். பிள்ளையார் இல்லத்தைவிட்டுப் பிரயாணம் செய்கிருர் என்பது பறை யடிக்காமலே தெரு முழுவதும் தெரிந்து விடும். இவ்விதமாகப் பல உருவங்களில் பல இடங்களில், பல நாடுகளில் பரவியுள்ள பிள்ளையார் "விநாயகர், பிள்ளையார், கணபதி, கணேசர், கஜானனர், லம்போதரர், சித்தி தாதா, ஏகதந்தர், குகராஜா, ஹேரம்பர், செல்லப்பிள்ளை" என்று பல காரணப் பெயர்களில் உலகிலுள்ள பலருக்கும் இன்பம் தருகிருர். இதில் இவருக்கு ஒரு தனி இன்பம் போலும்!

சேர்வராயன் மலையில் வாழும் மலையாளி என்ற ஆதிவாசிகள் மழை வேண்டுமாயின் சாணியால் செய்யப்பட்ட பிள்ளையாரை எருக் குப்பைக்குள் புதைத்து விடுவார்கள். மழை வந்த பின்தான் பிள்ளையாரை வெளியில் எடுப்பார்கள்.

இந்தியர்களில் சிலர் தங்கள் இல்லத்தையும், கிராமத்தையும் காக்கும் தெய்வமாக இவரைக் கருதுவார்கள். கிராமத்தில் உண்டாகும் எல்லாத் தொழில்களுக்கும் இவர் அதிபதியாம். பிள்ளைகள் இல்லாத இல்லத்திலும் பிள்ளையார் இல்லாமல் இருக்க மாட்டார்.

இவ்வளவு பெருமைகள் வாய்ந்த கணநாதர், சிக்கல் சிங்கார வடிவேலனுக்கும் மேலாக நிகழ்த்திய அதிசயம் என்ன, தெரியுமா?

சிக்கல் ரயில்வே நிலையத்திலிருந்து இரண்டு மைல் தூரத்தில் 'சிக்கல் பந்து' என்று சின்னஞ்சிறு குக்கிராமம் ஒன்று இருக்கிறது. சிக்கலான பாதை வழியே தான் அவ்வூரை அடைய வேண்டும். அங்கே ஒரு வேங்கை மரம். அதன் வேரிலே தாமாகத் தோன்றிக் காண வருபவர்களை யெல்லாம் கனவு லோகத்துக்கே இழுத்துச் செல்கிருர் பிள்ளையார். 'இப்படியும் நடக்குமா?' என்று மக்களை அதிசயிக்கச் செய்கிருர்.

எங்கும் நடக்காத நிகழ்ச்சியாக வேங்கை மரத்தின் வேர் எப்படித்தான் விநாயகரது உருவத்தைத் தரித்துக் கொண்டு வளர்ந்ததோ, தெரியவில்லை! ஆஸ்திகத்தில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கும் கூட நம்பிக்கை உண்டாக்கும் வகையில் ஐங்கரத்தான் இங்கே தரிசனம் தருகிருர். இவர் மேற்குப் புறமாகப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருக்கிருர். மரத்தைச் சுற்றிலும்பெரிய பந்தல் ஒன்று போடப்பட்டிருக்கிறது. அடி மரத்தின் பருமனுன பாகத்தில் மரத்தோடு மரத்தின் ஒரு பகுதியாகவே, விநாயகப் பெருமானது உருவமும் வளர்ந்து வருகிறது. ஆனால் பார்ப்பதற்குத் தனிப்பட்ட விநாயகர், மரத்தில் தனித்து வளர்ந்து உட்கார்ந்திருப்பது போலிருக்கிறது.

"மரம் வளர வளரப் பிள்ளையாரும் வளர்ந்து பருமனுகிறது" என்று கிராம மக்கள் கூறுகிருர்கள். பிள்ளையார் சதுர்த்தி இங்கு அதிக விசேஷமாகக் கொண்டாடப்படுகிறதாம். ஏராளமான பக்தர்கள் வந்து தரிசித்த வண்ணம் இருக்கிருர்கள்.



வேரிலே தோன்றியுள்ள விநாயகர்

# அறிவிப்பு

## தனது மதிப்பிற்குரிய வாடிக்கையாளர்களுக்கு....

வெங்கடேஷ் வஸ்த்ராலயாவின் முன்னாள் நிர்வாக பங்குதாரரான ஸ்ரீ வி. கிருஷ்ணன் கீழ்க்காணும் பெயரில் தாம் சொந்தமாக வியாபாரம் துவக்கியிருப்பதை மகிழ்ச்சியுடனும் பணிவன்புடனும் தெரிவித்துக் கொள்ளுகிறார்

# ஸ்ரீ கிருஷ்ணா டெக்ஸ்டைல்ஸ்

**2, தம்பு செட்டித் தெரு, சென்னை - 1**

கடந்த இருபது ஆண்டுகளுக்கு மேலாக மரியாதையுடனும் மிகத் திறமையாகவும் தனது மதிப்பிற்குரிய வாடிக்கையாளர்களுக்குச் சேவை செய்து வந்ததைப் போலவே தொடர்ந்தும் சேவை செய்ய முடியும் என்ற உத்தரவாதத்தையும் இச்சமயத்தில் ஸ்ரீ வி. கிருஷ்ணன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறார்

ஆர்வி

அத்தியாயம் 19

## நொடிப்பு

புத்தம் புது மலரைப் போலப் புதுமையும் பொலிவும் கொண்டு விளங்கினாள் உஷா. அவளுடைய பேச்சிலும் நடையிலும் அடக்கமும் மென்மையும் நிறைந்திருந்தன. அவள் மிருதுவாகத்தான் பேசினாள்; அதைவிடக் கனிவோடுதான் பார்த்தாள். இளம் தென்றலின் அசைவைப் போலவே அவளுடைய இதழ்க்கடையில் மென்சிரிப்பு அரும்பி நெளிந்தது. ஆயினும் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதத்தில் அவள் விடுவிக்க முடியாத புதிராகத் தோன்றினாள்.

கன்னிப் பருவத்தில் அவளிடம் காணப்பட்ட பிடிவாதக் குணமும் அடமும் இப்பொழுது எங்கே போய் மறைந்து கொண்டனவோ, தெரியவில்லை. குறும்புத்தனமான பேச்சும் பார்வையும்கூட இப்போது இருந்த இடம் தெரியாமல் பதுங்கியிருந்தன. எதிர்பார்ப்பதற்கு இல்லாத பணிவும் உறுதியும் அவளிடம் நிறைந்திருந்தன. எளிமையும் எதற்கும் கலங்காத நேர்மையும் அவளிடம் காணப்பட்டன. அவள் உதாசீனத்தை அலட்சியம் செய்தாள்; வெறுப்பை வெறுத்து ஒதுக்கினாள். எந்த வகையிலும் அவளை யாராலும் எளிதில் வெல்ல முடியவில்லை. அவள் கல்லூரியில் சேர்ந்த பிறகு ஏதோ ஒரு கனவுலகில் சஞ்சரிப்பவளைப் போல் தோன்றினாள். பெண்களுக்குரிய சிறப்புக்களையெல்லாம் அவள் பெற்றிருந்தாள்.

சொர்ணம்பாளுக்கு இதுதான் புரியவில்லை. தலைக்குயர்ந்து வளர்ந்துவிட்ட உஷாவை அவளால் அடியோடு வெறுத்துத்தள்ளவும் முடியவில்லை. அன்புசெய்து அணைத்துக் கொள்ளவும் முடியவில்லை. அவளுக்கே தன்னுடைய சங்கடமான நிலை விசித்திரமாகத்தான் தோன்றியது. காரணமில்லாததற்கெல்லாம் கடுகடுவென்று அவளுக்குக் கோபம் வந்தது. ஆனால் உஷாவின் களங்கமற்ற முகத்தைக் கண்டு அடுத்த கணமே அவள் தன் கோபத்தை மாற்றிக் கொள்ள வேண்டியிருந்தது. பழக்கத்தினால் உஷாவிடம் தன்னுடைய குணங்களில் சில கலந்திருப்பது கண்டு அவளுக்குப் பெருமையாக இருந்தது. ஆனால் அவை அவளிடம் நிலைத்திராததைப் பார்க்கும்போது அவளுக்குப் பொறாமையாகவும் இருந்தது.

அவர்களைப் பார்க்க வரும் ஒவ்வொருவரும் உஷாவைத்தான் ஒருமுகமாகப் புகழ்ந்தார்கள்; கொண்டாடினார்கள். அவள் பெற்றெடுத்த சுந்தரியை ஒப்புக்குத்தான் பாராட்டினார்கள்; கட்டிக் கொடுத்தார்கள். இந்த வேற்றுமை அவளுக்கு நன்றாகத் தெரிந்தேயிருந்தது. உண்மையில் உஷாவும் தன்னுடைய உதிரத்தில் தோன்றியிருக்கக் கூடாதா என்று அவளுக்கு ஏக்கம் பிடுங்கித் தின்றது. அப்படி நேரவில்லையே என்ற துன்பம் அவளை உள்ளூற வாட்டி வதைத்தது. உஷாவுக்குக் கிடைத்த பெருமைகளில் எல்லாம் அவளும் பங்கு பெற முயன்றாள். ஆனால் அப்படி வெகுநேரம் மேலுக்கு நடிக்க அவளால் முடியவில்லை. ஒப்புக்கோ, மெப்புக்கோ சுந்தரிக்குக் கிடைத்த பெருமையைத்தான் அவளால் சொந்தமாக ஏற்றுக் கொள்ள முடிந்தது.

ஆனால் நெருங்கிப் பழகி வந்த பொன்னி உள்பட யாரும் இதை விகல்பமாக எடுத்துக் கொள்ளவில்லை. இந்த வயதுக்கு மேல் ஆசையாக, அருமையாகப் பிறந்த சுந்தரியிடம் பெற்றோர் ஒரு தனிப் பாசம் கொண்டிருப்பதை அவர்கள் இயற்கையாகவே கருதினார்கள். விவேகம் நிறைந்த உஷாகூட இதற்காகப் பொறாமையோ, அசூயையோ சிறிதும் கொள்ளவில்லை. அவர்களுடைய இந்தத் தனிப் பாசத்தில் பங்கு கொள்ள அவள் ஏங்கவில்லை. அதற்கெல்லாம் மாறாக அவளுக்கும் சுந்தரியிடம் அலாதியான அன்புதான் உண்டாயிற்று.





கான்வென்ட் படிப்பு முடிந்த போது பரீட்சையில் முதலாவதாகத் தேறியதற்காக உஷாவுக்கு ஒரு தங்கப் பதக்கம் கிடைத்தது. சுந்தரியை மேல் வகுப்புக்குச் சும்மாத் தூக்கிப் போட்டார்கள். சொர்ணம்பாள் அந்தப் பதக்கத்தை உடனேயே வாங்கி அழித்து, சுந்தரிக்கு ஒரு தாயத்துச் செய்து போட்டு விட்டாள். அதற்குப் பிறகுதான் அவளுக்கு வயிற்றில் உண்டான வேதனை அடங்கியது. அதுவரையில் அவளுடைய பொங்கிய மனம் அடங்கவில்லை. ஆனால் தங்கப் பதக்கத்தின் கதியை உஷா அன்றே மறந்தாள்.

உஷா கல்லூரியில் போய்ச் சேர்ந்த பிறகு ஜீஜீ வீட்டுக் கார் ஒரு நாள் அவர்கள் 'போர்டிகோ'வில் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கி வந்த ஜீஜீயை உஷா சட்டென்று அடையாளம் கண்டு கொள்ளவில்லை. அப்புறம்தான் அவன் ஜீஜீ என்று தெரிந்தது. "யார் ஜீஜீயா! அடையாளமே தெரியாமல் அழகாக வளர்ந்து விட்டாயே! வாம்மா, ஏது இவ்வளவு தூரம் ஜீஜீ?" என்று வரவேற்றாள் உஷா.

"உன்னைத்தான் பார்க்க வந்தேன். காலேஜிலிருந்து வந்திருக்க மாட்டாயோ என்று போசனைதான்!" என்று அவள் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டான் ஜீஜீ.

"என்னைப் பார்க்கவா, அல்லது என் தங்கை சுந்தரியைப் பார்க்கவா?"

"சுந்தரி விஷயமாகத்தான் உன்னைப் பார்க்க!"

உஷாவுக்குச் சற்றுத் 'திக்'கென்று இருந்தது. "என்ன விஷயம்! உங்கள் கான்வென்டெல்லாம் இப்போது எப்படியிருக்கிறது?" என்று சுற்றி வளைத்துக் கேட்டாள் உஷா.

"சுத்த மோசம்!" என்றான் ஜீஜீ.

"என்ன ஜீஜீ, இப்படிச் சொல்கிறாய்?"

"வர வர மோசமாகிக் கொண்டுதான் வருகிறது. அதனால் சொல்கிறேன்!"

"அப்படியா?"

"அப்படியேதான்! எங்கே, உன் தங்கை சுந்தரி இருக்கிறாளா, உள்ளே?"

"இப்போ வருகிற நேரம்தான்; நீ விவரமாக விஷயத்தைச் சொல்லேன் ஜீஜீ!"

"என்ன இருந்தாலும் உன் தங்கை உன்னைப் போல் இல்லை, உஷா!"

"ஓ—நீயும் ஆரம்பித்துவிட்டாயா இப்படி! அது சரி; என்ன விஷயம் என்பதைச் சொல்லு!"

"நீ படிப்பில் கெட்டிக்காரியாக இருந்து மெடல் எல்லாம் வாங்கினாய். ஆனால் சுந்தரி, உன்னைவிட வேறுவிதத்தில் கெட்டிக்காரி என்பது தெரியுமா உனக்கு?"

"அப்படி என்றால்...?"

"அதாவது வேறு ஒருவர் எழுதிக்கொண்டு வந்த பாடத்தைத் தான் எழுதியதாக டீச்சரிடம் காட்டி, உண்மையில் அதை எழுதிக் கொண்டு வந்தவளுக்கு அபராதம் வாங்கிக் கொடுப்பதில்! இந்தக் கெட்டிக்காரத்தனம் உனக்கு ஏது?"

உஷா பரபரப்போடு, "ஜீஜீ! நடந்ததைச் சொல்லேன்! என்னமோ புதிர் போடுகிறாயே!" என்றாள்.

"என் தங்கை லில்லியின் வீட்டுப் பாட நோட்டை எப்படியோ எடுத்து, தன் நோட்டுக்குள் வைத்துக் கொண்டு, அந்தப் பக்கத்தை மட்டும் மடித்து டீச்சரிடம் காட்டி, மார்க்கும் வாங்கிக் கொண்டு விட்டாள் சுந்தரி. ஆனால் என் தங்கை லில்லியோ அபராதம் வாங்கிக்கொண்டு நிற்கிறாள்."

"அப்படியா நடந்தது? அப்படியா?" என்று உஷா சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே கேட்டாள்.

"நான் பொய் சொன்னால் அவள் வந்ததும் நீயே கேட்டுப் பார்!"

"சரி! நான் இதை விசாரித்துக் கண்டிக்கிறேன். இதை எங்கள் அம்மாவிடம் போய்ச் சொல்லி விடாதே, அவள் ரொம்பவும் வருத்தப்படுவாள்!"

"ஆனால் சுந்தரி இப்படி எல்லாம் செய்யலாமா?"

"நீ சொன்னபடி நடந்திருந்தால் கட்டாயம் கூடாதுதான். ஆனால் அதுதான் விசாரித்துக் கண்டிக்கிறேன் என்று சொல்லுகிறேனே!"

இந்தச் சமயத்தில் வாசலில் வண்டி வரும் சத்தம் கேட்கத் தொடங்கவே மற்றொரு புறத்திலிருந்து சொர்ணம்பாளும் வருவது தெரிந்தது. அவள் இவ்வளவு நேரம் ஜீஜீ சொன்னவற்றை யெல்லாம் ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டுதான் அடுத்த அறையில் உட்கார்ந்திருக்கிறாள். அவள் முகத்தில் கோபமும் ஆத்திரமும் பொங்கி வழிந்தன. முளைக்கும்போதே பிறர் பொருளைத் திருடி அதைத் தன்னுடையதாகச் சொல்லிக் கொள்ளும் தன் மகளின் குணத்தை எண்ணி அவள் பட்டவேதனை கொஞ்சநஞ்சமல்ல. இந்தக் குணம் இவளுக்கு எங்கிருந்து வந்தது?

சுந்தரி காரிலிருந்து இறங்கி வந்து நுழைந்ததுமே சொர்ணம்பாள் ரோசத்துடன் அவள் கையைப் பிடித்துக் கொண்டு வந்து அவர்கள் முன் நிறுத்தி, "நீ இவள் தங்கை நோட்டை எடுத்தது உண்மையா?" என்று கேட்டாள்.

சுந்தரி உண்மையை மறுக்காமல் தலையை அசைத்தாள். சொர்ணம்பாளுக்கு வந்த கோபத்துக்கு ஓர் அளவில்லை. உஷா தடுத்தும் கேளாமல் அவள் சுந்தரியின் முதுகில் ஐந்தாறு அடிகள் வைத்தாள். சுந்தரி துடித்துப் போவது போல் அழுவதைக் கண்டு, "எனக்கு யாராக இருந்தால் என்ன? நீயும் சரி, அவளும் சரி, எனக்கு ஒன்றுதான். மற்றவர்களுக்குத்தான் நீ என்றால் ஒரு மாதிரி; இவள் என்றால் வேறு மாதிரி! ஒருத்தி ஒசத்தி; ஒருத்தி தாழ்த்தி! எனக்கு அப்படியில்லை!" என்று சொல்லி விட்டு, சுந்தரியைத் தன்னோடு இழுத்துக் கொண்டு போனாள்.

அதற்குமேல் ஜீஜீக்கு அங்கே நிற்கப் பிடிக்கவில்லை. "உஷா! உங்க அம்மாவும் உன்னைப்போல் இல்லை; அவள் சுந்தரியைப் போலத்தான் இருக்கிறாள்!" என்று சொல்லிக் கொண்டே வேகமாகப் போய்விட்டாள்.

விஷயம் மிகவும் அற்பமானதுதான். உஷா மாடிக்குச் சென்றபோது அடி வாங்கிய சுந்தரி அழுவதைக் காணவில்லை; அடித்த சொர்ணம்பாள்தான் அதற்குப் பதில் அழுது கொண்டிருப்பதைக் கண்டாள். "ரொம்ப நல்லவள் போல நடிக்கிறாயே. சுந்தரி இப்படியெல்லாம் செய்வாள், செய்யமாட்டாள் என்பது உனக்குத் தெரியாதா? சின்னக் குழந்தைகளுக்கு இதெல்லாம் என்ன தெரியும்?" என்று உஷாவின்மேல் அவள் சீறி விழுந்தாள்.

உஷா ஒன்றும் பேசவில்லை. காரணம் பாரிஸ்டர் பரபரப்பாக அங்கே கையில் ஒரு கடிதத்துடன் வந்து சேர்ந்ததுதான். அவரைக் கண்டதுமே, சொர்ணம்பாள் தன் அழுகையை மறைத்துக் கொண்டு விட்டாள்.

"சொர்ணம்! சிங்கப்பூரிலிருந்து கண்ணபிரான் வருகிறானாம். இங்கே வந்து சில நாட்கள் தங்கியிருப்பான் போலிருக்கிறது. அவன் வந்ததுமே இங்கே எல்லாரையும் அழைத்து விருந்து ஒன்று வைக்கப் போகிறானாம். அன்றைக்கு உஷாவின் நாட்டியக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமாம். முத்தையாவே எழுதியிருக்கிறார்!" என்றார். நாலு பக்கக் கடிதத்தின் சாராம்சத்தை அவர் நாலே வரிகளில் கூறிவிட்டார்.

அப்பொழுது இருந்த மன நிலையில் சொர்ணம்பாளோ உஷாவோ இதற்குப் பதில் கூறவில்லை; பாரிஸ்டர் மீண்டும் உஷாவைப் பார்த்து, "தெரிந்ததா, உஷா?...கட்டுவனுரை நாலைந்து நாட்கள் வரவழைத்து ஏதாவது மறந்துபோயிருந்தால் பயிற்சி செய்து வைத்துக் கொள். பேசாமலிருந்து விடாதே!" என்றார்.

உஷா தலையை அசைத்து விட்டுச் சென்றாள்.

அவள் போன பிறகு சொர்ணம்பாள் தன் கணவனைப் பார்த்து, "ஆமாம்; உங்கள் உத்தேசம்தான் என்ன?" என்றாள்.

பரமசிவம் அவள் முகத்தைப் பார்க்காமலே, "அதற்கு என்ன என்கிறாய்? முத்தையா ஆசைப்பட்டு எழுதியிருக்கிறபோது என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?" என்றார்.

இப்பொழுதெல்லாம் உஷா நாட்டியப் பயிற்சியைத் தொடர்ந்து பயிலவில்லை. சொர்ணம்பாளுக்கு அதில் சுவாரஸ்யம் குறைந்து போனதுதான் அதற்குக் காரணம். மேலும் அவள் கல்லூரிப் படிப்பு அதற்கு ஒருவிதத்தில் தடையாக இருந்தது.

"வாத்தியார் சார்! உஷாவுக்குப் படிப்புக்கே நேரம் போதவில்லை. அதனால் நாட்டியத்தையே நிறுத்தி விடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறோம். இனிமேல் அவள் கற்றுக் கொண்டு எங்கே போய் ஆடப் போகிறாள்? ஏதோ கற்றுக் கொண்டதை வைத்துக்கொண்டு மறக்காமல் இருந்தால் போதாதா?" என்று உஷா கல்லூரியில் சேர்ந்ததுமே

சென்னை
ஜார்ஜ் டவுன்
வட்டாரத்தில்
ஏர் கண்டிஷன்
செய்யப்பட்ட




வரவேற்புக் கூடம் ★ சாப்பாட்டு அறைகள் ★ தங்கும் அறைகள்

குளிப்பதற்கான வசதிகள் இணைந்த அறைகள்

மற்றும் எல்லா நவீன வசதிகளும் உள்ள முதல்தரமான ஒரே ஹோட்டல்

# அம்பீஸ் கபே

போர்டிங் & லாட்ஜிங்

(புதுக் கட்டிடத்தில்)

6 & 7, பிராட்வே - - - சென்னை-1

---

# இந்தியன் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: முதல் லைன் பீச், சென்னை-1

23 சென்னைக் காரியாலயங்கள் - 113 வெளியூர் கிளைக் காரியாலயங்கள்

கடனும் முன்பண வசதியும்

டெபாசிட்டுகள்

- கரண்ட் அக்கௌண்ட்ஸ்
- சேவிங்ஸ் பாங்க் அக்கௌண்ட்ஸ்
- நிரந்தர டிபாசிட்டுகள்
- 3 வருட காஷ் சர்டிபிகேட்டுகள்

செக்யூரிட்டிகளை வாங்கியும் விற்றும் தரப்படும்
அந்நியச் செலவாணி வியாபாரமும் நடத்தப்படும்

New York Agents: FIRST NATIONAL CITY BANK OF NEW YORK
London Agents: WESTMINSTER BANK LIMITED

டி. பி. பார்த்தசாரதி, காரியதரிசி

சொர்ணம்பாள் நடன ஆசிரியரைக் கூப்பிட்டுச் சொல்லி விட்டாள்.

நட்டுவனாருக்கு இதெல்லாம் பெரிய இடங்களில் கிடைக்கும் சகஜமானபாடம் தான். ஆயினும் அவருக்கு இதில் சிறிது வருத்தமே உண்டாயிற்று. உஷாவைப் போன்ற மாணவி ஒருத்தி அவருக்கு எங்கே கிடைக்கப் போகிறாள்? உயிரை விட்டுக் கொண்டு, அசாத்திய நம்பிக்கையோடு அவளுக்குக் கற்று வைத்த வித்தை யெல்லாம் விழலுக்கு இரைத்த நீராகப் போய்விட்டதைக் கண்டு அவர் உள்ளம் தளர்ந்து போயிற்று. இவ்வளவு பாடுபட்டதெல்லாம் வீணாகப் போவதா என்பதை நினைக்கும் போதே அவருக்குத் துக்கம் நெஞ்சையடைத்தது. அவர்கள் கொடுத்த பணத்துக்காகவா அவர் அத்தனை அக்கறை எடுத்துக் கொண்டு அந்த வித்தையைக் கற்றுக் கொடுத்தார்? உஷாவின் மூலமாக அவர் உபாசிக்கும் அந்த அரிய கலை ஜீவனோடு ஒளி வீசப் போகிறது என்று அவர் கனவு கண்டார். இன்று அவருடைய கனவு பொடிந்து விட்டது. வித்தையின் அருமையையும் பெருமையையும் உணரத் தெரியாத ஓரிடத்தில் இவ்வளவு தூரத்துக்கு நம்பிக்கை வைத்தோமே என்று கூட அவர் வருந்தவில்லை. உஷாவைப் போன்ற பெண்ணொருத்தி பிறந்தாளே என்று தான் வருந்தினார். ஆயினும் அவர் மிகவும் சாந்தமான குரலில், "இதுக்கு என்னங்க யோசனை? குழந்தைக்குத் தெரிந்ததை வைத்துக் கொண்டு எவ்வளவோ அபிவிருத்தி செய்துக்கலாமே. இவ்வளவே போதும். அப்படி எதுவும் சந்தேகம்னு வந்தால் நான்தான் எங்கே போறேன், நீங்கதான் எங்கே போறீங்க? வண்டியை அனுப்பிச்சா வந்திட்டுப் போறேன். ஏதோ அதனண்டே உள்ள அபிமானத்துக்குச் சொல்லிக் கொடுத்தேனே தவிர, காசு பணத்துக்கு ஆசைப்பட்டா வந்தேன்? ஏம்மா உஷா, சரிதானே நான் சொல்றது? அட, வந்தா, போனா எப்பவும்போல நல்ல சூடான திக்குக் காப்பியா தருவில்லே?" என்று கேட்டு விட்டு அவர் சிரிக்க முயன்றார்.

சொர்ணம்பாளுக்கு அவர் பேச்சின் கருத்துப் புரியவில்லை. அந்தப் பேச்சின் தொனி என்னவோ பிடிக்கவுமில்லை. அதில் ஏதோ ஓர் அம்சம் தன்னை மதிக்காதது போல் அவளுக்குப் பட்டது. ஆனால் உஷாவின் விழிக்கடையிலே இரண்டு சொட்டுக் கண்ணீர் தேங்கி நின்றது. உணர்ச்சி வெளியீட்டில் கைதேர்ந்தவரான சொக்குப் பிள்ளை முகத்தை வேறு புறம் திருப்பிக்கொண்டு விட்டார்.

அவர் போன பிறகுதான சொர்ணம்பாளுக்கு அவரைக் கொண்டே சுந்தரிக்குச் சொல்லிக் கொடுக்கச் சொல்லாமல் போய் விட்டோமே என்று இருந்தது. நடுவில் ஒரு நாள் எதையோ நினைத்துக் கொண்டு திடீரென்று ரிக்ஷாவில் ஏறி அவர் உஷாவைப் பார்க்க வந்தபோது சொர்ணம்பாள் மறந்து போகாமல் தன் விருப்பத்தைத் தெரிவித்தாள்.

நட்டுவனார் சொக்குப் பிள்ளை தாயைச் சாயலாகக் கொண்டிருந்த சுந்தரியை ஒரு முறை பார்த்து விட்டு, "இதுக்குங்களா? அதுக்கென்ன சொல்லி வைச்சாப் போச்சு!" என்று கூறிவிட்டு விடைபெற்றுச் சென்றார்.

அப்புறம் ஒரு தடவை, "ஏன் நம்ப உஷாவை விட்டே சொல்லிக் கொடுக்கச் சொல்லலாமுங்களே!" என்று தட்டிக் கழித்தார். இன்னொரு தடவை, "ரொம்ப நாளாகச் சொல்லிக்கிட்டிருக்கீங்க. ஆகட்டுங்க பார்க்கலாம்! கொஞ்சம் போகட்டும்!" என்றார். பிறகு ஒரு நாள் உஷாவின் வித்தை எந்த மட்டில் இருக்கிறது என்று பார்ப்பதற்காகச் சுந்தரியைச் சாக்கிட்டுக் கொண்டு வந்தார். அன்று அவருக்கு உபசாரமெல்லாம் பலமாக நடந்தது. சொக்குப் பிள்ளையும் எத்தனையோ முயன்று பார்த்தார். கடைசியில் அவர் களைத்துப் போய், "பாவம், குழந்தையை ஏம்மா போட்டுக் கஷ்டப் படுத்தச் சொல்றீங்க?" என்று நாசூக்காகச் சொல்லி விட்டுப் போனார்.

'இதற்கு என்ன அர்த்தம்?' என்று சொர்ணம்பாள் தன்னையே கேட்டுக்



"காரை மரத்தில் மோதினது நீர்தானே? காரை ஓட்டி வந்தவரும் நீர்தானே ஐயா?"

"ஆமாங்க! அவங்களுக்கெல்லாம் கார் ஓட்டத் தெரியாதுங்க!"

## தமாஷ் சபாஷ்!

"பேஷ்! ரிஸல்ட் நன்றாக இருக்கிறதே! அப்போ நமக்குத் தேங்காய் வரும்படி நிறைய இருக்குன்னு நினைக்கிறேன்!"



கொண்டாள். என்ன யோசித்தும் அதன் பொருள் அவளுக்கு விளங்கவேயில்லை.

ஒரு நாள் உஷா வண்டியில் தம்மைத் தேடி வந்ததும் கட்டுவனருக்குப் பரவசமாகப் போய் விட்டது. "வாம்மா, குழந்தே! ஏது இவ்வளவு தூரம்? எங்கே இந்தப் பக்கம்?" என்று பெற்றெடுத்த தந்தையைப் போல் மகிழ்ச்சி கொண்டார். "அன்றைக்கு வந்திட்டு வந்தேனே, அப்புறம் அம்மா எதுவும் சொன்னாங்களோ? குத்தலா எடுத்துக் கிட்டிருப்பாங்களோ?" என்றார்.

"அதெல்லாம் ஒன்றும் பேசவில்லை, ஸார்!" என்றாள் உஷா. பிறகு, சிங்கப்பூர் கோடீசுவரர் முத்தையாவின் கடிதத்தைப் பற்றிச் சொன்னாள்.

"அந்தப் பிள்ளையாண்டான் வர்றதுக்காக விருந்து நடத்தறாங்களாமோ? அந்த விருந்துக்கப்புறம் உன் டான்ஸ் வைக்கிறாங்களாமோ?"

"ஆமாம்!" என்று அழகாகத் தலையை அசைத்தாள் உஷா.

"எங்கே, பேகடாவிலே 'யாருக்காகிலும் பயமா?' என்கிற அடிக்கு அபிநயம் பிடி. பார்க்கலாம்......என்ன தாளம்னு நினைவிருக்குல்லே?"

"இருக்கு சார், சாபு!"

"ம்...எங்கே — யாருக்காகிலும் பயமா?"

கடுக்கும் குரலில் கட்டுவனார் அந்தப் பதத்தின் முதலடியைப் பாட, கை தாளம் போட, உஷா சிறிதும் தயக்கமின்றி, கேள்வி கேட்பது போல் அபிநயம் பிடித்துக் காட்டினாள். கண்ணும் கழுத்தும் இடையும் பிடியும் சொன்னபடி கேட்டன. கட்டுவனார் முகத்தில் மந்தகாசம் தவழ, "ம்... நீ இல்லே பிள்ளை! சரி, போ குழந்தை. ஜமாய்ச்சிப்புடுவோம்!" என்று அவளை உற்சாகமூட்டி அனுப்பி வைத்தார். வாசல் வரையில் வந்து வழியனுப்பிவைத்த ஆசிரியரின் அளவற்ற அன்பை எண்ணி உஷா மனம் நெகிழ்ந்து போனாள். வண்டியில் செல்வதாகவே அவளுக்குத் தோன்றவில்லை. வானத்தில் பறப்பது போலவே இருந்தது அவளுக்கு.

உஷா முகமலர்ச்சியோடு வந்து இறங்குவதைக் கண்ட சொர்ணம்பாள் யாருக்கும் தெரியாமல் கழுத்தை நொடித்துக் கொண்டு உள்ளே திரும்பிச் சென்றாள்.

## அத்தியாயம் 20

# அழைப்பு

கண்ணபிரான் வருவதற்கு இன்னும் சில தினங்கள் இருந்தன. வீட்டில் அவன் வருவதைப் பற்றியே அடிக்கடி பேச்சாக இருந்தது. இது விஷயமாகப் பரமசிவத்துக்கும் சொர்ணம்பாளுக்கும் அடிக்கடி விவாதம் நடந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது. ஆனால் அவர்களிடையே இது குறித்துக் கருத்து வேற்றுமை இருப்பதாகத்தான் உஷா ஊகித்துக் கொண்டாள்.

கண்ணபிரான் கறுப்பா — சிவப்பா என்றே அவளுக்கு நினைவில்லை. அவன் முத்தையாவின் தம்பி மகன் என்பதும் அளவற்ற செல்வத்துக்கு அவருக்குப்பின் அதிகாரியாகப் போகிறவன் என்பதும் அவளுக்குத் தெரியும். அதற்காக வரப் போகிறவனிடம் அவளுக்குப் பெரு மதிப்பு எதுவும் உண்டாகி விடவில்லை. அவன் தன்னுடைய நாட்டியத்தைக் கண்டு சொக்கிப் போகவேண்டும் என்பதும் அவளுடைய நோக்கமல்ல. அவள் கலைக்காகவே கலையை நேசித்தாள். கற்றுக்கொண்ட வித்தையை முதலில் கற்று வைத்தவர் மனம் குளிரும்படி செய்துகாட்ட வேண்டும் என்பதே அவளுடைய லட்சியமாக இருந்தது. பயிற்சி நடக்கும்போதெல்லாம் சொக்குப் பிள்ளை 'சபாஷ்' போட்டு உற்சாகப்படுத்துவார். ஆனால் மேடை என்று ஏறி விட்டால் பிறர்தான் 'சபாஷ்' போட வேண்டும் என்று அவர் எதிர்பார்ப்பார். ஆகவே, சபையிலிருப்பவர்கள் ரசிக்கும்படி ஆட வேண்டும் என்று அவள் எண்ணிக் கொண்டாள்.

ஓய்வு கிடைத்தபோதெல்லாம் அவளுடைய உடலும் உள்ளமும் நெளிந்தன. செவ்விய உதடுகள் ஜதிஸ்வரங்களையும் பத வர்ணங்களையுமே முணுமுணுத்தன. மெல்லிய தென்றலின் அசைவில் கூட அவளுடைய மேனியெல்லாம் சிலிர்த்துக் கொடுத்தது. உள்ளத்திலேயே ஒலிக்கும் லய சுருதியில் அவளுடைய அங்கமெல்லாம் தோய்ந்திருந்தன. அங்கிகா பாவத்தை அங்கயற் கண்கள் பயின்று வந்தன. ஏதோ ஒரு துடிப்பும் பரபரப்பும் கொண்டு அவள் விளங்கினாள். புலனுக்குப் புரியாத, கிளுகிளுப்பு ஏற்பட்டுக் கொண்டேயிருந்தது. பிரகிருதியின் மோன இயக்கத்தில் அவள் மயங்கிக் கிடந்தாள்.

அன்று ஞாயிறுக்கிழமையாதலால் அவளுக்குக் கல்லூரி கிடையாது. வெய்யிலின் கிறக்கத்தில் எல்லாரும் மாடியில் உறங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால் உஷா மட்டும் விசிறியைச் சுற்றவிட்டுக் கொண்டு கீழே இருந்த அறையில் ஆடிக் களைத்துப் போய் உட்கார்ந்திருந்தாள். எண்ணமெல்லாம் கற்பனையாகவே இருந்தன. ஏதோ ஒரு சொர்க்கபுரியை நிர்மாணித்து அதில் அவள் மட்டும் தனியே உலவிக் கொண்டிருந்தாள்.

"உஷா!"

அவள் சட்டென்று நினைவுத்தாரை விடுபட்டுத் திரும்பிப் பார்த்தாள். அங்கே பாபுதான் நின்று கொண்டிருந்தான். அவன் வந்ததோ, சைக்கிள் மணியை அடித்ததோ அவளுக்குத் தெரியவே தெரியாது. அவள் திகைக்கென்று துள்ளி

# சிரிக்காதே



### ஆயுளுக்கு நன்றி

''......இந்த உதவியை எனக்கு நீங்கள் செய்தீர்களானால் என் ஆயில் உள்ளளவும் மறக்க மாட்டேன்!''

— ஒரு எண்ணெய்க் கடைக்காரர்

### சிவகங்கை!

டாக்டர்: எப்ப பார்த்தாலும் உமக்கு தலைதோஷம்தான். சிவன் தலையிலே கங்கை இருக்கிறதோ இல்லையோ! எனக்குத் தெரியாது. உம்ம தலையிலே கங்கை நிச்சயம் இருக்கு!

எழுந்து. ''என்ன பாபு, ரொம்ப நாளாக எங்கே உன்னைக் கண்ணிலேயே காணோம்?'' என்று கேட்டாள். பிற்பகுதியை அவள் உபசாரமாகத்தான் கேட்டு வைத்தாள்.

ஆயினும் அவளுடைய தோற்றமும் குரலுமே அவளை ஏமாற்றி விட்டன. அந்தக் குரலில்தான் எத்தனை தாபம். அவளுடைய தோற்றத்தில்தான் எத்தனை பரவசம்!

பாபு சிரித்துக்கொண்டே, ''அடிக்கடி இங்கே வர முடியுமா, அம்மா? ஏதாவது வேலை இருக்க வேண்டாமா?'' என்று கேட்டான்.

அதுவரையில் அப்படி ஒரு காரணம் இருந்துதான் அவன் வரவேண்டும் என்பது அவளுக்குத் தெரியாது. அவன் அதை எடுத்துக் காட்டிய போதுதான் அவளுக்குத் தெரிந்தது.

''ஆனால் இப்போது ஏதாவது வேலையுடன்தான் வந்திருக்கிறாயா?'' என்று கேட்டாள் அவள்.

''ஆமாம்; முன்பு சொல்லியிருந்தேனே, நினைவிருக்கிறதா?''

உஷாவுக்கு எதுவும் அவன் சொல்லியிருப்பதாக நினைவில் இல்லை. ஏதோ சொல்லியிருக்கலாம்; அதை நினைவில் வைத்திருக்க வேண்டிய விஷயமாக அவள் எண்ணவில்லை. ''முன்பு என்ன சொல்லியிருந்தாய், பாபு?'' என்று கேட்டாள்.

''புத்தகங்கள் வாங்கிக் கொண்டு போனபோது சொல்லவில்லையா?''

''அதுதான் என்ன சொன்னாய்? நினைவில்லையே!''

அவளுக்கு அந்தச் சமயத்தில் நிகழ்ந்த ஒன்று மட்டுமே நினைவில் இருந்தது. அவன் வாசலைக் கடக்கும்முன் வண்டியை நிறுத்தி, சொர்ணம்பாள் அவனை என்னவோ விசாரித்ததும், பிறகு உள்ளே வந்ததும் முகத்தைக் கோபமாக வைத்துக் கொண்டு தன்னிடம் பேசாமல் போனதும்தான் இன்று நினைவில் தேங்கியிருந்தன. அதைத் தொடர்ந்து பொன்னி வந்ததும் அவள் தாயை அழைத்து வந்ததும் பின்னால் நிகழ்ந்த சம்பவங்கள். அதை நினைத்த போதே அவளுடைய அழகிய முகம் முருகிச் சிவந்தது.

''எங்கள் தோட்டத்துச் சங்கதத்துக்கு ஒருநாள் வரவேண்டும் என்று அப்போது நான் சொல்லவில்லையா?''

அவளுக்கு என்ன யோசித்தும் அப்படி அவன் கேட்டுக் கொண்டதாக நினைவே

### வாழ்வை நம்பாதே!

''முன்னுக்கு வருவதற்கு மேஸ்திரியை நம்பிண்டு இருந்தேன் சார். அவர் திடீர்னு இறந்து போய் விட்டார்! அதனாலே இப்போ உங்களைத் தான் நம்பிண்டு இருக்கேன் சார்!''

''ஐயோ! வேண்டாமுங்க. தயவுசெய்து என்னை நம்பாதீங்க!''

### ஒற்று'மை'

''என்ன ஏக்கமா இருக்கீங்க?''

''ஒரு பேனா வாங்கினேன். அது என் ஆயுள் உள்ள வரையில் உழைக்கும் என்று சொல்லி விற்றார். பாருங்கள், இரண்டு நாளா பேனாவும் எழுதல்லை; எனக்கும் உடம்பு ஒரு மாதிரி இருக்கு. அதுதான் பயமா இருக்குங்க!''

### 'நல்ல மருந்து'

டாக்டர்: அஜீரணம் ஏற்பட்டு இருக்கிறது. நீங்கள் கொஞ்ச நாளைக்கு ஆகாரமே சாப்பிடக் கூடாது.

வந்தவர்: அடப் பாவமே! நான் கொஞ்ச நாளா ஒரு கொள்கைக்காக உண்ணாவிரதம் இருந்து விட்டு வந்திருக்கிறேன். என்னைப் போய்......!''

### கருணைப் பெருக்கு

ஆற்றில் மூழ்கித் தத்தளித்த ஒருவரை மற்றொருவர் காப்பாற்றினார்... ''அடாடா! எப்பேர்பட்ட வீரச் செயல், என்ன கருணை; உமக்கு எப்படி இந்தத் தைரியம் வந்தது?'' என்று எல்லோரும் கேட்டார்கள். காப்பாற்றினவர் சொன்னார்: ''எனக்கு முந்நூறு ரூபாய் அவர் கடன் தர வேண்டும் சார். என் பணத்தை விட்டுவிட எனக்கு மனம் ஆகவில்லை!''

### பாட்டோட்டம்!

''என் மனைவிக்கு ஒரு பிடிலும் எனக்கு ஒரு மோட்டார் சைக்கிளும் வாங்கினேன்.''

''பிடில் வாங்கியது சரி; மோட்டார் சைக்கிள் எதற்கு?''

''என் மனைவி பிடில் வாசிக்க ஆரம்பித்தவுடனே பட, பட, பட என்று மோட்டார் சைக்கிளில் ஏறி வெளியே சென்று விடத்தான்!''



இல்லை. "சரி, இருக்கும்; சொல்லி யிருப்பாய்! அதற்கு என்ன?" என்றான்.

"அதைச் சொல்லத்தான் இப்போது வந்திருக்கிறேன்!"

"ஐயையோ, நானா? உங்கள் தோட்டத் துச் சங்கத்துக்கா? எதற்காக? நான் அங்கே வந்து என்ன செய்யப் போகி றேன்?" என்று சொல்லும்போதே அவ ளுடைய சம்மதமின்மை தெளிவாகத் தெரிந்தது. பிறகு அவன் மனம் வருந்தப் போகிறதே என்று எண்ணியவளாய், "நான் வேண்டுமானால் முன்பு சொன்ன படி ஏதாவது நன்கொடை கொடுத்து விடுகிறேன். ஆனால் உங்கள் சங்கம் நன்றாக நடைபெறுகிறதா இப்போது?" என்று கேட்டாள்.

"வாசகசாலைத் திறப்பு விழாவுக்குத் தான் உன்னை அழைக்கிறேன். நீதான் முதல் முதலில் புத்தகங்கள் கொடுத்தாய். அதனால் உன்னையே அழைக்க வேண்டும் என்பது எல்லாருடைய விருப்பமும்."

"சேசே...அதெல்லாம் என்னால் ஒரு காலும் முடியாது; நான் மாட்டவே மாட்டேன். இதென்ன விளையாட்டாக இருக்கிறதா உனக்கு? வாசகசாலையை நீங்கள் திறந்து வைத்தால் திறந்து கொள்ளாதோ? நான் எப்படி அங்கெல் லாம் வரமுடியும்? அம்மா போகச் சொல்லுவது அப்புறம் இருக்கட்டும்; அங்கே வந்து ஒரு வார்த்தைகூட எனக் குப் பேசத் தெரிய வேண்டாமா?"

பாபு அவளுடைய பதற்றத்தைக் கண்டு மௌனமாகச் சிரித்துக் கொண் டிருந்தான்.

"என்ன சிரிக்கிறாய்?"

"நான் எங்கே சிரித்தேன்?"

"பின்னே என்னையே இப்படிப் பார்த் துக் கொண்டிருக்கிறாயே!"

"பார்க்கக்கூடக் கூடாதா, உஷா?"

"பாரேன்...ஏன் பார்க்கக் கூடாது? நன்றாகப் பாரேன்!" என்று சொல்லி விட்டு, அவள் கதவின் மறைவில் போய், திரையால் மறைத்துக் கொண்டு நின்றாள்.

வெகு நேரம் பொறுத்து அவன், "சரி திறப்பு விழாவைப் பற்றி நான் இனிப் பேசவில்லை. ஆனால் சாதாரணமாக ஒரு நாள் வந்து பார்க்கக் கூடாதா?" என்றான்.

"அது வேண்டுமானால் பார்க்கலாம்."

"இன்றைக்கே போகலாமா?"

"இன்றைக்கா?" உஷா பரிகாசமும் பயமும் கலந்த குரலில் பெரிதாக நகைத்து விட்டு, "நல்ல கதைதான், போ! என்னை எல்லாம் எதற்காக அங்கே கூப்பிடு கிறாய்?" என்று கேட்டாள்.

"அதற்குக் காரணம் இல்லாமலா இருக்கும்?"

"என்ன காரணம், சொல்லேன்..."

பாபு அலுத்துக் கொண்டு, "அதெல் லாம் இப்போது நான் ஒன்றும் சொல்ல மாட்டேன். நீ ஒரு தடவை அங்கே வருவாயா மாட்டாயா, அதைச் சொல்லி விடு, போதும்!" என்று கேட்டான்.

உஷா குரலைச் சிறிது மாற்றிக்கொண்டு, "அதற்குள் உனக்குக் கோபம் வந்துவிடு கிறதே! ஆனால் நிச்சயம் இன்றைக்கு என்னால் எப்படி வரமுடியும்?" என்றாள்.

"மனமிருந்தால் வரவா முடியாது? டிரைவர் குப்பனிடம் கேட்டுக்கொண்டு தான் நான் வந்திருக்கிறேன். நீ வருவ தாக இருந்தால் அவர் அழைத்துக் கொண்டுவருவார். இது என்கடக்காது?"

"சரி; பார்க்கிறேன். ஆனால் அதை நிச்சயமாக எடுத்துக் கொள்ளாதே. இந்த ஞாயிறு இல்லாவிட்டால் அடுத்த ஞாயிறு எப்படியாவது வந்து விடுகிறேன்!" என்று உறுதியாகச் சொன்னாள் உஷா.

"அதெல்லாம் வீண் பேச்சு; இன்று எப்படியும் உன்னை அங்கே எதிர்பார்ப் போம்!" என்று சொல்லிவிட்டுப் பாபு விடு விடெனத் திரும்பிச்சென்றான். அப்போது மாடிப் படியில் யாரோ நடந்து வரும் காலடியோசை கேட்டது. அவன் போவ தையும் உஷா நிற்பதையும் பார்த்துக் கொண்டே சொர்ணம்பாள் கீழே இறங்கி வந்து கொண்டிருந்தாள். (தொடரும்)

OSR

# தங்க நகரம்

அகிலன்

## 5. தங்கும் இடம் எங்கே?

பசியால் வாடிக் களைத்துச் சோர்ந்து போன மல்லிகாவும் சந்திரனும் நேரே சத்திரத்திற்குப் போய்க் கொஞ்சம் நிழலில் தங்கினார்கள். பிறகு சாப்பாட்டு வேளை வந்தது. கூட்டமும் கூடியது. சோறு போடத் தொடங்கியவுடன் நெருக்கி அடித்துக் கொண்டு ஒருவர் மேல்ஒருவர் விழுந்தடித்துக் கொண்டு ஓடினார்கள்.

சந்திரனும் மல்லிகாவும் அவர்களைப் பார்த்தனர்.

நொண்டிகள், முடவர்கள், குருடர்கள், ஊமைகள், நோயாளிகள் பசியால்மெலிந்தவர்கள், இப்படி எத்தனையோ பேர் அந்தக் கூட்டத்தில் இருந்தார்கள்.

இவர்கள் எல்லோருமே பிச்சைக்காரர்களாக அங்கே இருந்தார்கள். அவர்களிடையே பிச்சைக்காரக் கோலத்தில் ராஜ குடும்பக் குழந்தைகள் இரண்டுமிருந்தன!

பாவம்! அந்தக் குழந்தைகளுக்குத் தாங்கள் விளையாட்டாகச் செய்த முயற்சி, வினையாக மாறப் போகிற தென்பதைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை.

சத்திரத்துக்கு வந்து சேர்ந்த சந்திரனும் மல்லிகாவும், பிச்சைக்காரக் கூட்டத்தோடு இடித்துப் புடைத்துக் கொண்டு உள்ளே போக முடியாமல் தவித்தார்கள். கடைசியில் எப்படியோ ஒரு வழியாக அவர்களுக்கும் சாப்பாடு கிடைத்தது. சாப்பாடா அது?



மொச்சைக் கொட்டைகள் மாதிரி சாதங்கள் பெரிதாக இருந்தன. மிளகாய்க் காரம் கண்களில் நீரை வருவித்தது. ஒரு பிடிச் சாதத்தில் ஐந்து கற்களுக்குக் குறையாது இருந்தன. அப்படியிருந்தும் அந்தச் சாப்பாடு இந்த இரண்டு குழந்தைகளுக்கும் போதவில்லை. ராஜ மார்த்தாண்டன் சாப்பாட்டு அளவை இரண்டு பங்காக உயர்த்தி இருந்தாரல்லவா? அப்படி உயர்த்தியிருந்தும் அந்தச் சாப்பாடு மிகக் குறைவாகத்தான் இருந்தது. குழந்தைகளுக்கே பற்றவில்லை யென்றால் அது எப்படிப் பெரியவர்களுக்குப் போதும்? எப்படித்தான் இந்தப் பிச்சைக்காரர்கள் காலந் தள்ளுகிறார்களோ!

சாயங்கால நேரமாகி விட்டது. கால்வலி இரண்டு பேருக்கும் பொறுக்க முடியவில்லை. பகல் பொழுதில் அலைந்த அலைச்சல் களைப்பாக இருந்தது. சத்திரத்து நிழலில் தங்களுடைய துணி மூட்டையையும் குவளைகளையும் வைத்துக் கொண்டு படுத்தனர். சற்று நேரத்தில் நல்ல தூக்கம் வந்து விட்டது. அயர்ந்து தூங்கினார்கள்.

திடீரென்று வாரிச் சுருட்டி எழுந்தான் சந்திரன். பொழுது சாய்ந்து விட்டது. விளக்கு வைக்கும் வேளை. அவனுக்கு அரண்மனை நினைவு வந்தது. இந்நேரம் அவர்கள் இரண்டு பேரையும் காணாமல் எங்கெல்லாம் தேடுகிறார்களோ! அதிக நாழிகை ஆகி விட்டதே! தெரு விளக்குகள் போட்டு விட்டார்களே! அம்மாவும் அப்பாவும் என்ன பாடு படுகிறார்களோ!

"மல்லிகா, மல்லிகா" என்று தங்கையை எழுப்பினான் சந்திரன். கண்களைத் துடைத்துக் கொண்டே மல்லிகா எழுந்தாள். இத்தனை நேரமும் அவள் அப்பாவையும் அம்மாவையும் பற்றித்தான் சொப்பனம் கண்டு கொண்டிருந்தாள். அவளுக்கு உடனே அரண்மனைக்குப் போக வேண்டுமென்று தோன்றியது. பொழுது இருட்டிக் கொண்டு வந்தவுடன் அவளை பறியாத பயம் அவளைக் கவ்விக் கொண்டது. எழுந்து சுற்று முற்றும் பார்த்தாள். கண்களைப் பல தரம் துடைத்துக் கொண்டு பார்த்தாள். பக்கத்தில் வைத்திருந்த துணி மூட்டையைக் காணோம்!

ஆமாம்; அவர்களுடைய நகைகளும் உடுப்பும் வைத்துக் கட்டியிருந்த மூட்டையைக் காணோம்! யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்கள்! அரண்மனை உடுப்புப் பறிபோய் விட்டது!

"அண்ணா, நீ பார்த்தாயா மூட்டையை?" என்று கேட்டாள் மல்லிகா.

"இல்லையே!'' என்றான் சந்திரன்.

"ஐயையோ! இனி நாம் என்ன செய்வது? எப்படி உள்ளே போவது?'' என்றாள் மல்லிகா.

சந்திரனுக்கும் ஒன்றும் புரியவில்லை. பெரிய குழப்பமாக இருந்தது. ஏதோ பயங்கரமான ஆபத்தில் அவன் அகப் பட்டுக் கொண்டதாக உணர்ந்தான். இருந் தாலும் தைரியத்தைக் கை விடவில்லை.

"வா போகலாம்; கவலைப்படாதே; நான் இருக்கிறேன்'' என்று சொல்லி அவளை அழைத்துக் கொண்டு அரண்மனை வாசலை அடைந்தான். அப்போது நன்றாக இருட்டி விட்டது. வாசற் பக்கத்துப் பெரிய விளக்குகள் சந்திரனைப் போல் பிரகாசித்தன.

இந்த இரண்டு 'பிச்சைக்கார'க் குழந்தைகளைக் கண்டவுடன் வாசல் பக்கம் துப்பாக்கியுடன் நின்ற காவற்காரன் முகத் தைச் சுளித்தான். அவனுக்குத் தமிழ் தெரியாது. அவன் வடக்கத்திப் பேர்வழி; நல்ல முரடன் "ஜாவோ!'' என்று கோபமாய் உறுமினான்.

"நாங்கள் ராஜா ராஜமார்த்தாண்டனின் குழந்தைகள்; எங்களை உள்ளே விடு'' என்றான் சந்திரன்

அவனுக்குச் சந்திரன் பேசியது விளங்கவில்லை. தன்னிடம் துணிந்து பேசும் ஒரு ஏழைச் சிறுவனைக் காண அவ னுக்குப் பிரமாதமான வெறி வந்து விட்டது. தாறுமாறாக உளறினான்; துப் பாக்கி முனையை நீட்டிப் பயமுறுத்தினான். அதில் நீட்டிக் கொண்டிருந்த கத்தியால் சந்திரனைக் குத்தி விடுவான் போல் இருந் தது. மல்லிகா, 'வீல்' என்று கத்திக் கொண்டு, "வா, அண்ணா! இங்கே நிற் கவே வேண்டாம். நாம் எங்கேயாவது போவோம்!'' என்று சந்திரன் கையைப் பிடித்துப் பரபர வென்று இழுத்துக் கொண்டு போனாள். அவளுக்கு அழு கையை அடக்க முடியவில்லை. கோவென்று கதறி விட்டாள். அவர்களுடைய சொந்த வீட்டுக்குள்ளேயே அவர்களால் போக முடியவில்லை. மேலே போடும் ஆடம்பர மான துணி இல்லாததால் அவர்கள் அங்கே நடுத் தெருவில் நின்றார்கள்.

பசி, களைப்பு, மயக்கம், பயம் எல்லாம் சேர்ந்து கொண்டது. மல்லிகாவை மெது வாகத் தன் தோள் மீது சாய்த்தபடியே சந்திரன் திரும்பவும் சத்திரத்துக்கு அழைத்துப் போனான். அங்கு பகலில் மாத்திரம்தான் சாப்பாடு. இரவில் ஒன்றும் கிடையாது. இருந்தாலும் படுப்பதற்காகவா வது இடம் கிடைக்காதா என்று சென்றான்.

ஆனால் அந்த நேரத்தில் அங்கு ஒருவ ரையும் காணவில்லை. சத்திரத்துக் காவல் காரன் மட்டும் இருந்தான். "யாரது இங்கே வருகிறது? போங்கள். இங்கே ராத்திரி யில் யாரும் படுக்கக் கூடாது. விளக்கு வைத்த பிறகு இங்கே உங்களுக்கு என்ன வேலை? போங்கள்!'' என்று கத்தினான்.



வேறு வழி? எங்கே போவது? இரவு நேரத்தை எந்த இடத்தில் கழிப்பது? யாரையாவது கேட்போமென்றாலும் ஒரு வரும் தென்படவில்லை.

மேலே வானம் கருகும் என்று இருண்டு கொண்டு வந்தது. காற்று விர் விர் என்று சீறிக் கொண்டு சுழன்று சுழன்று வீசியது.

மின்னல் கண்களைப் பறித்தது.

வானம் 'கட புடா திடு புடும்' என்று சத்தம் போட்டுக் கொண்டு இடிமுழங்கியது.

மழை 'சோ' என்று சத்தமிட்டுக் கொண்டு திடீரென்று மேகத்தைக் கிழித் துக் கொண்டு கொட்டியது.

மழை யென்றால் மழை; மின்னலென் றால் மின்னல்; இடியென்றால் இடி; காற் றென்றால் ஒரே பேய்க் காற்று! அப்பாடா!

பிச்சைக்காரர்கள் வேஷத்தில் வந்து, இப்போது பிச்சைக்காரர்களாகவே ஆகி விட்ட ராஜாவின் குழந்தைகள் அந்தமழை யில் தெப்பமாக நனைந்து விட்டார்கள்.

'எங்கே போய்த் தங்குவது?' என்ற கேள்வி மல்லிகாவின் மனத்தில் எழுந்த வுடன் அவள் 'கோ' வென்று வாய்விட்டுக் கதறி அழுதாள். (தொடரும்)

## முடியுமா ?

இந்தக் கடிகாரத்தின் முக வட்டத்தை ஆறு பாகமாக்க வேண்டும். ஒரு பாகத்தில் இரண்டு இலக்கம் இருக்க வேண்டும். ஒவ்வொரு பாகத்




தின் கூட்டுத் தொகையும் சமமாக இருக்க வேண்டும். முயன்று பாருங்கள். விடை அடுத்த இதழில்.

## ஞான திருஷ்டி

★ ஒரு துண்டுக் காகிதத்தில் ஐம்பதுக்குள் ஏதாவது ஒரு லக்கத்தை எழுதி மடித்து அதை உங்கள் நண்பனிடம் கொடுங்கள். அதைப் பிரித்துப் பார்க்கக் கூடாது என்றும் சொல்லுங்கள். இனி அவனை வேறு ஒரு காகிதத்தில் ஐம்பதிலிருந்து நூறுக்குள் ஏதாவது ஒரு எண்ணை எழுதச் சொல்லுங்கள். அதை நீங்கள் பார்க்க வேண்டாம்.

நீங்கள் காகிதத்தில் எழுதிய எண்ணை 99-லிருந்து கழித்து வரும் விடையைச் சொல்லி அதை அவன் எழுதியுள்ள எண்ணோடு சேர்த்துக் கூட்டச் சொல்லுங்கள். கூட்டி வந்த லக்கத்தின் இடப்பக்கமுள்ள முதல் எண்ணை மீதமுள்ள லக்கத்தோடு கூட்டச் சொல்லுங்கள். கூட்டி வந்த தொகையை முதலில் அவன் எழுதிய எண்ணிலிருந்து கழிக்கச் சொல்லுங்கள். இப்போது உங்கள் நண்பனைப் பார்த்து "உனக்கு வந்துள்ள விடையை நான் சொல்லட்டுமா?" என்று கேளுங்கள். அவன் உங்களால் அதைச் சொல்ல முடியாதென்ற நினைப்போடு 'எங்கே சொல் பார்க்கலாம்' என்பான். 'சொல்வது கூட இல்லையப்பா, நீ போடப் போகும் கணக்குக்கு என்ன விடை வருமென்பதை நான் முன் கூட்டியே என் ஞானதிருஷ்டியால் அறிந்து நான் கொடுத்த அந்தக் காகிதத்தில் எழுதிக் கொடுத்திருக்கிறேன். அதைப் பிரித்துப் பார்' என்று சொல்லுங்கள். நீங்கள் முதலில் மடித்துக் கொடுத்த காகிதத்தில் அவன் போட்ட கணக்கின் விடை இருக்கக் கண்டு அப்படியே அவன் அசந்து போய் விடுவான்.

— கௌசிகன்.



★ எரிமலைகள் பொங்கி வழிவதினால் உருகி வரும் பொருள் சாம்பலாகும் அல்லவா? அந்தச் சாம்பலின் சூடு குளிர்வதற்கு நூறு வருஷங்கள் ஆகுமாம்.

★ உலகிலேயே மிகமிக உயர்ந்த நாடு எது தெரியுமா? திபெத்து தான். கடல் மட்டத்திற்கு 16,000 அடிகளுக்கு மேல் உலகின் உயர்ந்த மலை முடிகளால் சூழப்பட்டுள்ள நாடு இது. இந்த நாகரிக யுகத்தில் கூட இந்த நாட்டுக்குச் செல்ல நல்ல பாதைகள் கிடையாது. உள்ள ஒன்றிரண்டு பாதைகளும் மோசமானவை. திபெத்துக்கு அடுத்த ஸ்தானத்தை வகிப்பது பொலிவியா என்ற நாடு. இது கடல் மட்டத்துக்கு 12,500 அடிகளுக்கு மேலுள்ளது.

★ தக்காளிப்பழம் என்றால் உனக்கு ரொம்பப் பிடிக்குமே, இல்லையா? ஒரு தக்காளிச் செடிதான் வளரும் காலத்தில் பூமியிலிருந்து எத்தனை நீரை எடுத்துக் கொள்கிறது என்று தெரியுமா? 30 காலன் தண்ணீரை அது உறிஞ்சிக் குடிக்கிறது.

★ கடலின் ஆழம் எவ்வளவு என்று தெரியுமா? நீர் மட்டத்திலிருந்து 6½ மைலுக்கும் அதிகமான ஆழம் இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். பிலிப்பைன் தீவுகளை அடுத்துத்தான் இத்தகைய அதிக ஆழமுள்ள இடங்கள் இருக்கின்றன.

★ சுறாமீன் மிக விலை மதிப்புள்ளது. இதன் ஒவ்வொரு பாகமும் பயன்படுகிறது. இதன் துடுப்புக்களைச் சீனக்காரர்கள் சிறந்த ஆகாரமாக விரும்பிச் சாப்பிடுகிறார்கள். இதன் பற்கள்



நகை செய்பவர்களுக்குப் பயன்படுகின்றன. இதன் குடலும் கொழுப்பும் தான் நமக்கு 'ஷார்க்லிவர் ஆயில்' என்ற எண்ணெயைக் கொடுக்கின்றன. இதன் எலும்புகளிலிருந்து கால்நடைகளுக்கும் பறவைகளுக்கும் உணவு தயாரிக்கிறார்கள். இதன் தலையிலிருந்து பசை தயாரிக்கிறார்கள். உடலின் மேல்' பாகமும் வயிறும் 'ஷார்க் ஸ்கின்' என்ற உயர்ந்த தோலாகிறது.



# விசிறிகள் அமைப்பில் மேன்மையான நூதன நிலை

ஒருவர் எதிர்பார்க்கும் சுகம், சேவை, நீண்டகால உழைப்பு ஆகிய குணங்கள் ஒருங்கே திரண்டு நிற்கும் விசிறி இதோ இருக்கிறது. பல ஆண்டுகளாக ஏராள மான நிதிகளைச் செலவிட்டு இன்ஜினியரிங் கலையின் நூதன முறைகளைத் திரட்டிய தன் பலனாக பல நூதன விசேஷ அம்சங்கள் கொண்ட ஓரியண்ட் விசிறி தொழில் நிபுணத்துவத்துடன் விளங்குகிறது.

அதன் பிரஷர் டை காஸ்ட், முழு டை காஸ்ட் கேஸிங், கடின ரோடார், சென்டர்லெஸ் கிரவுண்ட் ஷாப்ட், ஸ்டோவ் எனுமெல் பெயிண்ட் ஆகியவைகளே இந்த விசிறியின் மெச்சத்தக்க சேவைக்கும் நிகரற்ற வேலைத்திறனுக்கும் காரணங்களாகும்.

ஓரியண்ட் தொழில் நிபுணர்களான டெக்னிஷியன்கள் அவர்களுக்குப் பக்க பலமாக நிற்கும் நவீன டிஸைனர்ஸ், டூல் இன்ஜினியர்கள் மற்றுமுள்ள தனிச்சிறப்பாளர்கள் எல்லாரும் சேர்ந்து உற்பத்தி செய்யும் விசிறியானது நம் நாடு முழுவதிலும் வெளிநாடுகளிலும் உபயோகிப்பாளர்களின் கண்டிப்பான தேவைகளைப் பூர்த்தி செய்கின்றது.




**ஓரியண்ட் விசிறி-**

***தோற்றத்திலும் சேவையிலும் பல வருடங்கள் முன்னதாக நிற்கிறது.***

OG 1158

**ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்,**
**6 கோர்ப்பிபி லேன், கல்கத்தா-11**



# ஞானப் பால்

ந. பிச்சமூர்த்தி

லிங்கம் கட்டி சத்திரத்துக்கு வந்து ஒரு வருஷமாகி விட்டது.

அவன் வந்தது தனக்கடித்த அதிருஷ்டம் என்று தான் தவசிப் பிள்ளை நினைத்துக் கொண்டான். எப்பொழுதுமே தனக்கு அதிருஷ்டம்தான் என்ற நினைப்பு அவன் நெஞ்சில் தடித்தே இருந்தது. 'அ'னா 'ஆ'வன்னு தெரியாத கரிக்கட்டைக்குப் பதினைந்து ரூபாய் சம்பளமும் சாப்பாடும் தினம் ஆறு பேருக்குச் சாப்பாடு போட்டுச் சமாளிக்கும் அதிகாரமும் எல்லாருக்கும் இலேசில் கிடைத்துவிடுமா என்ன ? பிள்ளை குட்டி இருந்திருந்தாலாவது துரதிருஷ்டத்தைப்பற்றி நினைக்க வேண்டி இருக்கும். சத்திரத்து முதலியாரை வைய வேண்டி இருக்கும்.

''தருமமாம் தருமம்! ஒரு ஆணும் பெண்ணும் உழைத்துச் சமைத்துப் போட்டுச் சத்திரத்தை நடத்தப் பதினைந்து ரூபாயில் வீட்டு வண்டியை ஓட்டும் ஆள் வேணுமாம்! சத்திரத்துச் சாப்பாட்டில் இரண்டு பேரும் சாப்பிட்டு விட்டால் 'கூ, கொள்ளை!' என்று கத்த மாட்டாரா? வாரச் சாப்பாட்டுக்கு வருகிறவன் நாக்கலகு போட்டுக் கொண்டா வருவான்?''

தவசிப் பிள்ளையின் அதிருஷ்டம், அவன் ஒண்டிக் கட்டை. முதலெடுப்பிலேயே, முதலியாரை வாழ்த்தும் வாய்ப்பாகவே அந்த வேலை அமைந்து விட்டது. அதைத் தவிர வாழ்த்துவதற்கு அதில் இன்னும் பல வாய்ப்புக்கள் இருந்தன. போகப்போகத்தான் தெரிந்தது. சத்திரத்துக்கு வேண்டிய கறிகாய் சாமான்கள் வாங்குகிற பொறுப்பு அவனைச் சேர்ந்தது தானே? அவன் முதலில் யோக்கியனாகத்தான் இருந்தான். இருந்தாலும் கைக்கு உறையைப் போட்டுக் கொண்டு தேன் எடுக்க முடியுமா? கையில் ஒட்டிக்கொள்வதை நக்காமல் தான் இருக்க முடியுமா? அவனுக்குத்தெரியா விட்டாலும் சொல்லிக்கொடுக்க வதங்கிய கத்திரிக்காயும், தேசல் படிக்கல்லும் தக்கை போட்ட எண்ணெய்ச் செம்பும் கறிகாய்க் கடைக்காரியும் மளிகைமாணிக்கம் செட்டியாரும் இருக்கும்பொழுது அவனால் என்ன செய்துவிட முடியும்? முதலாளியை வாழ்த்துவதற்கான ஆதாரங்கள் இதில் எல்லாம் ஏராளமாக இருந்தன.



சத்திரத்துக்குத் தவசிப்பிள்ளைதான் சர்வாதிகாரி. ஆகையால் சட்டமும் இல்லை, நெறிகளும் இல்லை. தானம் கொடுத்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பார்களா? அங்கே வேலைசெய்து கொண்டிருந்த ஆளுக்குத் தவசிப்பிள்ளை ஒருநாள் சீட்டைக் கிழித்து விட்டார். ஆனால் பாவம்! தவசிப் பிள்ளை பேரில் மட்டும் குற்றம் சொல்லக் கூடாது. அதிருஷ்டம் வந்து பிடரியில் குந்திக்கொண்டு கட்டளை யிட்டால் நிறைவேற்ற வேண்டியதுதானே!

ஒரு நாள் எங்கிருந்தோ ஒரு லிங்கம் கட்டி அங்கு வந்து சேர்ந்தான். வந்தவனைத் தவசிப்பிள்ளை ஒன்றும் கேட்கவில்லை. சத்திரத்துக்கு வந்த பிறகு பெற்ற அனுபவத்தால், தவசிப் பிள்ளைக்கு 'எக்ஸ்ரே' பார்வை வந்துவிட்டது. ஆனால் அதன் உதவி இல்லாமலேயே தவசிப் பிள்ளையால் லிங்கங்கட்டியை எடை போட்டுவிட முடிந்து விட்டது.

மழுக்கியதலை, கழுத்திலே வெள்ளிப்பெட்டி மூடிய லிங்கம், இடுப்பிலே பழுப்பேறிய வேஷ்டி - நாலு முழ நீளம், இருபத்திநாலு அங்குல அகலம்.

லிங்கங்கட்டி தலையைத் தடவிக் கொண்டு நின்றானே ஒழிய எதுவும் பேசவில்லை. ஆனால் தவசிப்பிள்ளை பதில் சொல்லி விட்டான்.

---

**தங்கச் சங்கிலி இருந்தபோது வயிற்றுக்குச் சத்திரத்துச் சோறு மட்டும் கிடைத்தது. அது பறிபோன போது மனத்துக்கு ஞானச் சோறு கிடைத்தது.**

---



"சமையல் ஆனபிறகு சாப்பிடலாம். இப்போது எங்கே இருந்து எங்கே போறீங்க?"

"பண்டாரத்துக்கு ஊரேது, பேரேது போக்கிடமேது? சோறு கண்டால் சொர்க்கம். ஒரு கவளம் சோறு இங்கே நெதம் கிடைச்சா இதுதான் போக்கிடம். அதை இதைச் செஞ்சிக்கிட்டுக் கிடந்துடுவேன்."

தவசிப் பிள்ளைக்கு ஒரே யோசனை. ஆளைப் பார்த்தால் சுமைதாங்கி மாதிரி இருக்கிறான். எந்த வேலை வைத்தாலும் தாங்குவான்! சமையல் பாத்திரம் விளக்குகிற காத்தானோடு தினம் போராட முடிகிறதா? அஞ்சு ரூபாய் சம்பளமும், மிச்சம் மீதம் தினம் சோறு கிடைக்கிறதே — அது போதாதாம்! தினம் அடித்துக் கொள்கிறான்! சோறு கொடுத்தால் குழம்பில்லையா என்கிறான். குழம்பு கொடுத்தால் கறியில்லையா என்கிறான். சோறு குழம்பு கறி கொடுத்தால், இவ்வளவு தானா, என்கிறான்! இவன் வம்பே இல்லாமல் ஒழிந்து விட்டால்? சுமை தாங்கிதான் வந்திருக்கிறான்! ஒரு கவளம் சோறு செலவு! ஐந்து ரூபாய் மிச்சம்!

மறுநாள் காத்தான் சீட்டு முன்னறிவிப்பின்றிக் கிழிக்கப்பட்டு விட்டது. லிங்கங்கட்டிக்கு அந்தப் பதவி அளிக்கப்பட்டதென்ற விஷயம் தெரியவே தெரியாது. சோற்றுக்காகத் தினம் ஊர் ஊராய் அலைய வேண்டாம்! ஒரு மணி நேரம் பாத்திரம் தேய்த்துப் பண்டம் கழுவிக் கொடுத்தால் புண்ணியம்! நாவுக்கரசர் உழவாரப்படை வைத்திருக்கவில்லையா? பெரிய அதிருஷ்டம் அடித்துவிட்டதாக லிங்கங்கட்டிக்கு அதிக மகிழ்ச்சி. தவசிப் பிள்ளையும் தனக்கு அதிருஷ்டம் அடித்ததென்று நினைத்துக் கொண்டான்.

வந்த புதிதில் எல்லாமே நன்றாக இருந்தன. ஒரு கவளம் கேட்ட ஆளுக்கு இரண்டு வேளையும் மூன்று நான்கு கவளமும் கிடைத்து விட்டால் மனம் துள்ளாதா? பாத்திரங்கள் கரிபோகத் தேய்க்கப் பெற்றுப் பளபளப்பாக இருந்தன. கறிகாய் தூக்கிக் கொண்டுவர, மளிகைச் சாமான் தூக்கிவர முனகாத நல்ல ஆள் கிடைப்பது ஒரு வாய்ப்புத்தான். 'சத்திரத்து வேலைக்குத் தான் புள்ளையாம்! காத்தான் சாமான் தூக்கும் கூலிக்காரனல்லவாம்! என்ன ஆட்டி அடித்துக் கொண்டிருந்தான்!' அப்பாடா என்றிருந்தது தவசிப் பிள்ளைக்கு. தினம் சாப்பிட்டுவிட்டுச் சத்திரத்துத் திண்ணையில் லிங்கங்கட்டி படுத்துக் கொண்டபோது ஆயாமட என்று சொல்லிக் கொண்டே ஆறுதலாகப் படுத்துக் கொண்டான்.

அதோடு விஷயம் போய்விடவில்லை. சத்திரத்தில் வந்து போகிறவர்கள் லிங்கங்கட்டியைப் பாராட்டாமல் போவதில்லை.

"நல்ல ஆளு! பக்திமான்! நாள் தவறாமல், மணி பிசகாமல் திருக்குளத்தில் பல்லைத் தேய்த்துத் துணி துவைத்து விட்டுப் பட்டையாய்த் திருநீறிட்டுக் கொண்டு கிழக்கே சூரியனைப் பார்த்துத் தவறாமல் செபம் செய்கிறாரே. அது ஒண்ணே போதும்! இந்தமாதிரி ஆளைப் பார்க்கறதே அபூர்வமாயிடுத்தே" என்று வியப்படைவார்கள்.

ஆமாம்! இந்தக் கிரியைகளை லிங்கங்கட்டி அலட்சியப் படுத்துவதில்லை. அதற்குமேல் படிப்பு-கிடிப்பு என்று லிங்கங்கட்டி தொந்தரவெதுவும் பட்டுக் கொள்வதில்லை. ஒருகால் சிவசிதம்பரம் என்று சொன்னால் இருக்காது ஊழ்வினையே என்று மட்டும் பேச்சு நடுவில் புகுத்துவான். அதை நம்பினானா இல்லையா என்று கேட்டால் அவனுக்கே சொல்லத் தெரியாது. லிங்கங்கட்டி வெள்ளை வேட்டிப் பண்டாரமானபோது சமய அறிவு ஒன்றையும் சம்பாதித்துக் கொள்ளவில்லை. லிங்கத்தைக் கயிற்றில் கட்டிக் கழுத்தில் மாட்டிக் கொண்டு செய்யவேண்டிய காரியங்களை எல்லாம் சொல்லிக் கொடுத்து விட்டுப் பசுபதியும் பரந்த உலகமும் இருக்குமட்டும் கவலையில்லை. கிழக்கே போ என்றார்கள். அன்று முதல் சொன்னபடி செய்துகொண்டு வந்தானே ஒழியத் தன் கிரியைகளையும் மனத்தையும் பிணைக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியதில்லை. இரண்டும் ஒன்றிய செயல் நெறி காணவேண்டும் என்று துடித்ததில்லை.

எனவே சத்திரத்துக்கு வந்து போகிறவர்களில் யாராவது இரண்டணா நாலணா கொடுத்தால், அதை மறுப்பதில்லை. மறுக்கவேண்டும் என்று தோன்றியதில்லை. அதற்கு மாறாகக் காசு தேவையாக இருந்தால் கொஞ்சம் புதுக் காசாகக் கொடுங்கள் என்று கேட்டு வாங்கிக் கொண்டு கெட்டியாக இடுப்பில் சொருகிக் கொள்ளுவான்.

**வ**ந்த எட்டு ஒன்பது மாதங்களுக்குள் புது விளக்குமாறு தேய ஆரம்பித்து விட்டது. லிங்கங்கட்டியின் பேரில் எவ்வித வஞ்சனையுமில்லை. தவசிப் பிள்ளையோ பெரிய பேர்வழி! நாளாக ஆக லிங்கங் கட்டியின் உணவில் ஒரு கவளம் இரண்டு கவளம் குறைய ஆரம்பித்தது. சிலநாள் கறியோ குழம்போ கூட இருக்காது. சத்திரத்துக்கு வந்தவர்கள் அதிகமாகச் சாப்பிட்டு விட்டார்கள் போல் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டான்.

அவனுக்கு ஆட்சேபனை இல்லை என்றாலும் அவன் வயிறு புகார் செய்தது. இரண்டொரு நாள் பல்லைக் கடித்துக் கொண்டிருந்தான். புண்யவான் தருமம் பண்ணியிருக்கிறான்! ஒரு கவளம் குறைந்து போனால் என்ன பிரமாதம் என்று ஒருநாள் இரண்டு நாள் நினைத்துக் கொண்டான். முடியவில்லை. மூன்றாவது தினம் முதல் சத்திரத்துச் சாப்பாட்டுக்குப் பிறகு கருமாதி, கல்யாணம், மகேசுவர பூஜை என்று கேள்விப்பட்டால் தவறாமல் அங்கும் போய்ச் சாப்பிடுவதென்று வழக்கப் படுத்திக் கொண்டான். கொள்ளுத் தண்ணி ஊத்துவதாகக் கேள்விப்பட்டால்கூட அங்கு போய் வாசனையாவது பார்த்துவிட்டு வந்தான்! அங்கெல்லாம்கூட இரண்டணா ஓரணா கிடைத்தது.

லிங்கங் கட்டிக்குக் காசு கிடைக்கிறது என்று தெரிந்தவுடன்தான் தவசிப் பிள்ளை தேய்பிறை மரபை உணவில் புகுத்த ஆரம்பித்தான். சத்திரத்தில் பண்டாரத்துக்கு விருந்தா வைப்பார்கள்? ஏதோ புண்ணிய காரியத்தில் அப்படி இப்படித்தான் இருக்கும் என்று சொல்லும் பொழுது லிங்கங்கட்டி கூடச் சகஜம்தான் என்று ஒத்து ஊதி விடுவான். 'வேண்டுமானால் ஏதாவது ஓட்டலில் வாங்கிச் சாப்பிடு, சாமியாரே!' என்று உபதேசம் செய்வான் தவசிப் பிள்ளை.

லிங்கம் கட்டிக்குக் காக சேர்ந்து போய் விட்டதென்று எப்படியோ தவசிப்பிள்ளை கணக்குப் பண்ணி விட்டான். அதை எப்படி யாவது கரைத்துவிட வேண்டுமென்ற விஷம எண்ணம் அவனுக்கு வந்து விட்டது.

தவசிப்பிள்ளையினிடத்தில் பணத்தை வைத்திரு என்று லிங்கம் கட்டி கொடுத்திருந்தால் இந்த விஷம எண்ணம் தோன்றியிருக்குமா என்பது ரசமான கேள்வி. ஆனால் விடை எளிது. நிச்சயமாகத் தோன்றியே இருக்காது. இதில் வந்த கஷ்டமென்னவென்றால் பாலுக்குப் பூனையைக் காவல் வைக்க முடியாது என்பதுதான். லிங்கம் கட்டி ஏதோ குருட்டுச் சாமர்த்தியத்துடன் சில்லறை அடகு பிடித்து வந்த கிழவியிடம் இந்தப் பணத்தைக் கொடுத்து வைத்திருந்தான். கடவுள் பொய்யாகப் போனால் கூட அந்தக் கிழவி பொய்யாகப் போகமாட்டாள் என்று அந்த வட்டாரத்திலே அவளுக்கு நல்ல பேர்!

ஆனால் இந்த இரகசியம் தவசிப்பிள்ளைக்குத் தெரியாது. திருட்டுப்பயல் என்று கறுவிக் கொண்டே எப்போதும்போல் அரை வயிற்றுச் சோறு போட்டு முழு வேலையையும் வாங்கிக் கொண்டிருந்தான்.

தவசிப்பிள்ளைக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

"என்ன லிங்கங்கட்டி! உனக்குத்தான் பெண்டாட்டி இல்லியே!"

"பண்டாரமாச்சே!"

"அப்படின்னு தொடுப்புக்கூட?"

"அதெதென்னுங்க. நாக்கு அழுகிப் போயிடாது."

"கோவிச்சுக்காதே. ஒம் பணத்தைப் பின்னெ என்ன செய்யறே?"

"பத்திரமா இருக்குங்க."

"நீ தின்னு நெடுஞ்சுவரு. விழுந்தா குட்டிச் சுவரு. பொண்ணு பிள்ளையா பெண்டாட்டியா. ஒண்ணும்தான் இல்லே. காலணாவுக்குக் காரபூந்தி கூட வாங்கிச் சாப்பிட மாட்டே. பணத்தைப் பத்திரமா வைச்சுக்கிட்டு என்ன பண்ணுவே?"

உன்படியே லிங்கங்கட்டிக்குத் திகைப்பாய்ப் போய் விட்டது. ஆமாம்! பணத்தை வைத்துக் கொண்டு என்ன பண்ணுகிறது?

"பின்னே எறிஞ்சிடலாமா?"

"அதுக்குச் சொல்லவில்லே. ஒரு நல்ல காரியம், சொல்றேன். யோசிச்சுப் பாரு."

"ஓ!"

"கழுத்து லிங்கம் இருக்கல்லே."

"ஆமாம்."

"இதைக் கவுத்தாலே கட்டிப் போட்டுக் கிட்டுக் கிடக்கிறியே. இருக்கிற பணத்துக்குப் பவுனைக் கிவுனை வாங்கிச் செயின் பண்ணி லிங்கத்தை அதில் கோத்துப்பிடேன். கழுத்துக்கும் அழகாயிருக்கும், லிங்கமும் பார்வையாயிருக்கும். இருக்குளத்திலே திருநீறும் தங்கச் செயின் லிங்கமுமாகக் கிழக்கே சூரியலேப் பார்த்துக் கொண்டு நிக்கறதைப் பார்த்தால் அசல் சிவப்பழம் இம்பாங்க. நல்லா இருக்குமே?"

"என் கழுத்துக்கு என்னத்துக்குங்க?"

"ஒன் கழுத்துக்கா செயின்? இல்லே இல்லே. லிங்கத்துக்குச் செயின் செய்யச் சொல்றேன். செயின் போட்ட லிங்கத்தை மடியிலே கட்டிக்கிறேன்கிறியா?"

"இல்லே, இல்லே."

"அப்பிடின்னாக் கழுத்திலேதானே போட்டுக்கணும்."

"செஞ்சால் பாத்துக்குவம்" என்று லிங்கம் கட்டி சொல்லிப் பேச்சை வெட்டி விட்டு விட்டான். தவசிப்பிள்ளையும் அதோடு போய் விட்டான்.

தென்னம் நெற்று சீக்கிரமாக முளைத்து விடாது. கொஞ்சம் காலம் பிடிக்கும். அது மாதிரி லிங்கங்கட்டி மனத்திலே போட்ட தென்னம் நெற்று மெதுவாக முளைக்க ஆரம்பித்தது. கிழவி நல்லவள்தான். ஆனால் வயசாயிடுச்சே! ஒரு சமயத்தைப் போல ஒரு சமயம் இருக்குமா? அப்படி என்றால் இந்தப் பணத்தை யாரிடம் மாற்றுகிறது? ஆள் யாரும் தெரியவில்லையே. தவசிப்பிள்ளை சொல்றது நல்ல யோசனைதான். லிங்கத்துக்குச் செயின் பண்ணினால் நல்லாத்தான் இருக்கும் என்றெல்லாம் யோசனை செய்து கொண்டே இருந்தான்.

இதற்குள் வயது ஒரு வருஷமாகிவிட்டது. புகையிலையைப் போல காய்ந்து வந்த லிங்கம் கட்டி வெள்ளரிப் பழம்மாதிரி ஆகி விட்டான்.

ஒருநாள் திடீரென்று ஆசாரிவிடம் போய்த் தனக்குச் செயின் செய்ய எவ்வளவு பவுன் வேண்டுமென்று கேட்டான். ஆசாரிக்குச் சிரிப்புத் தாங்கவில்லே. "இந்த வயதிலா கலி



## எச்சரிக்கை !

ஒரு பார்சல் ஒருவருக்கு வந்தது. பெற்றுக்கொண்டவர், 'யாரோ நமக்குச் சாமான் அனுப்பி இருக்கிறார்' என்று பார்சலை ஆவலுடன் திறந்து பார்த்துத் திகைத்துப் போனார். அதில் ஒரு பழைய ஓட்டை டப்பாதான் இருந்தது. அத்துடன் ஒரு கடிதமும் இருந்தது. அக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது இது தான் : '' இந்தமாதிரி ஓட்டை டப்பாக்கள் உங்களுக்கு உபயோகம் இல்லா விட்டால் என் தோட்டத்தில் விட்டெறிந்துவிட வேண்டாம் என்று எச்சரிக்கிறேன். இப்படிக்கு,

அண்டை வீட்டுக்காரர்

யாணம் செய்துகொள்ளப்போகிறாய்?'' என்று கிண்டலாகக் கேட்டான். '' இல்லே, இந்த லிங்கத்துக்கு'' என்று காட்டினதும் வியாபார ரீதியில் ஆசாரி பேசத் தொடங்கி விட்டான்.

'' முக்கால் பவுனிலேருந்து செய்யலாம்.''

'' அதுக்குக் குறைஞ்சு ?''

'' முடியாது.''

'' கூலி ?''

'' உனக்காகப் பதினைஞ்சு ரூபாய்.''

'' என்னய்யா முக்கால் பவுனுக்கு....''

'' அதானய்யா சின்னச் செயினுக்குப் பெரிய கூலி. பெரிய செயினுக்குச் சின்னக் கூலி. பெரிய செயினுலே லிங்கத்துக்குப் பண்ணிக் கட்டிக்கியேன்.''

'' ஏதோ பாத்துக் கூலி வாங்கிக்கோ அய்யா, பவுன் வாங்கியாரேன்'' என்று திரும்பிவிட்டான்.

பதினைந்து நாள் கழித்துத் திருக்குளத்தில் நீராடிவிட்டுத் திருநீறணிந்து தங்கச் செயினும் லிங்கமும் துலங்க லிங்கங் கட்டி சத்திரத்துக்குத் திரும்பி வந்தான்.

தவசிப்பிள்ளை திண்ணையில் ஏதோ சில்லறை வியாபாரம் பண்ணிக் கொண்டிருந்தான். லிங்கங் கட்டியைப் பார்த்ததும் புதுமையாக இருந்தது. இன்னதென்று ஒரு நிமிஷம் விளங்கவில்லை. பிறகுதான் தெரிந்தது. ''சபாஷ்! சபாஷ்! ரகசியமா செஞ்சிட்டியே!'' என்றான் சந்தோஷம் பொங்க.

''என்ன பிரமாத காரியம் ! ஏதோ ஆண்டவனுக்கு உவப்பா யிருக்குமேன்னு....''

''நல்ல காரியம், நல்ல காரியம்'' என்றான் தவசிப்பிள்ளை. கண்ணிலே படாத காசாக வைத்துக் கொள்வதை விட்டுத் திருட்டுப் பயலை வருந்தி அழைப்பது போன்ற காரியத்தைச் செய்து விட்டானே இந்த ஆள் என்று நினைத்துக் கொண்டான். ஏன் இந்த யோசனை சொன்னோமென்ற கழிவிரக்கத்தின் சாயல்கூடப் படர்ந்து விட்டது.

செயின் போட்ட லிங்கங் கட்டி ஆகிவிட்டதற்காக அவன் ஒன்றும் மாறிவிடவில்லை. வழக்கம்போல சத்திரத்துக் காரியங்களைப் பார்த்துக் கொண்டான். கழிவிரக்கம் காட்டிய தவசிப்பிள்ளையும் மாறவில்லை. பண்டாரத்துக்குக் கொடுக்கிற கவளத்தில் ஏற்றம் ஒன்றும் ஏற்படவில்லை.

இதற்குப் பிறகு நான்கு மாதம் இருக்கலாம். லிங்கங் கட்டிக்குத் திடீரென்று ஒரு நினைப்பு வந்தது. ''தம்பி ! திருமலைப்பால் உச்சவத்துக்குப் போகணுமின்னுதோணுது. போயிட்டு ஒரு வாரத்திலே வந்திடறேன்'' என்றான் தவசிப்பிள்ளையிடம்.

''குடுத்து வச்சிருக்கணும். போயிட்டு வா.''

''பாத்திரம் எல்லாம் விளக்கணுமே?''

''யாரையாவது வச்சுப் பாத்துக்கிடறேன்.''

மறுநாள் சீர்காழிக்கு லிங்கங் கட்டி புறப்பட்டு விட்டான். ஒரு வாரம் லிங்கங்கட்டியில்லாமல் பொழுதை ஓட்ட வேண்டுமே என்ற கவலை கொண்ட தவசிப்பிள்ளை படுக்கப் போகுமுன் ஒருநாளாச்சு என்று கணக்கிட்டுக் கொண்டு படுத்தான். ஒவ்வொரு தினமும் ரப்பர் மிட்டாய்மாதிரி நீண்டது.

நான்காம் நாள் காலை தவசிப் பிள்ளை காய் கறி நறுக்கிக் கொண்டிருந்தான். முற்றிலும் எதிர்பாராமல் லிங்கங்கட்டி எதிரே வந்து நின்றான். தவசிப் பிள்ளைக்குக் கனவா என்று கூடத் தோன்றி விட்டது.

''என்ன லிங்கங் கட்டியா ?''

''பின்னே?''

''அதுக்குள்ளார வந்துட்டியே ?'' என்று கேட்டுக் கொண்டே லிங்கங்கட்டியை மேலும் கீழும் பார்த்தான். கைம்பெண் கழுத்துப் போலிருந்தது.

''என்ன பண்டாரம் ? லிங்கம், சங்கிலி, ஒண்ணையும் காணுமே.''

''ஆமாம்.''

''எங்கே ?''

''ஏமாந்து போயிட்டேன்.'

''எப்படிப் போச்சு ?''

''அதாங்க ஞானப்பால்.''

''விளக்கமாகச் சொன்னு அல்ல தெரியும்.''

''திருவிழா பாத்துட்டு மூந்தா நாள் ராத்திரி சத்திரத்து வாசல்லே குந்திக்கிட்டு இருந்தேன். வேறு யாராரோ திண்ணையிலே வாழைத்தோலைச் சீவிப்போட்ட மாதிரி நலே மாடு கால்மாடா விழுந்து கிடந்தாங்க.

''திண்ணையிலே யாரோ ரெண்டு ஆள் என்னவோ பதி பசு பாசம் இன்னு சத்தம் போட்டுப் பேசிக்கிட்டு இருந்தாங்க. நடுவிலே அதிலே ஒரு ஆள் பாடினாரு. கொஞ்சநேரத்துக்கெல்லாம் பேச்சு அடங்கிப் போயிப் பாட்டே பாட ஆரம்பிச்சுட்டாரு. ரொம்ப நல்லாக் குயில் கணக்காப் பாடினாரு. அப்படியே சாஞ்சுக்கிட்டிருந்தவன் அதிலே சொக்கிப் போயிட்டேன்.

' மாங்காய்ப்பாலுண்டு
மலைமேலிருப்போர்க்குத்
தேங்காய்ப்பால் ஏதுக்கடீ — குதம்பாய்'

இன்னு ஒரு பாட்டுப் பாடினாரு. அப்படியே மெய்மறந்தே போயிட்டேன். பொறவு பாட்டே காதில் விழலலே.

''அப்புறம் நெனைப்பு வந்தப்போ கண்ணைத் துறந்து பார்த்தேன். கிழக்கு வெளுத்துக் கிட்டிருந்தது. திருவிழா அலுப்பும் அந்தப் பாட்டும் என்னை அப்படி அமட்டி விட்டது. நல்ல தூக்கம் இன்னு நினைச்சுக்கிட்டபோது ஒரு திகில் பிறந்தது. கழுத்தென்னவோ

வியக்கத்தக்க
நீளமான
செழிப்பான
கூந்தல்




ரோமா

கூந்தல் வளர்க்கும் டானிக்



நண்பர் ஒரு நல்ல செய்தியைச் சொன்னார். அடிக்கடி எப்ரிலைம் உட்கொள்வதால், அவர் ஆஸ்த்மா உபாதையால் தற்போழுது பீடிப்பதில்லை



# EPHRILIME

## எப்ரிலைம்




நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி, லிட்.**

மதராஸ் டிப்போ :

2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ்-1

---

# அநுமகரத்வஜா

ஷட்குண மகரத்வஜ
சக்தி வாய்ந்தது



சுத்தமான ஷட்குணத் தங்கத்திலேல் மிகவும் சிறிய அளவில் ஆனால் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

O★O

**14 மாத்திரைகள்**
ஒரு புட்டியில் இருக்கின்றன
*(7 முழு அளவுகள்)*

O★O

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா - பம்பாய் - கான்பூர்

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள் :*

**ஆர். எல். கௌடர் & கம்பெனி**
59, பந்தர் தெரு :: சென்னை-1

*ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள் :*

**சத்ய நாராயணு பார்மஸி**
குமரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்



## கோடை வெப்பத்திலும் குளுமை அனுபவிக்க




கோடைகாலத்திலும் குளுமை உணர்வு ஊட்டுபவை என்று இந்தியாவின் கைத்தறித் துணிகள் பல நூற்றுண்டுகளாக விசேஷப் புகழ் பெற்றவை. சந்தேரிப் புடவைகள், மிருதுவான மஸ்லின்கள், கவர்ச்சிகரமான கெட்டிச் சாயத் துணி ரகங்கள், டோரியாக்கள் மற்றும் அணியச் சுகமான பருத்தித் துணிகள் என்று உங்கள்கோடை ஆடைகளுக்குப் பல ரகங்கள் உள்ளன.

**விலை மலிவால் விரும்பப்படுபவை—**
**உழைப்புச் சிறப்பால் உயர்வாக மதிக்கப்படுபவை**

---

இன்னும் சிறிது காலத்தில் கைத்தறித் துணிகள் தரம் குறிப்பிடப்பட்டு, ஏற்றுமதிக்கான முத்திரையும் இடப் பெறும். விவரங்களுக்கு தயவுசெய்து விசாரியுங்கள்.

### அகில இந்திய கைத்தறி போர்டு

ஷாகிபாக் அவுஸ், விட்டட் ரோடு, பம்பாய்-1.

லேசாக இருந்தது. தொட்டுத் தடவிப் பார்த்தேன். லிங்கமா செயினு ஒண்ணேயும் காணோம். யாரோ தூங்கிக் கொண்டிருந்தபொழுது அடிச்சுக்கிட்டுப் போயிட்டார்கள்! சத்திரத்துத் திண்ணையில் இருந்தவர்களை ஒவ்வொருவராகப் பார்த்தேன். திருடி இருப்பார்கள், என்று அவர்களைப் பார்த்தால் தோணவில்லை.

'என்ன பாக்குறீங்க பண்டாரம்' என்று திண்ணையில் இருந்தவர்கள் விசாரித்தார்கள்.

''நான் நடந்ததைச் சொன்னேன். அவர்கள் சிரித்தார்கள்.

'சாமி எடுத்துக் கிட்டுப் போயிருக்கும், ஞானப்பால் குடுக்க வேணும்?' என்றார்கள்.

''எனக்குச் சுருக்கென்று பட்டது. 'லிங்கத்துக்குப் போய் மட்டிமாதிரித் தங்கச் சங்கிலி செஞ்சேனே? பைத்தியக்காரத்தனம்!' என்று நினைத்துக்கொண்டே ஊருக்குத் திரும்பி வந்து விட்டேன்.

''ஞானப்பால் கிடைச்சுப் போச்சு.''

''அப்புறம்?''

''நான் போறேன்.''

''எங்கே?''

''இப்படியே நீளமா.''

''பின்னே ஏன் வந்தே?''

''சம்பளம் கொடுத்து வேறு ஆள் பாத்து வச்சுக்குங்கன்னு சொல்ல வந்தேன்.''

''அடப்பாவி! நெசமாகவே ஞானப்பால் கிடைச்சிட்டுதா?''

லிங்கங்கட்டி பதில் சொல்லவில்லை. மழுக்கிய தலையைத் தடவிக்கொண்டே தெருவில் இறங்கி விட்டான்.

# படித்துப் பாருங்கள்

## அவதாரமும் கம்பரும்

இராமன் அவதார நாயகனே என்பதைக் காவியத்தின் அகச் சான்றுகளைக் கொண்டு விளக்குவதே இச் சிறு நூலின் நோக்கம்.

கம்பராமாயணப் பாயிரத்திலிருந்தும், நூலுக்குள்ளிருந்தும், ஆசிரியர் காட்டும் சான்றுகள் இராமனுடைய அவதாரத்தைத் தெளிவுபடுத்துகின்றன. இதில் உள்ள பத்துக் கம்பராமாயணக் கட்டுரைகளிலும் ஆசிரியர் தாம் எடுத்துக் கொண்ட கருத்தைத் தெளிவாக விளக்கியிருக்கும் முறை போற்றத்தக்கது. பாடலகளுக்கு அரும்பதக் குறிப்பு அளித்திருந்தால் இன்னும் சிறப்பாக இருக்கும்.

ஆசிரியர்: ம. இராதாகிருஷ்ணபிள்ளை; வெளியீடு: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர். சென்னை-4; விலை ரூ. 1-75.

## 'சுடர்க தமிழ்நாடே'

தமிழில் நீண்ட காட்களாக இலக்கியக் கட்டுரை எழுதி வருபவர்களில் திரு பி. ஸ்ரீ. அவர்கள் குறிப்பிடத்தக்கவர். பாமரனுக்கும் புரிகிற எளிய முறையில் பாடல்களை விளக்கும் தன்மையைச் 'சுடர்க தமிழ் நாடே' என்ற இத் தொகுதியிலுள்ள அவருடைய எட்டுக் கட்டுரைகளும் நிரூபிக்கின்றன. ஆழத்தைத் துருவிப் பார்க்கும் ஆராய்ச்சி வம்புகளெல்லாம் அவருடைய கட்டுரைகளில் அகப்படாது. அனுபவிக்கும் சுவைதான் அவருக்கு முக்கியம். எளிமைதான் முக்கியம். 'கல்லாக் கலை' என்ற கட்டுரையையும், 'குற்றாலத் தமிழ்' என்ற கட்டுரையையும் படித்தால், இலக்கிய அழகைப் புரிந்து கொள்கிறோம். மற்ற கட்டுரைகளும் படிக்கச் சுவையாயிருக்கின்றன.

ஆசிரியர்: பி. ஸ்ரீ; வெளியிடுவோர்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர். சென்னை-4. விலை ரூ. 1-40.

## பிறைமதி

பெண்ணின் தியாகத்தை மையக் கருத்தாகக் கொண்டு தமிழில் நிறைய நவீனங்கள் வந்திருக்கின்றன. நவீனம் என்றால் அதில் ஏதாவதொரு 'தியாகம்' இருந்தாக வேண்டும் என்பதுதான் வழக்கமாகி விட்டதே! வழக்கத்தை யாராவது மீறமுடியுமா?

'குடியும் குடித்தனமுமாக வாழும் மணி என்ற இளைஞன் காந்திமதி என்ற சினிமாக்காரியிடம் ஆசை கொள்கிறான். மணியை எடுத்து வளர்த்துப் பெரியவனுக்கிய மிராசுதாரின் மனைவி சினிமாக்காரியைச் சந்தித்து நியாயம் பேசுகிறாள். சினிமாக்காரி மணியைக் கைவிடுகிறாள்.

அதே ஏக்கத்தில் மணி வீட்டை விட்டு வெளியேறி விடுகிறான். கடைசியில் சினிமாக்காரியே மணியைச் சந்தித்து அறிவுரை கூறிக் குடும்பத்தோடு சேர்த்து வைக்கிறாள். அவனுடைய நல்வாழ்வுக்காகத் தன்னைத் தியாகம் செய்து விடுகிறாள் சினிமாக்காரி' — இதுதான் கதை.

ஆசிரியை: வேங்கடலட்சுமி; வெளியீடு: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை — 4. விலை ரூ. 2:

## 'மழைலைச் சித்திரம்'

'வெள்ளிக்கிழமை' என்ற நீண்ட சிறு கதையை முதல் கதையாகக் கொண்ட இத்தொகுதியில் முஸ்லிம் குடும்பத்து வாழ்க்கைச் சூழ்நிலைகளைச் சித்திரிக்கும் கதைகள் நிறைந்துள்ளன. அதற்கென்றே சில சொற்றொடர்களையும் ஆசிரியர் நன்கு பயன்படுத்தியிருக்கிறார்.

ஏழு கதைகள் உள்ள இச் சிறுகதைத் தொகுதி படிக்கச் சுவையாயிருக்கிறது. சிறு கதைகளில் வலுவான பொதுக் கருத்து அமைக்க இன்னும் அனுபவப் பயிற்சி பெறுக வேண்டும்.

ஆசிரியர்: ஆர். பி. மல்லாரி. வெளியீடு. அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை - 4. விலை: ரூ. 1 - 50.



அடுத்த வீட்டு குழந்தை க்ரைப்பினுல் சாப்பிடும்பொழுது நான் சாப்பிட வேண்டாமா..



முற்றிலும் சுவையுள்ள
அநுகூலமான க்ரைப்பினுலை
நான் ஒருபொழுதும்
சாப்பிட தவறியதில்லை.
வயிற்று உபாதைகள்
ஒன்றும் அணுகாதபடி
என்னை பாதுகாக்கிறது
எல்லாவற்றிற்கும் மேலாக.
நான் சந்தோஷமாக
இருப்பதைப் பார்க்கும்
என் தாய் என்னிடம்
மிகவும் அன்பாக இருக்கிறாள்.

க்ரைப்பினுலில் மயக்கம்
தரக்கூடிய மருந்து ஒன்றும்
இல்லை. அநேக தாய்மார்கள்
அபாயமின்றி
உபயோகித்துவரும்
சிறந்த க்ரைப் மிக்சர்
இதுவேதான்.
நீங்களும் இதையே
உபயோகித்து
உங்கள்
குழந்தைகளையும்
இன்புறச்
செய்யுங்கள்

ஜண்டு

# க்ரைப்பினுல்

மிகச்சிறந்தது......சக்தி வாய்ந்தது

ஜண்டு பார்மஸூடிகல் வொர்க்ஸ் லிட்.,
கோகலே ரோட் ஸௌத். பம்பாய-28

ஸ்டாக்கிஸ்டுகள்
தாமோதர் & கம்பெனி
113, நைனியப்ப நாயக்கன் தெரு
சென்னை - 3



Graphic- Z 51

உயர்ந்த பண்பு என்பது பெரியவர்களோடு பழகிப் பழகித் தெரிந்து கொள்ள வேண்டியது. சுமித்திரைக்கு விஷ்ணுபாலர் அப்படி ஒரு பெரிய பண்பைக் கற்றுக் கொடுத்திருந்தார். அந்தப் பண்புதான் தியாகம்.

தன் பொன் கிரணங்களை வழிமுன்னே படர விட்டனன் ஆதவன். பாதையில் பொன் விரிப்பு ஏற்பட்டதும் மெள்ளத் தன் குதிரைகளைத் தட்டி விட்டான். பறவையினங்கள் மங்கல கீதம்பாடி வரவேற்றன. தாமரை மெல்லியலாள் மலர்க்கரங்களை விரித்துத் தேன் நிறைந்த பூரண கும்பத்தைப் பிடித்தனள். பூமாதேவி தன் மடியில் சிதறிக் கிடந்த முத்துக்களை அர்ப்பணித்தாள். இரவு முழுவதும் காவல் காத்த நட்சத்திரக் காவலாளிகள் தங்கள் விளக்கை அணைத்துக் கொண்டு ஓய்வெடுக்கச் சென்று விட்டனர்.

அயோத்தியின் திருமாளிகையில் நடாகத்தினருகே சுமித்திரை அமர்ந்திருந்தாள். அரசர் ஏனோ இன்னும் திரும்பவில்லையே! கேகய நாட்டில் அப்படிப்பட்ட விஷயம்தான் என்ன?

''சுமித்திரை!''

யாரது! பழகிய குரல், கேட்ட குரலாக இருக்கிறதே! திரும்பி நோக்கினாள் சுமித்திரை. அங்கு விஷ்ணுபாலர் நின்று கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் சுமித்திரைக்கு ஒரே குதூகலம். ஓடிச் சென்று அவரை நமஸ்கரித்தாள்.

'' வாருங்கள், சுவாமி! உங்கள்



வரவு நல்வரவாகுக!'' சுமித்திரை வரவேற்புக் கூறினாள்.

''சௌக்கியமாக இருக்கிறாயா, குழந்தை?'' விஷ்ணுபாலர் பரிவுடன் கேட்டார்.

''இருக்கிறேன், சுவாமி! இந்த ஏழையைத் தேடித் தாங்கள் வந்தது என் பாக்கியம்!''

''நீ ஏழையா? யாரம்மா கூறினது? சக்கரவர்த்தி தசரதருடைய மனைவி தன்னை ஒரு ஏழையாகக் கூறிக் கொள்வதா? அது கணவருடைய மகிமையைக் குறைப்பதாகுமேயம்மா!''

''மன்னிக்க வேண்டும். தங்களது ஆசியினால் சக்கரவர்த்தியைக்கணவராக அடைந்துள்ளேன். பட்ட மகிஷி கௌசல்யா தேவியும் என்னிடம் மிக்க அன்பு செலுத்துகிறார். அரண்மனையிலும் எனக்கு



யாதொரு குறையுமில்லை. எப்படியிருப்பினும் கல்வியில் நான் தங்களைவிட ஏழைதானே! தாங்களோ வேத விற்பன்னர். கல்வியில் தாங்கள் நனவந்தர். தங்களின் கீழ் நான் எளியவள்தானே! தனிப்பட்ட முறையில் நான் இவ்விஷயத்தில் ஏழை என்றே கூறினேன்!'' விநயமாகக் கூறினாள் கமித்திரை.

''ஏதேது, சின்னஞ்சிறு குழந்தையாய்ப் பேசக் கூடத் தெரியாமல் என் மடியில் வளர்ந்த நீ இவ்வளவு சாதுர்யமாகப் பேசக் கற்றுக் கொண்டு விட்டாயே!'' சிரித்துக் கொண்டே கூறினார் விஷ்ணுபாலர்.

குழந்தைப் பருவத்தில் தந்தையின் அரண்மனையில் விஷ்ணுபாலர் கையில் வளர்ந்தவள் கமித்திரை. அவர் சிரித்துச் சிரித்துப் பேசுவார். அழும் குழந்தைக்கு எதிரில் அவர் வந்து விட்டால் உடனே அது சிரித்துவிடும். கமித்திரையின் தந்தையுடனே அவர் வசித்துவந்தார். அரண்மனையிலேயே அவர் பாதிப் பொழுதைக் கழிப்பார். கமித்திரை பிறந்து வளர ஆரம்பித்ததும் அவர் அரண்மனையை விட்டு நகரவில்லை.



''இந்தக் குடுகுடுப்பைக் காரனைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை...அவன் பக்கத்து வீட்டுக்கும் நல்லது சொல்லித் தொலைக்கிறான்!''

கமித்திரையும் விஷ்ணுபாலரும் இணைபிரியா நண்பர்களாகி விட்டனர். அவர் குழந்தை கமித்திரைக்குப் பல கதைகளை எடுத்துக் கூறினார். பருவமங்கை கமித்திரைக்கு அயோத்தியாதிபதி தசரதரின் வீரச் செயல்களை அவர் எடுத்துக் கூறியபோது அவள் உள்ளம் மகிழ்ந்து கேட்டனள். கேட்டதோடு நில்லாமல் தன் இதயத்தில் அவருக்கென ஒரு இடத்தைக் கொடுத்து அதை அலங்கரிக்கவும் ஆரம்பித்து விட்டாள்.

வசந்தத்தின் மடியில் இளமையின் மலரிடையே அழகுத்தேனை நிரப்பி நின்று கொண்டிருந்த மகளைப் பார்த்துத் தந்தை பெருத்த கவலையில் ஆழ்ந்து விட்டார். ''இவளுக்குத் தகுந்த மணாளனை எவ்விதம், எங்கே அடைவது?'' விஷ்ணுபாலரிடம் யோசனைகேட்டார்.

விஷ்ணுபாலர் ஒருவாரம் அவகாசம் கேட்டார். மகளின் மனத்தில் என்ன இருக்குமோ, அறிந்து கொண்டு அரசரிடம் கூறலாமே! என்று அவருக்கு விடை கிடைக்க அதிகத் தாமதமாகவில்லை.

''சுவாமி! இவ்வளவு நாட்களாக மெருகிட்டு வார்த்து ஓர் உருவத்தை என் மனத்தில் பதிய வைத்தீர்களே! இன்னுமா அவ்வுருவம் உங்கள் கண்களுக்குப் புலப்படவில்லை? என் மனத்தில் இருக்கை தேடிவிட்ட மணாளனின் பெயரை என் நாவினால் எவ்விதம் கூறுவது?'' தலைகுனிந்தபடி நாணத்துடன் கூறினாள் கமித்திரை.

விஷ்ணுபாலர் உடனே அவள் தந்தையிடம் ஓடினார். ஒரு சுபயோக, சுபதினத்தில் தசரதரின் இல்லத்தரசியாகிக் கணவருடன் அயோத்திக்கு வந்து விட்டாள் கமித்திரை. கௌசல்யை அவளிடம் அன்பு செலுத்தினாள். தசரதர் இரு மனைவிகளிடமும் சமமான அன்பு வைத்திருந்தார். வாழ்க்கை சலனமற்றுச் சென்று கொண்டிருந்தது. இதோ. இன்று அவளைப் பார்க்க விஷ்ணுபாலர் ஓடோடி வந்திருக்கிறார்.

''சுவாமி! ஊரில் எல்லோரும் சௌக்கியம் தானே?''

''சௌக்கியம்தானம்மா. நீதான் ஏழை விஷ்ணுபாலரை மறந்து விட்டாய். உன்னைப் பார்க்க நான் ஓடோடிவந்துவிட்டேன்!''

''காரணமாகத்தான் நான் உங்களைப்பார்க்க வரவில்லை. நான் அங்கு வந்து உங்களைப் பார்த்து விட்டால் நீங்கள் என்னைப் பார்க்க வரமாட்டீர்கள் அல்லவா? உங்களை இந்தப் பொன்வளம் பொருந்திய அயோத்திக்கு வரவழைக்க வேண்டும் என்பதற்காகவே நான் அங்கே வரவில்லை.

''என் மடியில் வளர்ந்து குழந்தையான நீ இவ்வளவு சாதுர்யமாகப் பேசுவது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது.''

இவ்விதம் கூறிய விஷ்ணுபாலர் தம் வேஷ்டி முடிச்சிலிருந்து ஒரு கற்கண்டுக் கட்டியை எடுத்து. ''அம்மா குழந்தை, இந்தா, இதை என் அன்பாகப் பெற்றுக் கொள்!'' என்றார்.

கமித்திரை அதை விண்டு வாயில் போட்டுக் கொண்டாள். ''அப்பாடி! இக் கற்கண்டு எவ்வளவு ருசிக்கிறது!'' என்றாள்.

''நான் அன்னம் ஊட்டி வளர்ந்தவளாயிற்றே நீ! இக் கற்கண்டு உனக்கு ருசிக்காமல் இருக்குமா? கமித்திரை, உனக்கு எவ்வளவோ கொண்டுவர வேண்டுமென்றுதான் எனக்கு ஆசை. ஆனால் நான் எல்லாவற்றையுமே தானம் செய்து விட்டேன். என் மனைவி குழந்தைகூட இப்பொழுது என்னை விட்டுப் பிரிந்து விட்டனர்'' என்றார் விஷ்ணுபாலர்.

கமித்திரை சற்றே திடுக்கிட்டு, ''என்ன! உண்மையாகவா?'' என்றாள்.

''ஆம், குழந்தாய். என்னை விட்டுப் பிரிந்து நீ இங்கு வந்ததுமே நான் அங்கு ஒரு முனி புங்கவரிடம் தீக்ஷை பெற்றேன். அவர் உபதேசித்த 'தியாகம்' என்ற சொல்லின் மேன்மையைப் புரிந்து கொண்டேன். அதன் பலனாக மனைவியையும், மைந்தனையும் பிரிந்தேன்!''

''ஏன், சுவாமி! அவர்கள் உங்கள் கொள்கைக்கு விரோதமாக இருந்தனரா? அவர்கள் உங்களை உதறிவிட்டுச் சென்று விட்டனரா?''

"அப்படி நினைத்தால் அது மகாபாவமாகும், அம்மா! மனைவி குழந்தைகளைப் பறிகொடுத்த ஒரு வயோதிகர் தமக்குச் சேவை செய்ய ஒருவரைத் தேடினார். அக் கிழவருக்குச் சேவை செய்ய என் மனைவியைக் கொடுத்தேன். அவருக்கு மட்டற்ற மகிழ்ச்சி."

"ஏன் சுவாமி! நீங்கள் மிகவும் இளைஞரோ? உங்களுக்குச் சேவை செய்ய ஒருவருமே வேண்டாமென்ற எண்ணமோ?" கமித்திரை சற்றுப் பரிகசித்தபடி கேட்டாள்.

"அப்படியில்லை. என் மனைவி எனக்குச் சேவை செய்வதால் எனக்குத் தனிப்பட்ட ஆனந்தம் கிடைக்காது. அது அவள் கடமை என்று தோன்றும். ஆனால் மற்றொருவர் இன்பம் அடைவதைப் பார்த்து என் மனம் எவ்வளவு ஆனந்தம் அடைகிறது, தெரியுமா? அதே போல் புத்திரனற்ற ஒருவருக்கு என்னுடைய ஒரே மகனைத் தந்துக் கொடுத்துவிட்டேன். அவர் உள்ளம் பூரித்து விட்டார். அவர் பூரிப்பில் என் மனம் மகிழ்ச்சி அடைகிறது. என் மகனைக் கொடுக்காமலிருந்தால் அவர் மன வேதனையால் துடித்துப் போயிருப்பார். மற்றவர்கள் ஆனந்தத்தில் நம் ஆனந்தம் சார்ந்து நிற்கும் போது 'தியாகம்' என்னும் உயரிய சொல்லின் பொருள் புரிகிறது; மனம் நிம்மதி அடைகிறது. எந்நாள் வரை என் மனத்தில் அமைதி இருக்குமோ, அந்நாள் வரை எனக்குக் குறைவில்லை, கமித்திரை!" என்று நெஞ்சுருகக் கூறினார்.

"அப்படியானால் உங்கள் ஜன்மம் சாபல்யமடைந்து விட்டது என்றே வைத்துக் கொள்ள வேண்டும்."

"இல்லை, இன்னும் ஒருகுறை இருக்கிறது." -வேதனை படரக் கூறினார் விஷ்ணுபாலர்.

"உங்களுக்கும் குறையா? அது என்ன?"

"சின்னஞ்சிறு குறையாகத்தான் தோன்றும். ஆனால் அதை நிறைவேற்றுவதுதான் கஷ்டமாக இருக்கிறது. 'தியாக' மனப்பான்மையை மெய்யுறுத்திய என் குருநாதர் என்னிடம் மற்றொரு விஷயத்தையும் கூறினார். அது என்னவென்றால் என் வாழ்நாட்கள் முடிவடைவதற்குள் தகுந்த பாத்திரம் ஒன்றைத் தேடி அவரிடம் தியாகத்தின் மேன்மையை விளக்கி அவரை அதைப் பின்பற்றும்படி செய்ய வேண்டும். இதற்கான தகுதி வாய்ந்த மானிடரை நான் தேடித்தேடி அலைகிறேன். கடைசி மூச்சுவரை தியாக உணர்ச்சியை மறக்காமலிருக்கக் கூடியவர் ஒருவராவது எனக்குக் கிடைக்கவில்லை." வார்த்தைகள் துயரம் தோய வெளி வந்தன.

"இதென்ன பெருங்குறை? உங்களுக்கு வாரிசாக இன்றிலிருந்து இம் மனப்பான்மையை நான் ஏற்றுக் கொள்கிறேன். குழந்தை முதல் நான் உங்கள் பொறுப்பில் வளர்ந்தேன். என் சுகத்தில் சதா பங்கு கொண்ட தங்களுக்கு இது நான் செய்யும் கைம்மாறாக இருக்கட்டும். தங்கள் மனம் அமைதி அடையட்டும்" என்றாள் கமித்திரை. அவர் அன்புக்குத் தான் பட்ட கடனை இதன் மூலம் நிவர்த்திக்கலாம் என்பது அவள் எண்ணம்.

"யோசியாமல் சட்டென ஏற்றுவிட்டாயே, அம்மா! இதை நிறைவேற்றுவதில் எவ்வளவு கஷ்டங்கள் உண்டென்பதை நீ அறியாயோ? மேலும் நீ பெண். அன்பையும் பாசத்தையும் குழைத்துப் பிரமன் பெண்ணின் மனத்தைச் சமைத்திருப்பான்."

"இருக்கட்டுமே! கொடுத்த வாக்கை நான் திரும்பிப் பெற விரும்பவில்லை. இக்ஷ்வாகு வம்சத்தில் புகுந்துவிட்ட நான் அவர்களைப் போலவே உயிரைக் கொடுத்தாவது கொடுத்த வாக்கை நிறைவேற்றுவேன்."

முன்பின் யோசியாமல் உறுதி மொழி அளித்து விட்டாள் கமித்திரை. விஷ்ணுபாலரும் மனத்தில் சற்று நிம்மதி கண்டார்.

விஷ்ணுபாலர் சென்ற மறுநாள் தசரதர் அரண்மனைக்குத் திரும்பிவிட்டார். கேகய தேசத்து மருமகளாக அவர் மாறிவிட்டதை அறிந்து, எழிலோவியமான கைகேயியைக் காண நகர மக்கள் அனைவரும் அரண்மனையை நோக்கி விரைந்தனர். கௌசல்யை மனங்குன்றி உட்கார்ந்துவிட்டாள். கமித்திரையோ அதிசயித்து நின்றுவிட்டாள்.

* * *

"அக்கா, எழுந்திருங்கள். மாலை நேரத்தில் இவ்விதம் படுத்திருப்பது அழகல்ல" கமித்திரை கௌசல்யையைத் தேற்றிக் கொண்டிருந்தாள்.

"இல்லை, கமித்திரை. இந்த அவல வாழ்வை நினைத்து என் மனம் தவிக்கிறது. நீ இந்த இல்லத்துக்கு வந்தபோது கூட அரசர் என்னை இவ்வளவு அலட்சியம் செய்ததில்லை. கைகேயி வந்த பிறகு அரசர் நம்மை ஒரு பொருட்டாகவே மதிப்பதில்லை" என்று கௌசல்யை படபடத்துக் கூறினாள்.

"அக்கா, இதில் கைகேயியின் தவறு இல்லை. அவள் நம்முடன் அன்போடுதான் பழகி வருகிறாள்!"

"மெய்தான், கமித்திரை. ஆயினும் அரசர் நம்மிடம் பராமுகமாக இருப்பது என் மனத்துக்கு வேதனை அளிக்கிறது."

"அக்கா, அவர் மகிழ்ச்சியே நம் மகிழ்ச்சி எனக் கொள்வோமே. கைகேயியோடு கூடி வாழ்வதில் அவர் இன்பம் காண்கிறார். அவர் இன்பத்தில் நாமும் பங்கு கொள்வோமே!"

இதற்குள் தசரதரே அவ்விடத்துக்கு வந்தார். கமித்திரை அங்கிருந்து மெல்ல நழுவினாள். 'கௌசல்யையோ கணவருடன் பேசத் துடிக்கிறாள். அவர் தாமாக வந்திருக்கும் வேளையிலாவது சற்றுப் பேசி ஆனந்திக்கட்டுமே!' என்னும் பெருநோக்கில்.

"கமித்திரை!"

தசரதர் கூப்பிட்டும் காதில் விழாததுபோல் கமித்திரை மறுபக்கம் சென்றுவிட்டாள்.

கமித்திரை மெதுவாக மனத்தைப் பக்குவப்படுத்திக்கொண்டு விட்டாள். விஷ்ணுபாலருக்குக் கொடுத்த வாக்கு அவளுக்கு உதவியது. கணவரின் இன்பமே தன் இன்பம் எனக் கொண்டாள். கணவரைக் கைகேயிக்காகத் தியாகம் செய்ய முன் வந்தாள். ஒரொரு சமயம் தானாகவே அவர்கள் சந்திப்புக்கு வழி தேடித் தந்தாள். தியாக உணர்ச்சி அவள் மனத்துக்கு நிம்மதி அளித்தது. அந்த நிம்மதிக்குக் கைகேயியின் அன்பும் உதவியது. கைகேயி எல்லோரிடமும் சமமாகப் பழகினாள். அரசர் எப்பொழுதாவது கமித்திரையையும், கௌசல்யையையும் சந்திக்க வருவார். அந்தச் சந்திப்பை




யும் ஒரோரு சமயம் கௌசல்யைக்காக விட்டுக் கொடுத்து விடுவாள் சுமித்திரை. விஷ்ணுபாலருக்கு அவள் அளித்த வாக்கு மற்றவர் மகிழ்ச்சியில் இன்பம் காண வழி வகுத்துக் கொடுத்தது.

* * *

புத்திரகாமேஷ்டி யாகம் மூலம் அருந்தவப் புதல்வர்களைப் பெற்றுவிட்டார் தசரதர். மற்ற இரு ராணிகளுக்கும் ஒவ்வொரு புதல்வன் பிறந்தபொழுது பாக்கியவதி சுமித்திரைக்கு மட்டும் கண்களின் கருமணிகளென்ன இரு புதல்வர்கள் பிறந்தனர். குழந்தைகள் இருவருக்கும் வயது வந்ததும் தியாக உணர்ச்சியின் பாலைப் புகட்டினுள் சுமித்திரை. சேவாகுணத்தின் கல்வியைக் கற்பித்தாள். அன்னையின் உபதேசத்தின் பலன் பூரணமாக இலக்குவன், சத்ருக்னன் ஆகியோர் மீது விழுந்தது. தியாக பிம்பங்களாகக் கொழுந்து விட்டுப் பிரகாசிக்கத் தொடங்கி விட்டனர் இருவரும். இருவருக்கும் விவாகமாகிப் பூமி புகழும் மனைவிகளும் கிடைத்தனர். இனி கவலைக்கு இடமில்லை. இதோ, நாளை அரண்மனையில் ரகுநந்தனுடைய பட்டாபிஷேக வைபவத்தில் பங்கெடுக்க வேண்டும். பொழுது விடியும் நேரத்தில்......

சுமித்திரை தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள்.

''அ....ம்மா, அ....ம்மா !'' ஓடோடி வந்த ஊர்மிலை பதற்றத்துடன் காணப்பட்டாள்.

''என்னமா, என்ன? ஏன் இந்தப் பதற்றம்?''

''அம்மா, விஷயம் முற்றிவிட்ட பிறகும் உங்களுக்கு இதுவரை சமாசாரம் எட்டாமலிருப்பது அதிசயமே. அரசரை நீங்கள் அவர் போன வழி விட்டதன் காரணமாக மாபாதகி கைகேயியின் வலையில் சிக்கி எல்லாவற்றையும் கெடுத்து விட்டார்...''

''சீ, சும்மா இரு. கைகேயியை 'மாபாதகி' என்று சொன்ன வாயைச் சுட்டுவிடுவேன், ஜாக்கிரதை !''

''அம்மா, உங்கள் வெகுளித்தனம் பரிதாபத்திற்குரியது'' என்று கூறிய ஊர்மிலை பட்டாபிஷேக வைபவம் நின்றுபோன கூற்றைஆதியோடந்தமாக எடுத்துரைத்தாள்.

அவள் கூறியதைச் சுமித்திரை முதலில் நம்பவில்லை. பிறகு மேற்கொண்டு வந்த ஓலங்கள் அவளை நம்ப வைத்தன. அப்பொழுதும் அவள் தன் கணவரை எதிர்க்க ஒப்பவில்லை.

''அம்மா, ராணி கௌசல்யையின் நிலை பரிதாபத்துக்குரியதாக இருக்கிறது. அவர் மூர்ச்சித்த நிலையில் இருக்கிறார். பயங்கரமான காட்டினூடே மகனுக்கு யாது தீங்கு நேருமோ என்று அனலில் விழுந்த புழுப்போல் துடிக்கிறார். இராமன் கூடவே சீதையும் புறப்பட்டு விட்டாள்...''

''ஆம், சீதை பிடிவாதக்காரி. இராமனை விட்டுப் பிரியமாட்டாள். பாவம், இராமன் தன்னையும் காப்பாற்றிக் கொண்டு சீதையையும் பாதுகாக்க வேண்டும்....இதற்கு என்ன செய்வது? எனக்கும் புரியவில்லை. பித்ருவாக்கிய பரிபாலனத்திற்காக இராமன் வனம் போயே தீருவான்.'' சுமித்திரை குழம்பித் தவித்தாள். விதியின் போக்கை என்னவென்று கூறுவது?

ஊர்மிலை மெதுவாகச் சுமித்திரையின் அருகில் வந்தாள். ''அம்மா, மற்றொரு விஷயம் தெரியுமா ?'' என்று மெல்லக் கேட்டாள்.

என்னவென்ற பாவனையில் சுமித்திரை அவளை ஏறிட்டு நோக்கினாள்.

''தங்கள் மகன் இலக்குவனும் இராமனுக்குப் பாதுகாப்பாகப் புறப்படத் தயாராகிவிட்டார். தங்களிடம் அனுமதி கோர வருவார்!''

சட்டென்று சுமித்திரையின் மனத்தில் விழிப்புக் கொடுத்தது. ஒரு பிரச்னை தீர்ந்தது போன்ற பாவம் அவள் முகத்தில் திரையிட்டது. ஆம், இலக்குவனும் உடன் சென்றால் கௌசல்யையின் மனத்தில் சற்றே சாந்திபிறக்கும். இராமனுக்கும் உதவியாக இருக்கும். இவ்விருவருக்காகவும் கண்ணிமைபோல் பாதுகாத்து வந்த தன் மகனை அவள் தியாகம் செய்ய வேண்டும். விஷ்ணுபாலரின் உருவமும் அவருக்குத் தான் கொடுத்த வாக்குறுதியும் கண்முன் தோன்றின. விஷ்ணுபாலர் தமது மகனைத் தியாகம் செய்ததுபோல் இன்று அவள் தன் மகனைத் தியாகம் செய்ய வேண்டிய சந்தர்ப்பம் வந்துள்ளது. இம்மாதிரிச் சந்தர்ப்பங்களைப் பயன்படுத்தி இன்பம் காணுவதாக அவருக்கு அவள் வாக்கும் கொடுத்துவிட்டாள்.

அப்பொழுது அங்கு இலக்குவனே வந்துவிட்டான். உடனே சுமித்திரை மகனை அணைத்து உச்சி முகந்தாள். ''அப்பா, இலக்குவா ! சுகமாகப் போய் வா. இனி இராமன் உன் தந்தை. சீதை உன் தாய். சுகமாகத் திரும்பி வாருங்கள்!'' என்று ஆசீர்வதித்தாள்.

கௌசல்யை சுமித்திரையிடம் ஓடோடி வந்தாள். ''சுமித்திரை !'' என்று பெருங் கூச்சலுடன் அவளை அணைத்துக் கொண்டாள்.

''சுமித்திரை, என் உயிர் இன்னமும் உடலில் தங்குவதற்கு ஒரே ஒரு காரணம் உண்டு. இராமன் மட்டும் வனத்திற்கு ஏகி இருந்தால் அவன் நிச்சயமாக உயிருடன் திரும்பமாட்

# கவர்ச்சியுள்ள அழகான

## கான்கிரீட் வீடுகளை

## ஏசிசி அல்லது சங்கர் பிராண்டு ஸிமெண்ட்

## கொண்டு கட்டுங்கள்



கான்கிரீட் சுவர்கள், கான்கிரீட் தளம் மற்றும் கான்கிரீட் கூரைகளால் ஆன வீடே, பக்காவாக அமைந்த வீட்டிற்குள்ள முக்கிய மூன்று அம்சங்கள் கொண்டவையாகும். முதல அம்சம் சிக்கனம்: அதாவது முதலீடு செலவு மிதமானதே, தவிர பராமரிப்புச் செலவும் குறைவு. தீ விபத்தின்றிப் பாதுகாப்பு: காரணம் கான்கிரீட் எரியாது. உறுதியானது: ஏனெனில் கான்கிரீட்டின் மூல குணமே வலுமையாகும்.



**நிலைத்திருக்கும் ஆக்க வேலைக்கு ஏசிசி அல்லது சங்கர் பிராண்டு ஸிமெண்ட் உபயோகியுங்கள். இவை கண்ட்ரோல் விலையில் ஏராளமாகக் கிடைக்கின்றன.**

* உங்கள் கட்டிட பிரச்னைகளைத் தீர்க்க எங்கள் இலவச யோசனைக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: தி கான்கிரீட் அசோஸியேஷன் ஆப் இந்தியா, 9, மவுண்ட் ரோடு, மதராஸ்.




தி ஸிமெண்ட் மார்க்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா பிரை. லிட்.
தி அஸோஸியேடெட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி இந்தியா ஸிமெண்ட்ஸ் லிமிடெட்

SISTA'S-CHI-326-TAM

டான் என்று உயிரை விட்டிருப்பேன். இலக்குவனும் போயிருப்பதால் அவன் அரவணைப்பிலும், பாதுகாப்பிலும் என் இராமனும் சீதையும் சுகமாகத் திரும்புவார்கள் என்ற ஒரே நம்பிக்கைதான் உயிர் வாழ எனக்கு வழி காட்டுகிறது. ஆனால் சுமித்திரை, எங்களுக்காக உன் மகனைத் தியாகம் செய்ய உன் மனம் எப்படியடி துணிந்தது? இந்தத் தியாகப் பண்பாட்டை எங்கிருந்தடி கற்றாய்? என் மனத்துக்கு ஆறுதல் அளிக்கும்முறையில் மகனை அனுப்பி விட்டாயே சுமித்திரை, உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!'' கதறித் துடித்தாள் கௌசல்யை. சுமித்திரை மானசீகமாக விஷ்ணுபாலரை வணங்கினாள். பிறகு கௌசல்யையைச் சமாதானம் செய்து அனுப்பினாள்.

பிறகு, கணவனைப் பிரிந்திருக்கும் மருமகள் என்ன செய்கிறாளோ என்ற சந்தேகம் எழுந்தது. அவளைப் பார்க்க ஓடினாள்.

''ஊர்மிளை...''

''அம்மா, கவலை வேண்டாம். உங்கள் அடிகளைப் பின்பற்றித் தியாகத்தின் உயர்ந்த பொருளைக் கொள்ளத் துணிந்து விட்டேன்.''

சுமித்திரை மருமகளை இறுக அணைத்துக் கொண்டாள்.

இதன் பிறகு பல நிகழ்ச்சிகள் நடந்து விட்டன. தசரதரின் மரணத்துக்குப் பிறகும் தன் துயரத்தை உதட்டினுள் அடக்கிப் பலரைத் தேற்றும் பொறுப்பைச் சுமித்திரை ஏற்றாள். பரதன் பராமுகமாக இருந்தபோது மாண்டவியையும் பாதுகாத்தாள். பரதனுடன் வனம் சென்று இலக்குவனைக் கண்டபோதும், அவனிடம் அதிகம் நெருங்காமல் பாசத்துக்கு இடமளிக்காமல் இருந்தாள். இதோ பரதர், பாதுகைகளை வைத்துப் பட்டாபிஷேக வைபவத்தை முடித்து விட்டார்.

சுமித்திரை தன் அறையில் இருந்தாள். அந்நேரம் அறையில் நிழலாடியது. நடைப்பிணமாகக் கைகேயி தள்ளாடித் தள்ளாடி வந்து நின்றாள். அவள் இன்றுதான் தன் புத்திரனை உணர்ந்தாள். தன் தவற்றை உணர்ந்தாள். கருணைதேவியின் கையில் இன்று அவள் அடைக்கலம்.

''வாம்மா, கைகேயி!'' சுமித்திரை மனப்பூர்வமாக அவளிடம் அனுதாபம் காட்டினாள்.

''அக்கா, என் வாழ்வு பாழாகி விட்டது!''

''அப்படிச் சொல்லாதே. எல்லாம் விதியின் செயல்.''

''இல்லை, என் மனம் சமாதானம் அடையவில்லை. என் வயிற்றில் பிறந்த மகனை நான் அறியவில்லை. 'அன்னை' என்ற பதத்தை அர்த்தமற்றதாகச் செய்துவிட்டேன். மகனை முற்றிலும் அறிந்த உங்கள் பாத ஸ்பரிசத்தால் என் பாபங்கள் தீரட்டும்'' சுமித்திரையின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள் கைகேயி.

''கைகேயி, மனத்தை வீணாக அலட்டிக் கொள்ளாதே. நந்திக்கிராமத்தில் குடியேறி விட்ட உன் மகனின் நலனைக் கவனி.''

''அக்கா, அந்தப்பாக்கியம் எனக்கு இனி கிட்டாது. ஒரு சிறு யாசகத்துக்காகவே நான் இங்கு வந்தேன். ஒரு மகனை இராமனுக்காகத் தந்து விட்ட உங்களிடம் மற்றொரு மகனையும் யாசிக்க வந்து விட்டது என் தவறு தான். ஆயினும் வேறு வழி இல்லை. என் மகனின் நலன் உங்கள் மகனின் கையில் இருக்கிறது. சத்ருக்னனை எப்பொழுதும் பரதனுடைய சேவையில் தாங்கள் அமர்த்த வேண்டும். இதுவே என் கோரிக்கை. இதன் காரணமாகச் சத்ருக்னன் எப்பொழுதுமே உங்கள் அருகில் இல்லாமலிருக்கும்படி நேரிடும். என்றாலும் ஒரு அன்னையின் நெஞ்சைத் தாங்கள் அறிவீர்கள். பரதனிடம் என் பாசம் விடாது. ஆகையால் என் பொருட்டுச் சத்ருக்னனை இச்சேவையில் அமர்த்த வேண்டும்.''

சுமித்திரையின் மனம் உவகையால் நிரம்பியது. தன்னுடைய மற்றொரு மகனால், மற்றொரு தாய்க்கு நிம்மதி! இலக்குவனை காட்டுக்கே அனுப்பி விட்டவளுக்குச் சத்ருக்னனைப் பரதனுடைய சேவையில் ஈடுபடுத்துவது கஷ்டமாகத் தோன்றவில்லை. இரண்டு கண்மணிகளைப் பெற்றாள். இருவரையும் பிறர் இன்பத்துக்காக அர்ப்பணித்து தான் அதில் இன்பம் காண முயன்றாள்.

பதினான்கு வருடங்கள் பதினான்கு யுகங்களாகக் கழிந்தன. இராமர், சீதை, இலக்குவர் மூவரும் திரும்பி விட்டனர். கௌசல்யை முதலாவதாக இலக்குவனைத்தான் அணைத்து ஆசீர்வதித்தாள்.

• • •

அயோத்தியின் அரண்மனையில் இன்று நிசப்தம் பரவிக் கிடந்தது. அனைவரும் சோக நித்திரையில் தவித்தனர். சுமித்திரையின் அந்திம தினம் நெருங்கி விட்டது. இலக்குவனின் மடியில் அவளது தலை இருந்தது. சத்ருக்னன் அவளது பாதங்களைத் தாங்கிக் கொண்டிருந்தான். இராமனும், பரதனும் அருகில் அமர்ந்திருந்தனர்.

''ஊர்மிளை!''

மெல்லக் கூப்பிட்டாள் சுமித்திரை.

ஊர்மிளை நீர் தோய்ந்த கண்களுடன் அருகில் வந்தாள். ''ஊர்மிளை, விஷ்ணுபாலர் என்னிடம் ஒப்படைத்த தத்துவத்தை என் வாரிசாக நீ ஏற்றுக் கொள்ள வேண்டும், அம்மா! பதினான்கு வருடங்கள் கணவரைப் பிரிந்து வாழ்ந்த உன்னிடம் அச் சக்தி இருக்குமென்பது என் நம்பிக்கை. உன்னுடையது என்ற பொருள் எதுவாயிருப்பினும் சரி, அதன் காரணமாக மற்றவர்களுக்கு மகிழ்ச்சியோ, லாபமோ இருக்குமெனில் அதைத் தியாகம் செய்ய நீ தயாராக இருக்க வேண்டும். உன் மாமிக்கு நீ செய்யும் சிறு உபகாரமாக இது இருக்கட்டும்...'' என்றாள் சுமித்திரை.

பிறகு விஷ்ணுபாலரின் சித்திரத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவர் அவளுக்கு முன்பே இறைவனடி சேர்ந்து விட்டார். அவருக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றி விட்ட அவள், 'தியாகம்' என்னும் சொல்லின் மெய்ப்பொருளை அறிந்து விட்டதன் காரணமாகப் பாசம், பந்தம் முதலியவற்றில் சிக்கவில்லை. இதன் பலனாக ஸ்ரீமந் நாராயணனின் திருவுருவம் அவள் கண்களுக்கு நன்றாகப் புலப்பட்டது. அதோ, அவளை ஏற்றிச் செல்லத் தேவரதம் மின்னொளி பாய்ச்சியபடி வருகிறது! சுமித்திரையின் முகத்தில் ஒரு பிரகாசம் தோன்றியது.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras-10
Managing Editor: T. Sadasivam

# எவ்வளவு சீக்கிரம் சுகமாயிற்று!

**ஈனோ** சாப்பிட்டால் சீக்கிரமே
சுகம் அனுபவமாகும்!




மிதமாக பேதி ஏற்பட விரும்பினால் காலி வயிற்றில் சிறிது பெரிய டோஸ் ஈனோ அருந்தினால் போதும்

மந்த உணர்ச்சியும், உற்சாகமின்மையும் ஏற்படும்பொழுதும், மிதமிஞ்சி புசிப்பதாலோ அல்லது வயிற்றுக் கோளாறுகளினாலோ அவதிப்படும்பொழுதும் ஒரு கிளாஸ் தளதளக்கும் ஈனோ சாப்பிட்டால் போதும்! ஈனோ சீக்கிரமே வேலை செய்ய ஆரம்பிக்கும். அது வயிற்றிலுள்ள அமித அமிலங்களை அடக்கி, தேக உஷ்ணத்தைத் தணித்து, உங்களை மீண்டும் புத்துணர்ச்சியும் உற்சாகமும் பெறச் செய்யும்!

அருந்துவதற்குச் சுகமான ஈனோ அமித அமிலங்களை அடக்கும் சக்தி வாய்ந்தது. அது சிறு குழந்தைகள் முதற்கொண்டு பெரியவர்கள் வரை குடும்பத்தில் யாவருக்கும் ஏற்றது. வயிற்றுக்கோளாறுகள், அஜீரணம் மற்றும் உற்சாகமின்மையிலிருந்து துரித நிவாரணம் பெற ஈனோ சாப்பிடுங்கள்!

**ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'** உங்களை தென்புடன் வைக்கும்!

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற வார்த்தைகள்
ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்

குரூப் லாபரேட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon